பேர்கொண்ட மயிலைத் தியாகரா யக்குரிசில்
பெட்புறு தவத்தில்வந்தோன்
பேசுறு மசுரர்குல காலனு முருகவேள்
பிஞ்ஞக னுதற்கண்வந்தோன்
நேர்கொண்ட வருள்பெறுஞ் செங்குந்தர் மரபெனு
நிலத்தவ தரித்தவழகன்
நிறிலக்கு மணசாமி முதலியா ரச்சினி
னிகழ்த்துவித் தனனதனையே"

## திரிசிரபுரம் வி. கோவிந்தபிள்ளை அவர்கள் செய்தது

"செங்குந்தர் பிள்ளைத் தமிழ்த்யாக ராய சிரோரத்தினந்
தங்குந் தனிமயி லைப்பதி வாழ்வு தழைத்துநின்று
பொங்குந் தவலட் சுமண சுவாமிப் புனிதன்புகன்
றெங்குந் தழைக்க வெழுதா வெழுத்தி லிசைத்தனனே"

"பாருலவு திருமயிலை யூரிலுறை செங்குந்தர்
பாரகுல திலகதீரன்
பண்புறு தியாகரா யக்குரிசில் செய்தவப்
பாக்யசுத னேக்குசுகுணன்
காருலவு கையனுரை மெய்யனுறு துய்யன்
களங்கமில் லாதசந்த்ரன்
கன்னியர்க ளுன்னவொளிர் செவ்விய னடங்காத
கருதலரை வென்றதிறலோன்
ஏருலவு நீபமலர் மார்பனிரு கட்கமல
விருநிதிக் கிழவனுரவோன்
இலட்சுமி விலாசன திலட்சண வுலாசனணி
லட்சுமண சாமிமகிபன்
சீருலவு செங்குந்தர் பிள்ளைத் தமிழ்ப்பனுவ
றெள்ளிதி னுணர்ந்துகொள்ளச்
செவ்வைதிக ழச்சிலா ராய்வித் தொழுங்கிற்
றிருந்தப் பதித்தனனரோ"

கோமளபுரம் இராசகோபாலபிள்ளை அவர்கள்
செய்தது

"அங்குர் தரணி மிசையுமுரா ணற்றுந் திறல்வா ளவுணர்குழு
வாகும் பெருங்கா ரிருட்படல மடைய வாரி வாய்மடுத்து
ஐங்குர் தரணி தனையனைய நுனைவேற்படைகைக்கொளுமண்ணல்
நோன்மை சான்ற துணைவரென நுவலொன்ப தின்மர்மர பினராஞ்
செங்குர் தரணி சீர்த்திநனி தெரிக்கும் பிள்ளைக் கவிதைதமிழ்ச்
செந்நாவலர்கோன்கோவிந்தச்செய்யோன் றன்னுல்வழுஉக்களைந்து
சங்குர் தரணியலார் முத்தந் தயங்கும் பழன மயிலைவரு
தனத னிலக்கு மணக்குரிசி றகுமச் சியற்று வித்தனனே"

செய்யூர் செ. சந்தியப்பமுதலியார் அவர்கள்
செய்தது

"ஆதிதனிற் சிவபெருமான் புதல்வர்சேனைக் கதிபர்நங்க
ணவவீரர் மரபா ரென்றுஞ்
சாதியர்செங் குந்தரென் பதற்குச்சான்று சகலசிவத்
தலங்கடொறு மிவர்கள் சென்று
கோதிலச்சே னைத்தலைவர் வேடம்பூண்டு குமரவே
ளுடன்கூடி யின்று காறும்
பூதலத்திற் சூரனைச்சம் மாரஞ்செய்யும் புகழ்பெற்ற
வுற்சவமே போதுமாதோ"

"கதிரவனைக் கண்ணாடி யான்மறைப்ப னென்பதொரு
கதையைப் போலப்
புதியதொரு நூல்செய்து கைக்கோளர் புகழையெல்லாம்
பூண்டு கொண்ட
மதியிலா தவர்கண்மனம் வாடிவெருஉக் கொண்டோட
மயிலை யென்னும்
பதியிலக்கு மணக்கோன்செங் குந்தர்பிள்ளைத் தமிழையச்சிற்
பதிப்பித் தானே"

திரு காமுசெட்டியார் அவர்கள்
செய்தது

"ஒருவிடை யடுத்து மிருவிடை யாகியு
முக்கட வுளரி னுக்க வேய்ந்து
மகவேஉ வாகியு மலர்விழி சாத்தியும்

இன்னணம் பற்பல வியைந்து மெய்த்த
திசைமுகற் பயந்தோன் றிகைமுகங் கொளாவொண்
மான மிரக்கம் பொறையிலர் தேறவோ
ஈன நாற்கா லேனமே யாகியுந்
தன்கழற் காணுத் தாணுவாய் நிமிரெழிற்
றற்பர வைம்முகற் றணவாப் பரையின்
பாதச் சிலம்பி னுதரம் பெறவுதித்
தறுமுகற் கெழுதுணை யாயெண் ணரூஉம்
ஒன்பான் றிறனமர் தொண்டியல் பத்தராய்
இறைவனுர் முதலா வுறையொளிர் சங்கமும்
பதினே ருருத்திரர் பன்னிரு வருக்கரைப்
போத யாவும் படைபோத னெனப்புகழ்
தெய்வப் புலமைத் திருவள் ளுவர்துதி
ஒளவை நிரந்தரஞ் சான்றோ ருடைத்தெனப்
பதின்மூன்று தமிழார் பதிநயந் தோங்க
ஈழ முதலொழி நிலம்வியந் தேங்க
நவிறெண் ணீர்வயற் றெண்டைநன் னுட்டில்
திலக முறழ்ந்துகப் பலகில் காஞ்சிவாழ்
செங்குந் தர்மிசைஇப் பொங்கஞ் சிவனுப்
புற்றிடத் துறைய ராக்கடுத் தவன்சொற்
போலி நாவலர் தூற்றிடப் புறந்தமிழ்
வேலி நாவலர் போற்றிடப் புத்தகக்
கூலி நாவலர் குலவிளக் கிணையுயர்வில
இராம லிங்கற் பிணங்குவார் கோளரி
யிராம லிங்கற் பிரியா தேத்துமெய்ஞ்
ஞானப் பிரகாசன் வானண நுவன்ற
வள்ளைத் தமிழ்சேர் பிள்ளைத் தமிழையோர்
அச்சிற் பதிப்பித் திச்சகம் பரப்பினன்
பதத்தோர் விரலின் மிதித்ரா வணற்றெற
வானவர் வானர மாக்கோ லியும்வேண்
டிராமற் கருளிய பராபரச் சிவன்றாட்
சிந்தையோன் மயிலைத் தியாக ராயன்
செல்வச் செம்மலாய்ச் செங்குந்தர் குலத்தோர்
இலக்க மாவுறீஇய விலக்குமண சாமியே"

## பாக்கம் திருஞானசம்பந்தமுதலியார் அவர்கள் செய்தது

"சீர்திகழ் திங்க டிமிலுறு தரங்கப்
பேர்மிகு கங்கைப் புனலுறு செஞ்சடைக்
கோவிட மமர்ந்த கொடியருண் மதலை
பாவல ருடுக்களிற் பைங்கதிர் மதியெனும்
பொய்யா மொழிக்குப் பொருளுரைத் திட்ட
கையீ ராறுடைக் கடம்பனெ டிகலராய்ப்
பேருரங் கொண்டு போரினி னிமிர்ந்த
சூருரப் பொருப்புக டணிபடச் செங்குந்
தம்பிடி யொன்பான் றம்பியர்ச் சார்ந்தே
செம்மயிற் பெருமா டம்மை நசைஇ
அருண்மிக நாளு மடைந்தெக் குலத்தினுந்
தெருளொடுஞ் சிறந்து சீர்த்தித் துசநிறீஇ
வாழ்செங் குந்தர் மரபிற் சிறந்ததொன்
றூழ்கட லுலகி லரிதெனத் தேர்ந்துடன்
அருளொடு நின்றே யம்மர போர்மேற்
பொருளுற வெடுத்துப் பொற்புறு பிள்ளைத்
தமிழினை வியந்தவர் தங்குடி மரபாம்
அமிழ்தென முன்னுணர்ந் தருந்தமிழ் நாட்டிற்
கற்பன வுணர்ந்து' கருதிய வவ்வழி
நிற்பவ ராகவு நினைதொறு நினைதொறூஉம்
இதனிற் சீரிய திலையென நோக்கினோர்
அதனிற் சிறந்த வரும்பொருள் வழியுற
மும்மலந் தன்னை முனைந்தவவ் வாற்றினாற்
கம்மலர் நிருத்தக் காட்சியே காட்சியாக்
கண்டவ னடியரை யண்டியே மகிழ்ந்து
பண்டைய ஞானப் பரவையி லிழிவித்
தாடச் செய்தோ னருளினை யென்றுங்
கூடி யிருக்கக் குறிப்பினை யுணர்த்தினோன்
ஞானப் பிரகாச நற்சுவா மிகளெனு
மாநற் பெயரோ னறைந்தன னந்நாள்

திருமயி லாபுரிச் சீர்ப்பதிக் கபாலிபால்
ஒருமையி னெழுந்த வுள்ளத் தினனாய்
நாடொறுஞ் சென்று நயந்தின் புருகி
வாடுறு வண்ணம் வணங்குபு நின்று
தயாமிக வாழ்த்தித் தண்ணளி யடைந்த
தியாகராய முதலியார் தினனும்
செய்தவப் பயனே திரண் டுருவாகி
வைய மீதினில் வந்ததென் றெண்ணவு
முட்டாட் டாமரை முனிந்திவன் முகத்தை
விட்டா லிடனிலை விமலையென் றெண்ணவும்
இரப்போ ரெனுமளி யினமிவன் கரமே
தரப்போ தும்மெனத் தம்மனத் தெண்ணவுஞ்
சாந்தநன் ஞானிக டாம்பயின் றுலாவப்
போந்தவ னிவனருட் பொதிகையா னெனநற்
குணமொடு பிறந்திலக் குமணச் சாமி
யெனுநற் பெயர்கொண் டிருந்தநல் வள்ளல்
பாற்கட லமுதினைப் பயிலுங் கிருட்டியின்
சேற்சல சரக்கட் செழுபிணைக் குட்டியை
மணந்த\செவ்வேளு மனத்தினி லுன்னு
குணங்கெழு மன்பன் கோதறு குணத்தன்
தம்மர பினிற்குறு மம்மையெல் லாஞ்சொல்
செம்மைநா லேதெனத் தேடமை யத்து
மின்னுற் பாத மென்னத் தோன்றி
மன்னுறு வித்தமிழ் தன்னைக் கண்டுடன்
ஏட்டுப் பிரதி களிற்கைப் பிழைகளை
யோட்டிச் சுத்தமோ டொளிபெறத் திருத்துவித்
தாவருஞ் சிறந்த வச்சில்
தேவரு நயக்கச் செய்திட் டனனே''

'கலித்துறைமாலை' கச்சித் திருவேகம்பர் சந்நிதியில் அரங்கேற்றிய தென்ப. இந்நூலைச்செய்த நாகை முத்துக்குமாரதேசிகர் ஸ்ரீ காஞ்சி ஞானப்பிரகாச மூர்த்திகள் ஆதீன அடியார் குழாத்துள் ஒருவராய் நாகப்பட்டினத்து மடத்தில் வசித்து வந்தவர்.

இப் பெரியாருக்கமைந்திருந்த சிறப்பினை,—

"பெத்த நிலைவிட்டுப் பேரின்ப வீட்டுநிலை
முத்துக் குமரன் முனமடைய—வைத்திட்ட
தேசிகா கச்சித் திருமடத்துள் வாழ்சிவனே
பாச மெனையகலப் பார்"

எனவரும் 'பண்டாரமாலை' யால் உணரப்படும்.

இக் கலித்துறைமாலை பழைய பதிப்பைச் சேர்ந்தது; பதிப்பித்த காலம் கி. பி. 1892. பதிப்பாசிரியர் திருமயிலை தணிகாசல முதலியார்.

'தசாங்கம்' இந் நூலைப் பாடிய சத்திய சந்தர் என்பவரும் ஸ்ரீ ஞானப்பிரகாச முனிவர் அடியார் குழாத்தவரே. இவர் காலத்தில் இவரால் நடந்த அற்புதங்கள் பல என்று முன்னிருந்த பண்டாரச் சந்நதிகள் (என் துறவற ஆசிரியர்) எனக்குக் கூறி சிலவெண்பாக்களையும் எடுத்துக் காட்டுவர். அதனுள்,—

"கச்சித் திருப்பதியுள் கம்பன் திருவருளால்
இச்சித் துரைமாக்க ளின்படைய—பச்சிமத்து
மேகம் பொழிந்து வேண்டு வனவிளைந்து
தாகந் தணிந்திடுமே தான்"

என்ற தொடக்கத்து 'கச்சித்திரு வெண்பா' வினுள் இப் பாட்டு காஞ்சியில் மழைபெய்யப் பாடியதாகும்.

இந்நூல் பழையபதிப்பைச் சேர்ந்ததே ; பதிப்பித்த காலம் கி. பி. 1892. பதிப்பாசிரியர் திருமயிலை தணிகாசலமுதலியார்.

"ஊசல்முதலியன' இந்நூலும் பழையபதிப்பைச் சேர்ந்ததே; பதிப்பித்தகாலம் கி. பி. 1868. பதிப்பாசிரியர் திருமயிலை இலக்ஷு மணசாமிமுதலியார். அவர்காலத்துப் புலவர் பாடிய சிறப்புக்கவி,—

கோமளபுரம் இராஜகோபாலபிள்ளை அவர்கள்
செய்தது

"மருமையிலைக் குழலியர்கண் போல்வா னுங்கண்
மருமையிலை யுகளுமலர்த் தடங்கண் மல்கு
திருமையிலை நகருடையான் கமல மேவு
திருமையிலை வாகளித்த தியாக ராயன்

இருமையிலை தாம்பயனைப் பெறுவான் றந்த
விலட்சுமணப் பெருமான்செங் குந்த ரூசல்
அருமையிலை யிதனினூங் கென்ன வச்சி
லாற்றினன் புலவரவை யேற்றி னனே''

காஞ்சி இராமசாமிநாயுடு அவர்கள்
செய்தது

"தேசுலகுற் றிடநிறை தண்டரளவயற் றிருமயிலைத்
தியாக ராயன்
பேசலகற் றிடமுயன்று வப்பயனு லிலக்குமணப்
பெயரின் வந்தோன்
கூசலகத் துள்ளாதார் கொண்டுகெரந் துறையவளர்
குலச்செங் குந்தர்
ஊசலகத் தூசலெலா மூசலுறப் பதித்திகந்தா
னுவமை மன்னே''

திரு காமுசெட்டியார் அவர்கள்
செய்தது

"பரிதி மதிதீ யிருவிழி யாவுடை
யுரிதி வடனதா ளொருவாப் புலத்தவ
குளத்திரு டபவவிர் களங்கமொண் கந்தரச்
சுந்தர வரனை துன்வல மார்ந்த
ரு கருநிற வண்ண திருவுந்தி பூத்த
முளரித் தவிசின் விளைஇ வேதன்
நிருமா ணஞ்செய் யொருமா ணஞ்சால்
கார்கலித் திரைமோ தார்கலி யுடுத்த
வட்டநே ரவனி யட்டதிக் கும்புகழ்
க0 கிட்டிய வொண்கவி யொட்டக் கூத்தனுந்
தீதணு மாண்பன் கோதறத் தோன்றுபு
பாயிருட் சீக்கும் பானுவோ டலவனைத்
தங்குந்த மரமீண் டெங்குந் துளக்காத்
தகையரென் றிகல்புரிந் திகமீட்டி யெழுபான்
கரு மைதீர் பருவ றெய்வீ கத்துரைத்

தோங்கிட விளக்க மாயுறுஉம் பண்பமர்
செங்குந்தர் தம்மேற் றங்குந் தரமேல்
ஊசல் வாழ்த்துயர் லாலி கட்டிய
மாசின் மங்கள மன்னேற் கடுத்து
வருதோன் றலென வுரைசெயத் தன்குலம்
பழுதின்றி யாய்வித் தெழுதா வெழுத்தில்
இயைஇ வித்திசை யுய்த்தனன் றிசைதொறுந்
தயைபெறு தியாக ராயச் செம்மல்
தந்த சற்குணஞ் சாரிலக் குமணச்
சாமி செங்குந்தத் தோமி லானே"

இந்நூலை மயிலைநாதர் திருமழிசை நாட்டார் விருப்பப்படி கபாலீச்சரத்தில் கி. பி. 1830 ல் அரங்கேற்றி வைத்தாரென்ப; மயிலைநாதர் குமாரதேவர் மடத்தடியவர் என்று கூறுவர்.

இனி, இந்நூற்றிரட்டில் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்ட செங்குந்தவிநாயகர்மாலை, செங்குந்த சிலாக்கியர்மாலை, செங்குந்தவேற்பதிகம், செங்குந்தர்மரபுவிளக்கம், சேனைத்தலைவர்மரபுவிளக்கச்சூறுவளி, செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத்தந்தாதி என்பவை முறையே ஸ்ரீபடம்பக்கநாதன், முத்தமிழ்ச்சூரி கா. வீரபத்திர தேசிகர், திரு குமாரசாமி முதலியார், மாகறல் கார்த்திகேய முதலியார், நரசிங்கபுரம் வீராசாமி முதலியார், திருச்செங்கோடு ஆறுமுகப் பாவலர் முதலியோரால் செய்யப்பட்டனவாம்.

கு - பு. 'செங்குந்த விநாயகர்மாலை' முதல் 'சேனைத்தலைவர் மரபுவிளக்கச் சூறுவளி' ஈறான ஐந்து நூல்களும் பழையபதிப்பைச் சேர்ந்தவை. அச்சுக்குவராதது 'திருக்கைவழக்கத்தந்தாதி' ஒன்றே.

'செங்குந்த விநாயகர்மாலை' ஒற்றியூரான் காலத்தில் பாடி அரங்கேற்றிய தென்பர். ஒற்றியூரான் வல்லான் காவியத்துள் வரும் பன்னிரு வீரருள் ஒருவன் என்க.

'செங்குந்த சிலாக்கியர்மாலை' யுள் வரும் சரித்திரங்கள், பல நூற்கொண்டு உண்மையை ஆராய்ந்தறியவேண்டும். இப்போது

கிடைக்கும் 'அவத்தாரண்யதகனம்' என்னும் 'கவனக்குறிப்பட்டவணை' யுள் இவ் விஷயங் கடா விடையுடன் காணப்படுகிறது; எழுதப்பட்டுள்ள விஷயங்களைக் கவனிக்கத் தக்கதாம்.

'செங்குந்த வேற்பதிகம்' இத் தோத்திரநூல் சோழசிங்கபுர நாட்டில் கி. பி. 1901 - ல் அரங்கேற்றியதாகும்.

'செங்குந்தர் மரபுவிளக்கம்' தமிழ் உலகத்திற்கு 'மொழிநூல்' செய்து வைத்த பெரும்புலவர் திரு கார்த்திகேய முதலியார் அவர்கள் செய்தது. அவர் காலத்திலேயே அவரால் இந்நூல் கச்சிக்கச்சாலை நாயனுர் சந்நதியில் காஞ்சி மகாநாட்டார் தலைமையின்கீழ் கி.பி. 1910-ல் அரங்கேற்றியதாகும். இதன் சிறப்புக்கவி,—

பேறை சேகநாதப்பிள்ளை அவர்கள்

செய்தது

"சீர்கொண்ட காஞ்சிசூழ் தொண்டைமண் டலமார்ந்த
செங்குந்த ராமரபினோர்
திறலினுற் பெறுவீர ஜெயகுண விசேடமும்
செங்கமல கரவண்மையும்
செப்புதந் தொழிலின்வரு மிழைநகைப் பொருளினுற்
சேர்ந்தநா மச்சிறப்பும்
திகழ்கின்ற கருவிகளின் மகிமையு மியற்கையாம்
சிவபக்தியின் பெருமையும்
கார்கொண்ட பொன்மதிற் கச்சபேசாலைய
கயிங்கரிய முதலதொண்டும்
கரிவரத னிரதோற்ச வத்திலே தண்மலர்க்
கண்ணிதாங் குறுமாட்சியும்
கண்டவிவை யாவையு மொருங்குணர்ந் தங்கவை
களைத்தமிழினி ருரமாகக்
கட்டளை விராங்கலித் துறையி னனிபலவுங்
கவின்பெறச் செய்தளித்தான்
பேர்கொண்ட வெண்ணுன் கெனுந்தலந் தனிலரிய
பெரியதிரு மாகறலின்வாய்ப்

பெட்புற்ற வித்யார்த்தி கட்கினிய செந்தமிழ்
பிறங்குவித் திடவெண்ணியே
பெரிதுவப் பாற்கலா சாலைநிலை நாட்டுவான்
பேசுறு முயற்சிகொண்ட
பெருகு தமிழ்வித்துவா னைந்திலக் கணமுமே
பிழைதபுத் தோதுவிப்போன்
தார்கொண்ட குவளையணி மார்பினுன் றொண்டைமண்
டலமுற்ற வேளாண்மையான்
சலியா முயற்சியான் பொலிவுள்ள சைவசித்
தாந்ததூய்மைய மரபினன்
சத்தியந் தவிராத மொழியினு னருளே
ததைந்தொழுகு தண்விழியினுன்
சரவணக் கார்த்திகே யப்பெயரினு னுலகு
சாற்றுநன் னுவலனரோ"

'சேனைத்தலைவர் மரபுவிளக்கச் சூறாவளி' பாடிய வரலாறு அந்நூல் உரைச்செய்யுளாலும், பாச்செய்யுளாலும் அறியற்பாலது. இவ்வாதம் நடந்தகாலம் சாலிவாகன சகனு 1773. இந்நூலாசிரியர் திருவருட்பிரகாச வள்ளலார் மாணுக்கராவர். இதன் சிறப்புக்கவி,-

காஞ்சி இராமலிங்கதேசிகர் அவர்கள்
செய்தது

"வளங்கொளச்சே னைத்தலைவர் மரபுவிளக் கச்சூறு
வளியென் றோர்நூல்
விளங்குநர சிங்கபுரம் வீராசா மிப்புலவன்
விளம்பி னுற்
குளங்கொள்விழிப் பெருமான்றன் கோயிலினுட் பலிபீடக்
குலவைப் புற்றே
உளங்கொளுநற் குணமுடையோர் பிறர்க்கைய மறவுரைக்கு
முரையின் மாதோ"

திருவூறல் விநாயகதேசிகர் அவர்கள்
செய்தது

"பேரார்செங் குந்தர் பெருமை மிகப்பிர காசிக்கவே
தாராருஞ் சேனைத் தலைவர் மரபு விளக்கத்திற்குச்

சீரார்சூ ருவளி செய்தா'னெழினர சிங்கபுரம்
வீரா சுவாமிக் கவிவாணன் யாரும் வியப்புறவே"

"செய்க்கமலஞ் சூழுநர சிங்கபுரம்
வாழ்வீரா சாமி வாணன்
மெய்க்கந்தர் புராணமுத லுணர்ந்தறிவாற்
செங்குந்தர் மேன்மை யோங்கத்
தக்கசே னைத்தலைவர் மரபுவிளக்
கச்சூரு வளிதந் தானல்
கைக்கனியா மலகமெனக் கவிஞரெலாங்
கண்டுமனங் களிக்கத் தானே"

களந்தை வேதகிரிமுதலியார் அவர்கள்
செய்தது

"பூதலத்திற் செங்குந்தர் நவவீரர்
மரபென்றே புராண வாறு
ஓதுநர சிங்கபுரம் வீராசா
மிப்புலவ னுரைமெய் யென்றே
ஆதிசிவன் மழுவெடுத்தா னணிதிருமா
னெய்யினிற்கை யஞ்சா திட்டான்
போதுரையு நான்முகனு நித்தியமாச்
சத்தியத்திற் புகுந்திட் டானே"

சென்னை கேசவவுபாத்தியாயர் அவர்கள்
செய்தது

"தாட்கொண்மலர்ப் பொய்கைநர சிங்கபுரம்
வாழ்வீரா சாமி வாணன்
வாட்கொள்சே னைத்தலைவர் மரபுவிளக்
கச்சூரு வளியென் றோர்நூல்
ஆட்சியா னனுபவத்தா னறிவுடையோ
ருணர்த்தியவா கமத்தான் மற்றைக்
காட்சியா னுலகறிஃ துண்மையெனச்
சாட்சிபெறக் கழறி னனே"

'செங்குந்தவேலவர் திருக்கைவழக்கத்தந்தாதி' திருச்செங்கோடு அர்த்தநாதர் சந்நதியில் கலியுகாதிஞூ 4900 – ல் அரங்கேற்றியதாம். இவ் வந்தாதி பாடிய ஆறுமுகப் பாலர் இலக்கியத்தில் வல்லவரென்று அவர் வாக்கால் தெரிய வருகிறது. பாட்டுகள் கூறும் சரித்திரங்களுள் சில சரித்திரம் விளங்கவில்லை. ஆயிரக் கணக்கான பிழைகளுடன் கிடைத்த ஏட்டுச்சுவடி ஒன்று கொண்டு இந்நூல் ஒருவாறு செப்பஞ் செய்யப்பட்டது.

இந் நூற்றிரட்டில் கடைசியாகச் சேர்க்கப்பட்ட செங்குந்தகுலமாட்சி திருவாரூர் சபாபதி முதலியார் அவர்களால் தொகுக்கப்பட்டது.

கு – பு. 'செங்குந்தகுலமாட்சி' பல நூல்களுள் மறைந்து கிடக்கும் பாடற்றொகுதியாம். இப் பதிப்பில் முற்றும் அத்தொகுதி இடம் பெறவில்லை. இதனைத் திரட்டிப் பிரதிசெய்து வைத்திருக்கும் 'செங்குந்த வித்துவ ஜனசேகரர்' அவர்கள் அரிய பல சரித்திரக் குறிப்புக்களுடன் அதனைத் தனியாக வெளியிடுவார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது.

செங்குந்த மக்கள் பிரிவு வழக்கம் ஒழுக்கம் அறிவு ஆற்றல் கொடைமுதலியவற்றை இந்நூற்றிரட்டு அங்கங்கே சுருக்கியும் விரித்தும் கூறுகின்றது; ஆனால், ஒரு தொகுப்பாக அதனைக் கூறவில்லை. அதனை நான் பல மேற்கோள்களுடன் செங்குந்தர்சரித்திரத்திரட்டு என்னும் பெயருடன் எழுதி அச்சிட முயன்று வேலைசெய்து வருகின்றேன். இப் பதிப்புரையில் அச்சரித்திரத் தொகுதியைச் சேர்த்துவிடுவது சாலவும் பொருத்தமாகும்; ஆயினும், கால நீட்டித்தலையும் ஒருவர் கைப்பொருளே இத்திரட்டிற்கும் மிகுதியாக எதிர்பார்க்க நேருதலையும்நோக்கி அவ்வாறு செய்தேனில்லை.

இந்நூற்றிரட்டு அச்சிடத்தொடங்கி வருஷம் ஒன்றுக்கு மேலாயிற்று. அச்சிடும்போது ஏடு சம்பந்தமாகவும், சரித்திர சம்பந்தமாகவும் பல ஊர்கள்சென்று வரவேண்டி

யிருந்தது. இந்த யாத்திரைகளில் யான் வேண்டியபடியே எனக்குச் சௌகரியம் செய்துவைத்த ஸ்ரீமான்களுக்குச் செங்குந்தர் என்றென்றும் நன்றி பாராட்டற்பாலர்.

இனி, இங்கே என்னால் எழுதிவந்த தொகுப்புரையுள்ளும், குறிப்புரையுள்ளும் வந்த விஷயங்கள் பல; வாராமல் "மறைப்பெனும் பகைவன்" வாரிக்கொண்ட விஷயங்கள் மிகப்பல. பெரும்பாலும் எழுதவேண்டிய விஷயங்கள் முற்றும் எழுதியே யிருக்கக் கூடும்; சிறு பான்மை அதனுள் வரக்கூடிய விஷயங்கள் விடுபட்டிருக்கவும் கூடும். இவ்வளவு தான் நான் அறிவுடைய மக்களுக்குச் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இது நிற்க, பலவாருகப் பரந்து கிடந்த நூல்களை ஒன்று சேர்த்துச் செங்குந்தர்பிரபந்தத்திரட்டு என்னும் பெயரோடு அச்சிற் பதிப்பிக்கச்செய்து உலகிற் பரப்பிய 'செங்குந்த வித்துவஜன சேகரர்' ஸ்ரீமான் தி. க. ச. சபாபதி முதலியார் அவர்களும், அவர்கள் தமையனார் ஸ்ரீமான் தி. க. ச. கலியாணசுந்தர முதலியார் அவர்களும், இவர்கள் மருகராகிய செல்வச் சிரஞ்சீவி மஞ்சட்கொல்லை தி. மு. அரு. அருணாசல முதலியார் அவர்களும் தீர்க்காயுளும் அஷ்ட ஐசுவரியமும் பெற்று இதுபோன்ற அரிய பெரிய செயல்களை மேன்மேலும் செய்துவர எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவானாக.

'காமாட்சிவிலாசம்'
கீழ்ப்பாக்கம், சென்னை
அட்சயஹு ஆவணிமீ

இங்ஙனம்
காஞ்சி நாகலிங்கன்

# மேற்கோள் நூல்கள்

தொல்காப்பியம்
இலக்கண விளக்கம்
நன்னூல்
திருவள்ளுவர்
பரிமேலழகருரை
நச்சினார்க்கினியருரை
பேராசிரியருரை
திருக்குறள் வெண்பா
சிந்தாமணி
சிலப்பதிகாரம்
கம்பராமாயணம்
உபதேச காண்டம்
கல்லாடம்
சிவரகசியம்
பரதத்துவநிச்சயம்
பரதத்துவநிரூபணம்
மூவர் தேவாரம்
திருவாசகம்
திருவிசைப்பா
திருவந்தாதி
சிவஞானபோதம்
சிவஞான சித்தியார்
சிவப்பிரகாசம்
நம்பியாண்டார் திருவிருத்தம்
திருப்புகழ்
கந்தரலங்காரம்
கந்தரனுபூதி
தாயுமானவர் பாடல்
திருச்செந்தூர் கலிவெண்பா
பெரிய புராணம்
காஞ்சிப் புராணம்
தணிகைப் புராணம்
மதுரைப் புராணம்
கடம்பவன புராணம்
திருவிளையாடற் புராணம்
கந்த புராணம்
கந்தபுராணச் சுருக்கம்
*ஸ்ரீகந்த புராணம்
ஆலவன புராணம்
திருவாரூர் லீலை
செங்குந்தர் புராணம்
கழுகாசல புராணம்
வல்லான்காவியம்
உறந்தைமான்மியம்
சீகாளத்திமான்மியம்
வீரசிங்காசன புராணம்
நவவீரர் நவமணி மாலை
வீரவாகு கட்க மாலை
செங்குந்தர் பரணி
சேனைத்தலைவருலா
சோணாடர் வெண்பா
கைக்கோளர் கலம்பகம்
இரட்டையருலா
தனிப்பாடல்
இரத்தினச் சுருக்கம்
ஒன்பதின்மர் பிள்ளைக்கவி

* இது ஏழாயிரப் பிரபந்தம் என்றும், ஆறாயிரப் பிரபந்தம் என்றும் வழங்கிவருகிறது.

எல்லாஞ் செயற்கு மிடமாகு மென்னெஞ்சே
கல்லாா வெற்பன் கழல்.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# ஈட்டியெழுபது

## கடவுள்வாழ்த்து

கந்தபுராணம், பிரமாண்டபுராணம், திருவாரூர்லீலை, ஏழாயிரப்பிரபந்தம், வல்லான்காவியம் முதலியவற்றுள் ஆங்காங்கே கூறப்படுபவர்களாகிய சோழமண்டலமுதலிகள் என்னும் காரணப்பெயரையுடைய செங்குந்தர் வம்சாவளியும், அன்னோர் வீரதீரத் தன்மையும் எடுத்துக் கூறுவான் புகுந்த கவிச்சக்கிரவர்த்தி, மேலெடுத்துக்கொள்ளும் காப்பியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு, விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

நேரிசைவெண்பா

நாட்டிலுயர் செங்குந்த நாயகர்மீ திற்சிறந்த
ஈட்டி யெழுப தினைப்பாடக்—கோட்டில்
பருமா வரையதனிற் பாரதநூல் தீட்டும்
கரிமா முகன்கழலே காப்பு.

இதன்பொருள். உலகத்திலுள்ளாரால் போற்றப்படுகின்ற மேலான புகழையுடைய செங்குந்தத் தலைவர்கள் மீது, பல சிறப்புகளும் அமைந்த ஈட்டியெழுபது என்னும் பிரபந்தத்தை, யான் பாட, தனது ஒரு கொம்பினால் பருத்துயர்ந்த மேருமலையில் பாரதநூலை எழுதிவைத்த அழகிய யானைமுக விநாயகக்கடவுளினது உபய திருவடிகளே துணையாகும் என்பதாம்.

நாடு என்பது உலகின் மேற்று.
உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு.
உயர்ந்தோராவார் பரமவிருடிகள்.

'நாட்டிலுயர் செங்குந்தர்' எனவே, உலகத்தில் உள்ளோரால் போற்றப்படுகின்ற மேலான புகழை யுடையவர் என வருவித்துரைக்கப்பட்டது.

யாராலும் எழுதுதற்கரிய மகாபாரதநூலைத் தனது ஒரு கொம்பினுல் எழுதி நிறைவேற்றிய கடவுள் என விசேடித்தமையால், இக்காப்பியமும் குறைவின்றி இனிது முடியும் என்பது கருத்தாகக் கொள்க.

---

## தற்சிறப்புப்பாயிரம்

புராணேதிகாசங்களில் கூறப்படுவனவாகிய செங்குந்தர் வம்சாவளியும், வீரத்தன்மையும் எடுத்தாராயும் ஆராய்ச்சி இக்காப்பியத்துள் எடுத்துக் கொள்ளப்பட்டது. இக்காப்பியம் செய்த இடம், அது செய்வதற்குக் காரணம், கேட்டோர்பெயர், நூற்பெயர், அரங்கேற்றிய பீடத்தின் மாக்ஷிமை, மேலோர் மங்கலவாழ்த்து என்னும் ஆறு உறுப்புக்களை யுடையது, இத்தற்சிறப்புப்பாயிரம்.

கட்டளைக்கலித்துறை

பூவார் புவனையிற் சோமன் றரும்பழி போனபின்பு
நாவாணர் போற்றிய நாடகங் கேட்ப நலமுடனே
யாவாணர் செங்குந்த ராயிரத் தெண்டலை கோய்திரத்தப்
பாவாடை யிட்ட துலகமேல் லாம்புகழ் பாலித்ததே.

இ-ள். திருஆவூரில் நலமிக்க செல்வத்துடனே வாழ்கின்ற செங்குந்தத் தலைவர்கள், அழகமைந்த புவனை என்

னும் பட்டினத்திற் சோமாசியாண்டார் என்பவரால் நேர்ந்த பழி நீங்கியபின்னர், பெரும் புலவர்களாற் போற்றப்படுகின்ற ஈட்டியெழுபது என்னும் பிரபந்தத்தைக் கூத்தன் என்னும் என்னுற் கேட்பதற்காகத் தங்களில் ஆயிரத்தெண்மர்களது தலைகளைக் கொய்து இரத்தப் பாவாடையிட்டமை உலகமுழுதினும் புகழ்தந்தது. எ - ம்.

'பூவார் புவனை' எனவே, தடாகங்களில் தாமரை மலர்வதும், தாமரைமலரில் இலக்குமி குடிகொண்டிருப்பதும் இயல்பாதலின், இலக்குமியும், தடாகங்களும் வருவித்துரைப்பினும் பொருந்தும்.

கூத்தர் என்னும் புலவர்பெருமான் செங்குந்த மரபினர் என்பதும், தமது மரபை அபிமானத்தாலேனும், மற்றைய அவாவினாலேனும் தாமே புகழ்தலிற் பெருமையில்லை என மறுத்தல் முறைமை என்பதும், அதற்கு ஆவூர்ச் செங்குந்தத் தலைவர்கள் அவரைக் குலாபிமானம் இல்லாதவரெனக் கருதிக் கொலைசெய்வான் துணிந்தனர் என்பதும், அஃதுணர்ந்த சோமாசி யாண்டார் தமது வீடடைந்து ஆன்மார்த்த ஆராதனத்துள்ள புலவர்பெருமானது பழமையான நண்பினைப் பாராட்டித் தனதொரு பிள்ளையைக் கூத்தருக்குப் பதிலாக அறிவிக்காமலே கொடுத்தார் என்பதும், அப்பிள்ளையைப் பழிக்கஞ்சி அச்செங்குந்தத் தலைவர்கள் விடுத்தார்கள் என்பதும் நன்கு தோன்ற, 'சோமன் றரும்பழி போன பின்பு' என்றார்.

செங்குந்த மரபினது பெருமையும், அம்மரபைப் புகழ்ந்த கூத்தரது கல்வித்திறனும் தோன்ற, 'நாவாணர் போற்றிய நாடகம்' என்றார்.

ஆவூரில் அரசச் செல்வத்தோடு வாழ்ந்தனர் என்பது தோன்ற, 'நலமுடனே யாவாணர்' என்றார்.

வாழுநர் வானர் எனத் திரிந்து நின்றது, மரூஉமுடிபு.

செங்குந்தரது செயவீரத் தன்மையும், நூலினது தெய்வீகத் தன்மையும், அந்நூல்செய்த புலவர் பெருமானது உயர்வொப்பில்லாப் பெருமையும் தோன்ற, 'ஆயிரத் தெண்டலை கொய்திரத்தப் பாவாடை யிட்டது' என்றார்.

அத்தலைகள் யாவும் பின்னர் உயிர்பெற்றெழுந்தன என்பது தோன்ற, 'உலகமெல்லாம் புகழ் பாலித்தது' என்றார்.

சரித்திரவரலாறு

செங்குந்தர்புராணம் - ஈட்டியெழுபது பாடியசருக்கம்

புவனை என்னும் பட்டினத்தருகிலுள்ள திருஆவூரில் அரசச் செல்வத்தோடு வாழும் செங்குந்தத் தலைவர்கள், அவ்வூரிலே சபையொன்று கூட்டி தேவாலய விஷயமாகப் பற்பல கட்டளைகளை ஏற்பாடு செய்துகொண்டிருந்தனர். அப்போது தேவாரத்தலயாத்திரை செய்துவரும் கூத்தர், சிதம்பர தரிசனம் கண்டு, அதற்கடுத்த ஆவூரை யடைந்து, அங்கே கூட்டம் கூடியிருக்கும் செங்குந்தர் மன்றத்தை யடைந்தனர். கூத்தர் வரவைக்கண்ட ஆவூர்ச் செங்குந்தத் தலைவர்கள், அவரை மரியாதையோடு வரவேற்று, ஓர் திவ்வியாசனத்தில் எழுந்தருளுவித்து உபசரித்தனர். பின்னர் அவ்வாவூர்ச் செங்குந்தத் தலைவர்கள், அக்கூத்தரைப் பணிவோடு நோக்கி, "ஐயா புலவர் பெருமானே! இவ்வுலகத்தில் சிற்சில மரபினர், தங்கடங்கள் குல வண்மையைப் பற்றி, ஒரு சில கவிஞர்களால் பிரபந்தங்கள் பாடுவித்து அப்பிரபந்தத்தைப் போற்றி வருகின்றனர். நமது குல வண்மையைப்பற்றி ஓர் பிரபந்தமேனும் தனித்துக் காணப் படவில்லை. கவிச்சக்கிரவர்த்தியாகிய தாங்கள் இவ்வாவூரில் சில பகல் தாமதித்திருந்து, ஓர் பிரபந்தம் பாடி, அரங்கேற்

றல் செய்து எங்களை மகிழ்வித்துப் போகவேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டனர்.

அது கேட்ட கூத்தர், அச்செங்குந்தத் தலைவர்களை நோக்கி, "நீங்கள் கொண்ட கொள்கை எனக்கு வியப்பைத் தருகின்றது. நமது மரபிற்குத் தனிமையாக ஓர் பிரபந்தம் வேண்டுவதில்லை; முன்னமே கச்சிக்குமரகோட்டத்து அருச்சகராகிய கச்சியப்ப சிவாசாரியார், தாம் மொழிபெயர்த்துப் பாடிய கந்தபுராணம் பன்னீராயிரம் செய்யுளுள் ஆங்காங்கே வடமொழியிலுள்ளபடி, நன்றாக நம்முடைய பூர்வோத்தரம் குலவண்மை முதலியவற்றைப் பற்றிக் கூறியிருக்கிறார். அவ்ரோ ஆமர்த்தகமட வழிவந்தவர்; வடமொழியிலும் தென்மொழியிலும் மிக்க வல்லவர்; ஆசாரியாபிஷேகம் பெற்றவர். அக்கந்தபுராணம் என்னும் பெயரிய நூலை, அவர் தம்முடைய இஷ்டப்படி மொழிபெயர்த்தவரல்லர்;குமாரக்கடவுள் திருவருள்வழியே நின்று பாடினவர். அப்பாடல்களைச் செவ்வையாகச் செப்பஞ் செய்தவர் குமரகோட்டக் கடவுளாம். கடவுள் திருத்திய பின்பு அச்சிவாசாரியார், அப்புராணத்தைக் குமரகோட்டச் சந்நிதியில் சர்வாடம்பரத்துடனும் அரங்கேற்றி வைத்தார். இத்தகைய புராணம் ஒன்றே நமக்குப் போதுமன்றோ?'' என்று கூறினர்.

இவ்வாறு கூத்தர் எடுத்துக்கூறிய நியாயத்தைக் கேட்டுணர்ந்த ஆவூர்ச் செங்குந்தத் தலைவர்கள், மீட்டும் அப்பெரு நாவலரை வணங்கி நோக்கி, "ஐயா புலவர்சிங்கமே! தாங்கள் கூறியவனைத்தும் உண்மையே. பிரமாண்ட புராணம் முதலிய புராணங்களுள் அவ்வவ் வருண வொழுக்கம்பற்றியும் செயல்பற்றியும் விவரமாகக் கூறியிருக்க, அவ்வவர்களும் என் அமையாது தனித்தனியே வேறு

வேறு பிரபந்தம் செய்துகொண்டார்கள். புராணம் என்பது பொது என்பதும், பிரபந்தம் என்பது சிறப்பு என்பதும் தாங்கள் அறியாததன்று," என்று கூறினர்.

அது கேட்ட கூத்தர், புன்முறுவல் செய்து, அச்செங்குந்தத் தலைவர்களை நோக்கி, "ஒரு சில புலவர்கள் அபிமானத்தாலேனும், பொருள் மோகத்தாலேனும் கற்பனை வாயிலாகப் பாடிய பிரபந்தங்களுள் ஒரு சிறிதேனும் கண்கூடாகக் கண்ட அதிசயம் ஒன்றுமில்லை. நம்மரபினர் அந்தணர் முதலிய முதன் மூவருணத்தார்களின் ஒழுக்கங்களனைத்தையும் ஒருங்குபெற்றவர்; கைலாய பரம்பரையினர்; நந்திகணத் தமிசத்தவர்; உபசுப்பிரமணிய மரபினர். இங்ஙனமாக, நமது குலவண்மையைப் பற்றிச் சிறப்பித்துப் பாடப்புகுதல் இயற்கை யழகிற்குச் செயற்கை யழகு செய்தல்போலாம்; இந்தச் செயற்கை யழகோ நிலைப்பதன்று. இயல்பிற்றானே பல சிறப்போடுங் கூடிய நமது குலவண்மையைப் பற்றிப் பாடுவிக்க வேண்டில், நம்மினுமுயர்ந்த வருணத்த னொருவனால் பாடுவித்தல் அழகு; நம்மிற் றாழ்ந்தோனாற் பாடுவித்துக்கொள்ளுதல் அழகன்று. ஆகவே நம்மை நாமே சிறப்பித்துப் பாடிக்கொள்வது அதனினுங் குறைவு" என்று கூறி, இருக்கை விட்டெழுந்து, தமது நித்திய நியமம் நிறைவேற்றிக் கொள்ளுமாறு, அவ்வாவூரின் பார்ப்பன வீதியை யடைந்தார். அங்கே தமதொருசாலை மாணாக்கராகிய சோமாசி யாண்டார் என்னும் அந்தண சிரேஷ்டர், எதிர்கொண்டழைக்க, அவர்மனைக்குட்சென்று, அவருடன் சிலநேரம் வார்த்தையாடி அங்குள்ள சிவபூஜா கிருகத்திற்குப் போயினர்.

அப்பால், முன் அவ்வூரில் சபை கூடியிருந்த செங்குந்தத் தலைவர்கள், தாங்கள் கூத்தர் பெருமானிடம்

கேட்க விரும்பிய பிரபந்தம் முற்றுப் பெறுமையால், மன மிக வருந்தினவர்களாய் அக்கூத்தரது கொள்கையை யுணராமல் சினந்து, "இப்புலவர் நமது மரபினராயிருந்தும், நமது மரபின் பிரபாவத்தை எடுத்துக் கூறவல்ல ஓர் பிரபந்தம் பாடித் தரும்படி கேட்டுக் கொண்டால், 'நம்மின் மேலானவனைப் பாடுவித்துக் கொள்வதே சிறப்பு' என்று கூறிப் போய்விட்டார். இனி நம்மின் மேலான வருணத்த னொருவனை நமது தந்தையாராகிய சிவபெருமானைச் சிருட்டித்துக்கொள்ள வேண்டும்போலும். 'இவ்வுலகிற் புன்கவிகளாயுள்ளோர் வெளிப்படின், அவர்களை எனது வீரவாளாற் கொன்று குவிப்பேன்' என்றோர் வெற்றிக்கொடித் தம்பம் நாட்டித் தாம் கற்றுள்ள கல்வி யளவில் அபிமானம் வைத்துள்ள இவர், தாம் பிறந்துள்ள குலத்திற் சற்றும் அபிமானமில்லாதவரா யிருக்கின்றார். இத்தகையரை இவ்வுலகில் இல்லாதபடி கொன்றுவிடுவதே சரி," என்று தங்களுக்குள் நிச்சயித்துக் கொண்டவர்களாய், உடனே வளை, தடி, வாள் முதலிய ஆயுதங்களை யேந்தி, கூத்தரிருக்குமிடத்தை நாடி வந்தார்கள். அது கண்ட சோமாசி யாண்டார் திடுக்குற்று, அவர்கள் அதியுக்கிரத்தோடும் ஆயுதபாணியராய் வந்த காரணத்தைக் கேட்டறிந்து நடுநடுங்கி, "கூத்தர் சிவபூஜாக்கிருகத்திற்குப் போயிருப்பதால், பூஜை முடித்து வந்தவுடன் அவரை யனுப்புகிறேன். அதுவரையில் சற்றிருங்கள்," என்று இதமாகக் கூறினர். அவர்கள் அவ்வாறே அங்கு கூத்தரை எதிர் பார்த்திருந்தனர்.

பின்னர், சோமாசியாண்டார் ஒன்றும் தோன்றாதவராய்க் கிலேசித்து, "இத் தமிழ்நாடெங்கும் 'கவிச்சக்கிரவர்த்தி' எனப் பெயர்பூண்டிருக்கும் பெரியோரை நாம் எந்தப்படி காட்டிக்கொடுப்பது. அப்புண்ணியமூர்த்தியின் பொருட்டு நமதொருபுதல்வனைத் தரின் இம்மையிற் புகழும்,

அம்மையிற் சுவர்க்கமும் நம்முடையதேயாகும்,'' என்று தனக்குள்ளே தீர்மானித்தவராய், உடனே தமது புதல்வனை யழைத்துக் கூறவேண்டுவன கூறிச் சம்மதிப்பித்து, ஓர் பேழையுள் அச்சிறுவனை யிருத்தி, மூடிக் கொண்டுவந்து தலைவாயிலினிடம் வைத்து, "நீங்கள் கருதிவந்த புலவர் இப்பேழையுள் இருக்கின்றார். இப்பேழையைத் திறவாது கொலைக்களங் கொண்டுபோய்ச் சூரியன் அத்தமித்தவுடன் திறந்து உங்கள் கருத்தை நிறைவேற்றிக்கொள்ளுங்கள்,'' என்று கூறிப்போயினர். கூத்தரைக் கொலைசெய்ய எதிர் பார்த்திருந்த செங்குந்தத் தலைவர்கள், சோமாசியாண்டார் சொற்படி பெட்டியை யெடுத்துக்கொண்டு கொலைக்களம் போய்த் திறந்து பார்த்தனர். அதனுள் சோமாசியாண் டார் புதல்வன் இருக்கக்கண்டு பயந்து, உடனே அச் சிறுவனோடு தாங்களும் கொலைக்களத்திலிருந்து சோமாசி யாண்டார் வீடுவந்து சேர்ந்தனர். சேர்ந்தவர்கள், பெருங் கூச்சலோடு சோமாசி யாண்டாரைப் பார்த்து, "இச் செயல் உமக்குத் தகுதியோ?'' என்று பூசலிட்டனர். அத் தருணத்தில் மனைக்குள்ளிருந்து வெளிவந்த கூத்தர், விஷயங்கள் அனைத்தையும் செவ்வையாக அறிந்துகொண்டு, பூசல் விளைக்கும் செங்குந்தத் தலைவர்களை சோமாசியாண் டாரிடமிருந்து விலக்கி, அவர்களைப்பார்த்து இதனை யிதமா கக் கூறுகின்றனர்.

"ஓ நங்குலத் தலைவர்களே! அடியேன் சொல்வதைப் பொறுமையோடும் கேண்மின்கள். அரும் பெரும் புலவர் கள், தேவர், முனிவர், அரசர் முதலியோரை அபிமானத்தா லேனும், பொருள் வேட்கையாலேனும் வருணித்துப்பாடு தல் மரபு; ஓர் குலத்தினை அக்குலத்தினர் வறிதே வருணித் துப் பாடுதல் மரபல்ல. நான் எம்பெருமான் மீது பல பிர பந்தங்கள் பாடியுள்ளேன்; மூவேந்தர் மீதும் பிரபந்தங்கள்

பல செய்திருக்கிறேன். எனக்குப் பொருளாசை என்பது சற்றுமில்லை; எனக்கென என்முன்னோராற் கிடைத்துள்ள பிதுரார்ச்சிதமும், சோழராஜாக்களால் கிடைத் துள்ள சுயார்ச்சிதமும் கணக்கற்றவை. ஒவ்வோர் சமயத்தரும் தத்தம் சமயத்தையே மேலெனக்கூறி வாதித்தல்போல, ஒவ்வொரு சாதியருந் தத்தஞ் சாதியையே மேலாகக்கூறி வாதிடுதல் வழக்கு; அவ்வழக்கு முடிவில் இழுக்காம் என்பதற்குச் சான்று, அவ்வக் குலத்தினரது தொழில் விகற்பமேயாகும். இத்தகைய சமயத்தையும், சாதியையும் பற்றி ஓர் பிரபந்தம் கூறுமிடத்து, அப்பிரபந்தத்தால் யாதேனுமோர் அற்புதம் விளையின் அதுவே அவற்றை எல்லாவற்றினும் மேலெனக் கொள்ளற்குச் சாமியமாகும். ஆதலால், அடியேன் திருக்கைலாய பரம்பரையில் வந்த செங்குந்த மரபில் தோன்றி யுள்ளேனாயினும், என் வாக்கில் சத்திய லட்சுமியும், சாரதாதேவியும் சாஸ்வதமாய்க் குடிகொண்டிருப்பது மெய்யேயாகில், அவர்கட்குச் சகஸ்திரநாமார்ச்சனையின் பொருட்டு, நங்குலத் தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெண்மர்கள் சிரத்தினைப் பரிசாகத் தருவீரேல், நமது ஆயுதமாகிய ஈட்டியைச்சுட்டி, ஈட்டியெழுபது என ஓர் பிரபந்தம் பாடி முடித்து இவ்வுலகினர் வியக்கச் செய்கின்றேன்," என்றனர்.

அதுகேட்ட ஆலூர்ச் செங்குந்தத் தலைவர்கள் திடுக்குற்று, "இதென்ன கோரம் 'கூத்துப் பார்க்கப்போன வீட்டில் பேய் பிடித்தது போல'வும், 'பிள்ளைவரத்துக்குப் போனவள் புருஷனைப் பரிகொடுத்தது போல'வும் இருக்கிறதே. இவர் நம்மவரா யிருக்கிறாரென்கிற சுதந்தரம்பற்றிப் பாட்டுப்பாட வேண்டுமென்று இதமாகக் கேட்டாற் கொஞ்சமாவது இரக்கமில்லாமலும், தாக்ஷிணிய மில்லாமலும் ஆயிரத்தெண்மர் தலைகளைக் கொடுக்க வேண்டுமென்

றும், அவைகளும் தாய்க்குத் தலைப்பிள்ளையின் தலைகளா யிருக்கவேண்டு மென்றும், மனந்துணிந்து சொல்லுகிறாரே இஃதென்ன விபரீதம். யாராவது தலையைக் கொடுப்பார் களா? இவருக்குப் பாட வேண்டுமென்று மனமிருந்தால் இப்படிச் சொல்வாரா? பாடக்கூடாதென்கிற எண்ணத் தைக் கொண்டல்லவோ 'எடாகோடக்காரனுக்கு வழியெங் கேயெனில் போகிறவன் வருகிறவன் தலைமேலே' என்பார் போல, அகடவிகடம் பேசுகின்றார். இதற்கென்ன வுத்தரம் சொல்லுகிறது,'' என்று ஒருவற் கொருவர் கலந்து பேசி, ஒன்றும் தோன்றாமல் மரம்போல அசைவற்று நின்று மௌனமாயிருந்தார்கள்.

அப்போது கூத்தர், அம்மௌனிகளை நோக்கி, "நாம் கேட்ட கேள்விக்கு நீங்களொன்றும் பதில் சொல்லாமல் இருப்பதென்னையோ?'' என்று கேட்டார். அதற்கவர்கள், புலவரைப் பார்த்து, "எங்களுக்கு மறுமொழி சொல்ல நாவெழவில்லை. நம்முடைய மரபின் மகிமை விளங்கும் படி பாடல் பாடவேண்டுமென்று நாங்கள் உம்மைப் பிரார்த் தித்தோம். அதற்குத் தாங்கள் பாடும் பாடலுக்கு ஆயிரத் தெண்மர் தலைகளைக் கொடுக்கவேண்டுமென்கிறீர். பாடலுக் காகத் தலைகொடுத்தவர்கள் எங்கேனு முண்டா?'' என்று மறுமொழி பகர்ந்தனர். கூத்தர் புன்னகைசெய்து, அவர்க ளைப் பார்த்து, "என்னகாணும், நமது குமணராஜன் காட் டிற் போயிருக்கும்பொழுது, அவன் தம்பியாகிய அமணரா ஜன் மாச்சரியத்தால் 'என்தமயன் தலையைக் கொண்டுவரு கிறவர்க்குக் கோடிபொன் கொடுக்கிறேன்' என்று சொன்ன அச்சமயத்தில், ஒரு வித்துவான் குமணன்மேற் கவிபாடி குமணனுடைய தலையைத் தன்கவிக்குப் பரிசாகப் பெறவில் லையா? 'தலைகொடுக்கிறது' என்பது நம்முடைய மரபாருக் கொருவிஷயமல்லவே? தமிழ்நாட்டிலே 'கன்னுட்டுதல்' என்

கிற வழக்கம் நம்முடையதல்லவா? எத்தனையூரில் 'சாவான் கல்' இன்றும் நம் குலப்பெயரால் காணக் கிடக்கிறது? முன்னொருகால் வல்லான் என்னும் பெயரிய ஒருவனை வென்று தங்கள் தங்கள் தலைகளை இர்ாஜராஜாக்களுக்குப் பிரதியாகக் கொடுத்திட்ட சரித்திரம் என்றும் விளங்கக் கிடக்கிறதே?'' என்று கூறினர்.

இவை யனைத்தையுங் கேட்ட ஆஹூர்ச் செங்குந்தத் தலைவர்கள் அதிக உற்சாகங் கொண்டவர்களாகி, யாவரும் ஒரு மனதாகச் சம்மதித்து, கூத்தரைப் பணிந்து, ''ஐயா! தாங்கள் விரும்பியவாறே ஆயிரத் தெண்மர் தலைகளைக் கொடுத்திடக் கடமைப்படுகிறோம். அத்தலைகள் யாவும் இன்ன காலத்தில் இன்ன இடத்தில் சேர்ப்பிக்க வேண்டும் என்பதைத் தாங்களே குறிப்பிட்டுக் கொடுத்திட வேண்டுகிறோம்,'' என்று கேட்டுக்கொண்டனர். உடனே புலவர் பெருமான் அவர்களுக்கு ஒரு நன்னாளைக் குறிப்பிட்டுக்கொடுத்து, அந்த நாளில் ஆயிரத்தெண்மர் தலைகளையும் உறையூரில் குலோத்துங்கச் சோழனுடைய சபா மண்டப வாசலில் வீற்றிருந்தருளும் வீர லட்சுமி மகிழக் கொண்டுவந்து சேர்த்து, சிங்காதனம்போல அடுக்கி, இரத்தப்பாவாடை விரித்து, அலங்காரம் செய்வித்திடும்படி கட்டளையுமிட்டு, தாம் ஆஹூரினின்றும் சோமாசியாண்டார் முதலிய பெரியோரிடம் பிரியா விடை பெற்றுக்கொண்டு உறையூரைச் சென்றடைந்தனர்.

அப்பால், உறையூரை யடைந்த கூத்தர், குலோத்துங்கச் சோழனைக்கண்டு, தாம் தலயாத்திரையாகச் சென்று மீண்டவரையில் நடந்துள்ள சமாசாரங்களை யெல்லாம் சொல்லி, ஆஹூர்ச் செங்குந்த வேந்தர்க்கும் தமக்கும் நடந்துள்ள சம்பாஷணைகளையும், தமக்காச் சோமாசியாண்டார்

செய்துவைத்த நன்றியின் திறத்தையும், இனித் தாம் நடத் தப்புகும் காரியத்தையும், அத்தினத்தையும் தெரிவித்த னர். குலோத்துங்கன் அவைகளைக்கேட்டு ஆச்சரிய சித்த னாகி, உடனே கருணாகர பாண்டியன் முதலிய அரசர்கட் கும், ஆங்காங்கு கிராமாதிபதிகளாயுள்ள பிரபுக்களுக்கும், மற்றைப் பெரியோர்களுக்கும் கூத்தர் நடத்தவிருக்கும் காரியத்தினைச் செப்பி, அத்தினத்தையும் குறித்துத் திரு முகம் வரைந்து விடுத்து, தனதிராஜதானியைச் சேர்ந்த பலவூர்களிலும் வள்ளுவனால் முரசறைவித்தனன்.

இப்பால், முன்னர்க் கூத்தரிடமிருந்து விடைபெற்றுப் போன ஆவூர்ச் செங்குந்தத் தலைவர்கள் தங்களை யொத்த நாட்டினர்க்கெல்லாம், தாங்கள் மேற்கொண்டு நடத்தப் போகின்ற காரியம் இன்னதென்றும், அக்காரியம் இன்ன யிடத்தில் இன்ன தினத்தில் நடத்தப்படுமென்றும், அத் தினத்தில் அதற்கு வேண்டுவன ஆயிரத்தெண்மர் தலை என்றும் திருமுக வாயிலாகத் தெரிவித்தார்கள். அத்திரு முகங்கண்ட நாட்டினரெல்லாம், குறிப்பிட்ட நாளில் நல் லொழுக்கம் வாய்ந்த தங்குலத் தலைப்பிள்ளைகள் ஆயிரத் தெண்மர் சிரங்களை மிக உற்சாகத்துடன் அவ்வவ் விடங் களிலேயே கண்டித்து, அச்சிரங்களை மாத்திரம் வண்டி களில் அடுக்கிக்கொண்டு உறையூரின்கண் வந்து, கூத்தர் உத்தரவின்படி குலோத்துங்கச் சோழன் ஆசாரவாசலில் இரத்தப் பாவாடை பரப்பி, அதன்மீது வண்டிகளிற் கொண்டுவந்த ஆயிரத்தெண்மர் சிரங்களை சிம்மாதனமாக அடுக்கி, மற்றும் அலங்காரம் பல செய்து வைத்தனர்.

அப்பால், ஆவூர்ச் செங்குந்தத் தலைவர்கள், கூத்தரிடம் சென்று நடந்த வண்ணம் கூறி நின்றனர். கூத்தர் அவர் களுக்கு நல்வரவுகூறி தமது நித்திய கன்மானுட்டானங்

களை முடித்துக்கொண்டு, உபாசனா மூர்த்தியைப் பூசித்து, அப்பூசா கோலத்தோடும் சிவிகையிலேறிப் பல விருது களும் பரிசனங்களும் புடைசூழ, மங்கலவாத்தியம் முழங்க வெளிக்கொண்டு சபாமண்டப வாசலில் இறங்கி, அங்குத் தமக்கமைத்துள்ள சிரச்சிங்காதனத்தின்மேல் ஏறி, பதுமா சனமிட்டுத் தியானபரராய் வீற்றிருந்தார். அக்கால் குலோத் துங்கச் சோழன், தனது திருமுகங் கண்டுவந்த பாண்டிய ராஜன் முதலிய நண்பர்களோடும் பல பிரபுக்களோடும் அங்ஙனமடைந்து, அவ்வவர்களைத் தக்க ஆதனங்களில் இருத்தித் தான் தனதாதனத்தில் வீற்றிருந்தனன். வள்ளு வனாற் பறையறையக் கேட்டுவந்த பல வூராரும், சதுர்வேத பண்டிதரும், சகலாகம நிபுணரும், ஆசு முதலிய கவீச்சுரர் களும் தத்தமக்கு வகுத்துள்ள தானங்களில் அமர்ந்திருந் தார்கள். பின்னர் தியானபரராய்ச் சிரச்சிங்காதனத்தில் எழுந்தருளிய கூத்தர், தாம் கூறப்புகும் நூல் இனிது முடியு மாறு கலைமகளாரைத் துதித்து வணங்கி, அவரனுக்கிரகத் தினால் அற்புதமாகவும் அதிசாதுர்யமாகவும் நவரசாலங் காரத்துடனே குலோத்துங்கச் சோழன் முதலிய சகல ராஜர்களும் சிரக்கம்பம் கரக்கம்பம் செய்து வியக்கவும், வேதாகம பண்டிதர்களாகிய விப்பிர சிரோமணிகள் விம் மிதமடையவும், வைசியச் செல்வர்கள் பலர் வந்தனத் தோடு சந்தன தாம்பூல புட்பம் பன்னீராதிகளை அங்கு வந்துள்ளவர்கட்கெல்லாம் வழங்கிவரவும், சற்சூத்திரர் அப் போதைக் கப்போது வேண்டிய உபகரணங்களைச் செய்து கொடுக்கவும், இடி முழக்கங்கேட்ட நாகங்களைப்போலக் கவிவாணர்கள் எதுந் தோன்றாமற் கலங்கவும் முதலில் விநாயகர் காப்பும் பாயிரமும் கூறி, பின்னர் பூர்வம் சிவ பெருமானால் கைக்கோளரெனப் பெயர் கொடுக்கப்பட்ட தங்குலத்தினர், உமாதேவியாரால் துஷ்டஜன நிக்கிரக

சிஷ்டஜன பரிபாலனுர்த்தம் கொடுத்திட வாங்கிய ஈட்டி என்னும் ஆயுதத்தைச் சூட்டி, விண்ணுலகத்திலுள்ள அமரர்கள் யாரும் "நீடுழிவாழ்க நீடுழிவாழ்க" என வாழ்த்தி எங்கும் சுகந்த முண்டாகக் கற்பக மலர்மாரி பெய்யும்படி எழுபது பாக்கள் பாடி முடித்து, அப்பிரபந்தத்திற்கு ஈட்டியெழுபது எனப் பெயர் சாற்றித் தாமிருந்த சிரச்சிங்காதனத்தி னின்றும் இறங்கி, குலோத்துங்கச் சோழன் கைலாகு கொடுத்தழைக்க அவருடன் மற்றோராசனத்தில் எழுந்தருளியிருந்தனர்.

அப்போது, அலங்காரஞ் செய்து மிக வழகாய் உயர்ந்திருக்கும் சிங்காதனத்தின்கண் விளங்கும் தலைகளில், சில பல்லொளிகாட்டி எல்லியுமஞ்சச் சிரித்து விளங்கின; சில புருவம் நெற்றியிலேற உறுத்துப் பார்த்தன; சில கண்கள் சிவப்ப நோக்கி அச்சத்தை விளைத்தன; சில மீசைகள் துடிப்ப நிமிர்ந்து கோபக்குறியை விளைத்தன; சில வெற்றித் தன்மையை யோதுகின்ற தருக்கோடு விழிகள் சுழல வலித்திருந்தன; சில மானவ சரீரம் எடுத்த பிரயோசனம் இன்று கிடைத்ததென்று, செஞ்சூரியனைக் கண்ட தாமரை மலர்போல் முகமலர்ச்சி கொண்டன; சில முருகக்கடவுளின் திருவருளைத் தியானித்துக்கொண்டு மௌன நிலையை யடைந்ததுபோல விளங்கின; சில வெள்ளிய மூன்றும் பிறை யணிந்த சிவபெருமானுக்கே நாங்கள் எக்காலும் அடிமை என்பதற்குச் சாட்சியாக, நெற்றிகளிலே திரிபுண்டரங் காணும்படி விளங்கின; சில பகைவர்கள்மீது கோபிப்பதுபோல வீராட்டகாசம் செய்துகொண்டனவென்று சொல்லத்தக்க குறியைப்படைத்தன.

அப்பால், இத்தகைய காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த கூத்தர், அந்நிமிஷமே அச்சிரச் சிங்காதனத்தைப்

பார்த்து, சகலகலாவல்லியின் பெருந்திருவுருவை மனத்தில் தியானித்து, "ஓ சரஸ்வதிதேவியே! நீ உலகத்தில் நிறைந் திருப்பதும், நிறைந்த கல்வி யுள்ள வித்துவ ஜனர்களை உறுதியாகப் பரிபாலிப்பதும், அக் கவிஜனர்களுடைய நாவி னிடத்து வீற்றிருப்பதும் சத்தியமாகுமல்லவா? இப் போது தலையையும் உயிரையும் தடையின்றிக் கொடுத்த உதாரகுணமுடைய உத்தம வீரர்களாகிய இந்தச் செங்குந் தர்கள் எனக்குப் பழியும் பாவமும் நேரிடாதபடி பெறுதற் கரிய உயிர்பெற்றெழுந்து, அவர்களைக்குறித்து நான் பாடிய ஈட்டியெழுபது என்னும் பிரபந்தத்தைப் பார்த்து, மனமகி ழும்படி கிருபை செய்யவேண்டும்" என்னும் கருத்தமைய ஒரு காப்புச் செய்யுள் பாடி, பின்னர் எழுபது செய்யுட் களைச் செய்து முடித்தனர். அச் செய்யுட்களடங்கிய பிரபந் தத்திற்கு, அக் கூத்தர் தாமே குலோத்துங்கச் சோழன் முதலியோர் வியக்கும்படி எழுப்பெழுபது என்று தெய்வீ கப் பெயரிட்டு உலகத்தில் வழங்க வைத்தனர்.

கூத்தர் இப் பிரபந்தம் பாடத் தொடங்கிய மாத்தி ரத்தில் சிங்காதன வுருவமாய் அமைந்திருந்த சிரங்கள் யாவும் கூட்டங் கூட்டமாய் மேலெழும்பி, ஆகாய வழியே சென்று ஆங்காங்குள்ள தத்தம் உடல்களில் ஒட்டிக்கொண் டன. உடனே அவ்வாயிரத் தெண்மரும் உயிர் பெற்றெ ழுந்து இடியிடித்தாற்போல உரக்கக் கனைத்து, தோள் கொட்டித் தொடை தட்டி மீசை முறுக்கி நகைத்து, "ஜெயம் ஜெயம்" என்று யாவரும் இருந்த இருந்த இடங்களில் நின்று ஆர்ப்பரித்தார்கள். இவையனைத்தையும் பிரத்தியக்ஷமாகக்கண்ட கருணாகரபாண்டியன் முதலிய பல தேயத்து மன்னர்களும் "இது நினைத்தற்கும் அரிய மகா மகிமையாகவே இருக்கின்றது" என்று அதிசயத் துக் குலோத்துங்கச் சோழனைப் பார்த்து, "இத்தகைய

தெய்வீகக்கவி பாடவல்ல வித்துவ சிரோமணியைப் பிரதி பிதாவாகவும், ஆசிரியராகவும், அமைச்சராகவும் படைத்த உமது தவமே தவம். இவருக்கு உமது தந்தை கவிச்சக்கிர வர்த்தி எனப் பெயர் தந்தது ஒரு பெருமையன்று; இவரைத் தெய்வீகக்கவி என்று அழைக்க வேண்டும். இவரால் நீர் இருமைப்பயனும் எளிதிற் பெற்றீர்" என்று கூறிக் கொண் டாடிச் சந்தோஷித்தார்கள்.

அதன்பின்பு, குலோத்துங்கச் சோழன் முதலிய மன் னர்களும் அச் சபைக்கு வந்திருந்த மற்றைப் பெரியோர்க ளும் கூத்தர் பெருமானைப் பார்த்து, "ஐயா தெய்வீகப் பெருநாவலரே! தங்களுக்கு இன்று முதல் அற்றதலையும் உடலும் ஒட்டப்பாடிய காரணம் புலப்பட ஒட்டக்கூத்தர் என்னும் சிறப்புப் பெயரும், இந் நிகழ்ச்சிக்குக் காரணமா யிருந்த ஆவூர்ச் செங்குந்தத் தலைவர்களை உள்ளிட்ட அவர் இனத்தாருக்கெல்லாம் சிரச்சிங்காதனுதிபதிகள் என்னும் விசேஷ பட்டமும், நாங்கள் இங்கே கொடுத்தழைக்கின் றோம்" என்று கூற, வேதாகம பண்டிதர்கள் "சதாஸ்து சதாஸ்து" எனப் பலகாற்கூறி, அவ் வொட்டக் கூத்தர்மேல் புஷ்பங்களையும் அக்ஷதைகளையும் மாரிபோலச் சொரிந்தார் கள். உடனே குலோத்துங்கச்சோழன் ஆவூர்ச் செங்குந்த மன்னரைப் புகழ்ந்து அவரை யுள்ளிட்ட அவர் இனத்தாருக் கெல்லாம் அவரவர் தகுதிக்கேற்பத் தண்டிகை முதலிய விரு துகளும், குறுநில அரசுரிமையும், இரத கஜ துரக பதாதி களும் கொடுத்துப் பல மரியாதைகள் செய்தான். கருணு கரபாண்டியன் முதலிய பல தேயத்து மன்னரும் பல வெகு மதிகளைத் தந்து சந்தோஷிப்பித்தனர். சதுர்வேத பாரக ராகிய அந்தண சிரேஷ்டர்கள் பல ஆசிகள் கூறிப் பெயர்ந் தனர். வைசியச் செல்வர்கள் பிரபந்தங் கேட்கவந்த ஜனங் களுக் கெல்லாம் உண்டி முதலியன வழங்கி உபசரித்தார்

கள். ஒட்டக்கூத்தரும் அவர் இனத்தவரும் பாண்டியன் முதலிய பார்த்திபரோடு குலோத்துங்கச்சோழன் செய்வித்த விருந்தை யுண்டு பிரியா விடைபெற்றுத் தங்கள் தங்கள் இடஞ் சென்று வாழ்ந்தார்கள்.

இச் சரிதையிற் கண்ட 'புவனி' என்னும் பட்டினம் சிதம்பரம் கோயில் வடமேற்கு ஐந்து கடிகை தூரத்தில் உள்ளது. இப்போது அவ்வூர் 'கீழைப் புவனகிரி' எனவும், 'மேலைப் புவனகிரி' அல்லது 'பெருமாத்தூர்' எனவும் வழங்குகின்றது. இது முற் காலத்தில் ஒரு பகுதியை (பார்ப்பனவீதியைப்) 'புவனி' என்றும், மற்றொரு பகுதியை (குறுநிலமன்னர்வீதியை) 'ஆவூர்' என்றும் வழங்கி வந்ததாம். இக் காலத்தில் 'ஆவூர்' என்னும் பெயர் வழக்கிற் காணவில்லை. இனி, கும்பகோணத்திற்கும், திருவிடைமருதூருக்கும் இடையில் உள்ள 'திரிபுவனம்' என்னும் சிவக்ஷேத்திரத்தை 'புவனி' என்று கூறலும் உண்டு. திரிபுவனத்தை அடுத்தாற் போல 'ஆவூர்' என்று ஒரு சிற்றூர் வழக்கத்தில் இன்றும் காணப்படுகிறது. வரலாற்றிற் கண்ட 'சோமாசியாண்டார்' 'திரிபுவனத்துவள்ளல்' என்பது தமிழ்நூல் ஆராச்சியிற் கண்டபடியாம்.

---

### மங்கலவாழ்த்துச்சிறப்பு

அறுசீர்விருத்தம்

பூதலம் வாழ்க குந்தர் பொலிவுடன் விளங்க நான்கு
வேதமெந் நாளு மோங்க வேதியர் பசுக்கள் பல்க
மாதவர் வளவன் செங்கோல் வளமைகுன் றாது நிற்க
ஓதமே யறையும் பொன்னி யுறந்தையுஞ் சிறக்க மதோ.

இ - ள். மழைவளமும், செந்நெல் முதலிய பயிர்வளமும், பொன் மணி முதலிய நிதிவளமும் பெருகி உலகம் மேன்மேலும் வாழ்ந்திருக்க. செங்குந்தத் தலைவர்கள் நீடூழி

காலம் பொலிவுபெற்று விளங்கியிருக்க. இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் எக்காலமும் விருத்தியடைந்திருக்க. ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும் அறுதொழிலுக்குரிய அந்தணர்கள் ஆகவநீயம் காருகபத்தியம் தட்சணக்கினீயம் என்னும் மூன்றக்கினியையும் நாடோறும் வளர்த்து நியமந் தவறாது பெருகியிருக்க. பசுக்கள் தேவாராதனை முதலியவற்றிற்குக் கோசலம் கோமயம் பால் தயிர் நெய் என்னும் பஞ்ச கௌவியங்களும் உதவி மிகுதியாயிருக்க. பெரியோர்கள் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் வளமைபெற்ற தவங்களைச்செய்து வறுமையின்றியிருக்க. குலோத்துங்கச் சோழனுடைய செங்கோலினது வளமையாகிய படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்னும் இவைகள் குறைவின்றியிருக்க. நீர்ப்பெருக்கில் கடலையே யுவமையாகக் கூறும் காவேரியாறும் அதனால் சூழப்பட்ட உறையூர் என்னும் இராசதானியும் சிறப்புற்றிருக்க எ-ம்.

'உறந்தையும்' என்பதில் உம்மை எச்சவும்மை, இறந்தது தழீஇயது: சோழராசர்களுக்கு மகுடாபிஷேகம் செய்விக்கும் பஞ்சசிங்காதனத் தலங்களில், பொன்னியாறு சூழப்பட்ட கருவூர் தஞ்சாவூர் முதலிய இராசதானிகளுமே அன்றி உறையூரும் என்றதனால். உறந்தை-உறையூர்.

பஞ்சசிங்காதனத் தலங்கள் உறையூர், தஞ்சாவூர், திருவாரூர், கும்பகோணம், கருவூர். க

பிரபந்தங்கேட்டோர்சிறப்பு

கோட்கவி கொண்டு மாக்கள் கொடுந்தமிழ் கூற நீத்துத்
தாட்கவிப் புதிய வாட்டந் தலைக்கடை துரந்து சாட
வாட்கவி கொண்ட மன்னன் வளவனு மகிழ நாமே
நாட்கவி பாடு நாட்போ லிருப்பது பெரிய நாடே.

இ - ள். புல்லிய கவிவாணர் முன்ஞேரது மேற்கோளாகிய பழமொழிப் பொருளைக்கொண்டு சில சில பிரபந்தங்களைப் பாடிவந்து அரங்கேற்றும் கொடுந் தமிழை நீக்கி, நாடோறும் உண்டாகும் இப் புதிய ஆட்டங்கள் கெட, அப் போலிக் கவிகளைத் தலைவாயிலளவும் துரத்திச் சாடும்படி வாள்போன்ற என்னைக் கவிச்சக்கிரவர்த்தியாகக் கொண்டிருக்கும் இராசாதிராசனுகிய குலோத்துங்கச்சோழனும் மிக மகிழ்ந்து கேட்கக் கூத்தனுகிய நாமே, நாடோறும் புதிதாக விளங்கும் இக் கவிகளைப் பாடுகின்ற இந் நாளைப் போலவே, பெரிய சோழநாடானது சிறப்புற்றிருப்பது எ - ம்.

'புதிய ஆட்டந் தலைக்கடை துரந்து சாட' என்பது, 'இரண்டொன்ருய்த் தலைமுடிந்து-வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தன் இங்கில்லை' என்பதை யுணர்த்துகின்றது. உ

சிவாலயபரிபாலனச்சிறப்பு

விடங்கமே ழாதி வீதி விடங்கமா ரூர்வெண் காடும்
நடங்கொளுந் தில்லை மூதூர் பஞ்சநன் னதிசாய்க் காடும்
இடங்கொள்மா காள மேழு மிடைமரு தூர்செங் காடும்
தொடங்கிய தரும வாட்சிச் செங்குந்தர் தொகுதி வாழி.

இ - ள். வீதிவிடங்கப் பெருமான் என்னும் தியாகராஜப் பெருமான் எழுந்தருளிய திருவாரூர் ஆதி, திருக்காரோணம், திருநள்ளாறு, திருக்காருயில், திருக்கோளரியூர், திருவான்மியூர், திருமறைக்காடு ஈருகிய ஏழு சிவத்தலங்களுக்கும், திருவெண்காடும் பழமையான சிதம்பரமும், திருவையாறும் திருச்சாய்க்காடும், இடமகன்ற மாகாளம் என்னும் பெயர்பெற்ற சப்த சிவதலங்களும், திருவிடைமருதூரும் திருச்செங்காடும் ஆகிய இத் தலங்களுக்கு, ஆதிமுதல், தர்ம்ம கர்த்தத்துவ மாக இருந்து நன்கு பரிபாலனஞ் செய்து வருகின்ற செங்குந்தர் கூட்டங்கள் வாழ்ந்திருக்க எ - ம்.

விடங்கர் — டங்கத்தினுற் செய்யப்படாதவர், எனவே சுயம்பு என்றபடி. இப் பெருமான் ஏனைச் சுயம்புகள் போலாது வீதியினும் எழுந்தருளுதலால் 'வீதிவிடங்கர்' என்பர். டங்கம் — உளி, வி — நீக்கம். ௬

வமிசாவளிச்சிறப்பு

பாதநூ புரத்திற் றேவி சாயைகண் டமலன் கொண்ட
கதலாற் கருப்ப மாகுங் கதிர்நவ மணிமா தர்க்கண்
மேதகு வீரத் தோடு மேன்மீசை யோடும் வந்த
மாதவ வீர வாகுத் தலைவரித் தலைவர் மாதோ.

இ - ள். உமாதேவியாரின் பாதச்சிலம்பில் உதிர்ந்த நவ மணிகளில் அப் பார்ப்பதியார் திருவுருவத்தை க் கண்ணுற்றுச் சிவபெருமான் கொண்டருளிய இச்சையால் கருவுற்ற ஒளியுடைய நவரத்தினப் பெயர்கொண்ட மகளிர்களிடத்தில் அதி மேம்பாடமைந்த வீரத்தன்மையுடனும் மிருதுவாகிய மீசையுடனும் உதித்த பெரிய தவத்தையுடைய வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களின் மரபினர் இச் செங்குந்தத் தலைவர்கள் எ - ம்.

மாது ஒ இவ்விரண்டும் அசைகள். ௯

---

சரித்திரவரலாறு

கந்தபுராணம் - திருவவதாரப்படலம்

பூர்வத்தில் விட்டுணு, பிரமன், உருத்திரன் முதலிய தேவர்களெல்லாரும், சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் முதலிய அவுணர்களால் துன்புற்று, திருக்கைலையில் எழுந்தருளிய சிவபெருமானை வணங்கி "எம்பெருமானே! அடியேங்களெல்லாம் இந் நாள்காறும் சூரன் முதலிய அசுரர்களால் மிக வருந்தினோம். இனி அவ் வருத்த நீங்கி முன்

னைய செல்வத்தை அடையும் பொருட்டுப் பரம கருணாநிதி யாகிய உம்மிடத்தே ஒருவரம் வேண்டுகின்றோம். அகில சராசரங்களையும் பெறாது பெற்ற நித்திய கன்னிகையாகிய பார்ப்பதியாரை நீர் திருக்கலியாணம் செய்தமை, தீவினைக் கடலின் மூழ்கிய சிறியேங்களை ஆளுதற்கு ஒரேதுக் காட்டு தற்கன்றி அவரிடமாக ஒரு திருக்குமாரரைப் பெறுதற் கன்று. பிறப்பும் இறப்பும், அருவமும், உருவமும், ஒப்பும் ஏதுவும், போக்கும் வரவும், இன்பமும் துன்பமும் இன்றி நின்ற அநாதிமலமுத்தரே, ஒரு திருக்குமாரரை உமக் கொப்பாக உம்மிடத்தினின்றும் தோற்றுவித் தருளுக" என்று விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள்.

அப்போது சிவபெருமான் பிரமன் முதலிய தேவர் களைப் பார்த்து, "நீங்கள் எல்லோரும் சிறிதும் வருந்தா தொழிமின் ஒரு புதல்வனைத் தருவேம்" என்று திருவாய் மலர்ந்து, தமது பழைய ஆறு திருமுகங்களைக் கொண்டு, அத் திருமுகங்களிலுள்ள நெற்றிக்கண்கடோறும் ஒவ் வோர் அக்கினிப் பொறியைத் தோற்றுவித் தருளினார். அவ்வாறு பொறிகளும் பிரமன் விட்டுணு உருத்திரன் முதலியோர் யாவரும் ஒரு சிறிதும் அணுகவாற்றாத மிக்க வெம்மையை உடையனவாகி, அண்டரண்ட பகிரண்டங்க ளெல்லாம் நடுநடுங்கும்படி உலகமெங்கும் பரந்தன. அத் தீப்பொறிகளின் வெம்மையைக் கண்டு, சிவபெருமான் பக் கத்தே எழுந்தருளியிருந்த உமாதேவியார் வேர்த்துத் திரு வுளம் கலங்கி எழுந்து, தமது திருவடிகளிலுள்ள நவரத் தினச் சிலம்புகள் ஒன்றோடொன்று புலம்பித் தாக்கத் தமது திருக்கோயிலினுள்ளே ஓடினார். சிவபெருமான் திருமுன் னர் நின்ற பிரமா முதலிய தேவர்களெல்லாரும் அத் தீப் பொறிகளைக் கண்டு மனங் கலங்கி, நடுநடுங்கி, இடந் தோறும் பயந்தோடினார்கள். அவ்வாறு ஓடிய தேவர்க

ளெல்லாரும் பெருமூச் செறிந்து கொண்டு மீண்டும் எம் பெருமான் றிருமுன் வந்து வணங்கித் துதித்து, "பரம பிதாவே! அசுரர்களைக் கொல்லும் பொருட்டு ஒரு திருக் குமாரரைத் தந்தருளும்படி வந்து வேண்டினேம். அதற்கு நீர் முடிவில்லாத ஆற்றலையுடைய அக்கினியைக் கிருபை யோடும் தோற்றுவித் தருளினீர். அவ்வக்கினி யானது உலக மெங்கணும் பரந்தன. ஒரு கணத்தினுள்ளே அந் நெருப்பை மாற்றாது விடுவீராயின், அத் தீப்பொறி சரு வான்மாக்களையும் அழித்துப்போடும். அப் பொறியின் வெம்மையை ஆற்றாது பயந்தோடிய நாங்கள் மீண்டும் உம் முடைய பாதாரவிந்தங்களையே சரணாக அடைந்தோம்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

அப்பொழுது சிவபெருமான் தேவர்களை நோக்கி, "அஞ்சாதொழிமின்கள்" என்று கையமைத்து, புதியன வாகத் தோன்றிய ஐந்து திருமுகங்களையும் மறைத்து, ஒரு திருமுகத்தோடு முன்போல எழுந்தருளியிருந்து, தம் முடைய நெற்றிக்கண்ணினின்றுந் தோற்றிய அக்கினிப் பொறிகள் தமது திருமுன் வரும் வண்ணம் திருவுளங் கொண்டருளினார். உடனே எங்கும் பரந்த அக்கினி ஆறு பொறிகளாய் வந்து சந்நிதியை அடைந்தது. அது கண்டு, சிவபெருமான் வாயுதேவனையும் அக்கினிதேவ னையும் நோக்கி, "நீங்களிருவீரும் இந்தப் பொறிகளைத் தாங்கிக்கொண்டு சென்று கங்கையில் விடக்கடவீர்கள். அக் கங்கை இவ்வனற் பொறிகளைச் சரவணப் பொய்கை யிலே கொண்டு சென்றுய்க்கும்" என்று கட்டளையிட் டருளினார். வாயுதேவனும் அக்கினிதேவனும் அது கேட்டு நடுநடுங்கி, மும்முறை வணங்கி, "எம்பெருமானே! இவ் வக்கினிப் பொறிகளை அடியேங்கள் தாங்க வல்லோமோ? இவற்றை அணுகவும் பயப்படுகின்றோம். ஆதலால் நாங்கள்

சிரமேற் கொண்டு செல்லுதல் கூடுமா? இதனை அடை தற்கு நினைப்பினும் எமது உள்ளம் வெப்புறுகின்றது; சரீரம் வேர்க்கின்றது. நாங்கள் எப்படித் தாங்குவோம்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்போது சிவபெருமான், "இத் தீப்பொறிகளைச் சுமந்து சென்று கங்கையில் விடும் பொருட்டு உங்களுக்குத் திண்மை உண்டாகுக" என்று அநுக்கிரகம் செய்தருளினார். வாயுதேவனும் அக்கினிதேவனும் அதற்குடன்பட்டு, சிவபெருமானைத் துதித்தார்கள். அது கண்ட பிரமா விட்டுணு உருத்திரன் முதலிய தேவர்களெல்லாரும் துளக்க நீங்கி, "எங்கள் துன்பம் இன்றே நீங்கியது" என்று மனமகிழ்ந்து, சரீரம் பூரித்தார்கள். சிவபெருமான் அவர்களை நோக்கி, "இவ்வக்கினி சரவணப் பொய்கையிலே சேர்ந்து ஒரு குமாரனாய் வளர்ந்து, சூரன் பதுமன் சிங்கன் முதலிய அசுரர்களைக் கொன்று உங்களுக்கு அருள் செய்யும். நீங்களெல்லாரும் போங்கள்" என்று பணித்தருளினார். பிரமன் விட்டுணு உருத்திரன் முதலிய தேவர்கள் "பிழைத்தோம் பிழைத்தோம்" என்று சொல்லி, சிவபெருமானை வணங்கிக்கொண்டு அங்கிருந்து நீங்கினார்கள்.

வாயுதேவன் சிவபெருமானுடைய திருவடிகளை அக்கினி தேவனோடு வணங்கி எழுந்து, அப் பெருமானுடைய திருவருளினாலே அக்கினிப் பொறிகள் ஆறையும் சிரமேற்றாங்கிக்கொண்டு, திருக்கோயிலை நீங்கிச் செல்வானாயினான். அதனைப் பிரமன் விட்டுணு உருத்திரன் முதலிய தேவர்களெல்லாரும் பெரு மகிழ்ச்சியோடு கண்டு அவர்கள் "இனி நாமும் வாயுதேவனோடு சரவணப் பொய்கைக்குச் செல்வேம்" என்று, அக்கினிப் பொறிகளைத் தாங்கும் வாயுதேவன் தங்களுக்குமுன் செல்ல, திருக்கைலாய மலையைக் கடந்து செல்வாராயினார்கள். ஒரு நாழிகை செல்ல,

வாயுதேவன் "இத் தீப்பொறிகளைத் தாங்குதல் மிக அரிது அரிது" என்று புலம்பி, சிவபெருமானுடைய திருவருளினாலே வன்மையைப் பெற்ற அக்கினி தேவனுடைய சிரசிலே அவ்வனற் பொறிகளைச் சேர்த்தினன். சேர்த்தலும் அக்கினி தேவன் சரீரம் வேர்த்து மிக மெலிந்து ஒரு நாழிகையிலே தாங்கிக்கொண்டு, பிறிதொரு நாழிகை தாங்கலாற்றாது விரைந்து சென்று, அத் தீப் பொறிகளைக் கங்கையில் விடுத்தான். அப் பொறிகள் வந்தவுடனே, கங்கையானது, சிவபெருமானுடைய சடையில் மறைந்தமைபோல வறந்தது. சிவபெருமானுடைய திருவருளை யறிந்து கங்கையானது அத் தீப்பொறிகளைத் தன் சிரமேலேந்திக் கொண்டு ஒரு நாழிகையினுள்ளே சென்று சரவணப் பொய்கையில் விடுத்தது. பிரமன் விட்டுணு உருத்திரன் முதலிய தேவர்களெல்லாரும் அதுகாறும் வந்து, அண்ணியதாகிய விளைவை நாடிக் காக்கும் வழியார்போலச் சரவணப் பொய்கையைப் பேருவகையோடு சேர்ந்தார்கள். இந்திரன் முதலிய திக்குப்பாலகர்கள் எண்டிசைகளினும் நின்று காத்தார்கள். கங்கையும் வறக்கும் வண்ணம் புகுந்த அக்கினிப் பொறிகள் ஆறும் இமையமலைச் சாரலிலுள்ள சரவணப் பொய்கையிலே புகுதலும், அது சிவபெருமானுடைய திருவருளினாலே வறத்தலின்றி முன்போலவே இருந்து விளங்கியது.

அருவமும் உருவமுமாய் அநாதியாய் ஒன்றாய்ப் பலவாய்ப் பரப்பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பே திருமேனியாக, கருணை வெள்ளம் பொழியாநின்ற ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டு, முருகக் கடவுள், உலகம் உய்யும் வண்ணம் திருவவதாரஞ்செய்து, உயிர்களிடத்துள்ள பேரருளோடும் சரவணப் பொய்கையிலே செந்தாமரை மலரின்மீது வீற்றிருந்தருளினர்.

அம் முருகக்கடவுள் கைக்குழந்தை போலச் செய்யுந் திருவிளையாடலைக் கண்டு, விட்டுணு முதலிய தேவர்கள் யாவரும் கார்த்திகை மகளிர்களை நோக்கி, "சரவணப் பொய்கையிலே ஆறுமுகக்கடவுளாய் வீற்றிருந்தருளும் எம்பெருமான் ஒரு குழந்தைபோலத் தோன்றினர். நீங்கள் அவருக்கு நாடோறும் உங்கள் முலைப்பாலைக் கொடுத்து, அவரை வளர்க்கக் கடவீர்கள்" என்றார்கள். கார்த்திகை மகளிர்கள் அறுவரும் அதற்கியைந்து, சரவணப் பொய்கையில் எழுந்தருளி யிருக்கும் முருகக்கடவுளை அடைந்து துதிக்க, அவ்வறுமுகக்கடவுள் தம்மை அடைந்தோர்க்கு வேண்டியன அருள்செய்யும் பெருங் கருணைக் கடலாதலால், வெவ்வேறாக ஆறு சிறுவர் வடிவங் கொண்டருளினர். கொண்டருளலும், கார்த்திகைமகளிர்கள் அறுவரும் மிகமகிழ்ந்து, அச் சிறுவர்கள் அறுவரையும் வெவ்வேறெடுத்து, தங்கள் தங்கள் முலைப்பாலை ஊட்ட, அவ்வறுமுகக் கடவுள் திருமுறுவல் செய்து, நீங்காத பேரருளினாலே மிகவருந்தினோர் போல உண்டருளினர். ஆறு சிறுவராய் நின்ற ஒரு முதற்கடவுளை, அம் மகளிர்கள் சரவணப் பொய்கையிலுள்ள தாமரை மலர்களாகிய சயனத்தின்மீது சேர்த்துத் துயில் செய்வித்துத் துதித்தார்கள். அம் முருகக்கடவுள், திருவருளினாலே துயில்செய்ய ஒருருவமும், துயில்செய்து விரைந்தெழுந்து மதலைபேச ஒருருவமும், மாதாவின் முலைப்பாலை உண்ண ஒருருவமும், நகைத்துக்கொண்டிருக்க ஒருருவமும், விளையாட ஒருருவமும், அழ ஒருருவமும் உடையராயினர். இவ்வாறே ஆறு திருமேனியும் கணம் ஒன்றினுள்ளே ஆயிரம் ஆயிரம் பல்லாயிரம் பேதமாம் வண்ணம், முழு முதற்கடவுளாய் நின்ற குமாரசுவாமி எண்ணில்லாத திருவிளையாட்டைச் செய்தருளினர்.

பிரமன் விட்டுணு உருத்திரன் முதலிய தேவர்களும், முனிவர்களும், பிறரும் அத் திருவிளையாடலைக் கண்டு அற்புதமடைந்து, வணங்கி நின்றார்கள். கார்த்திகை மகளிர்கள் அறுவரும் அறுமுகக்கடவுளுடைய திருவிளையாடல் முழுதையும் நோக்கி நோக்கி, மிக்க அற்புதமடைந்து, குழந்தைகளெனக் கொள்ளுதலை ஒழித்து, சிறிதும் பிரியாது அஞ்சி, வழிபடு கடவுளராகவே கொண்டு மெய்யன்போடு துதித்தார்கள்.

கந்தபுராணம் - துணைவர்வருபடலம்

சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணினின்றுந் தோன்றிய அக்கினிப் பொறிகளின் வெம்மை ஆற்றாது, உமாதேவியார், திருவடிகளிலுள்ள சிலம்புகள் ஒன்றோடொன்று தாக்கலால் நவரத்தினங்கள் சிதறும் வண்ணம், அஞ்சியோடினார். திருவுளத்திலே 'விட்டுணு முதலிய தேவர்களெல்லாரும் சிவபெருமானை வணங்கி, நீர் ஒரு திருக்குமாரரைத் தந்தருளும்' என்று பிரார்த்திக்க, சிவபெருமான் தமது நெற்றிக் கண்ணினின்றும் தீப்பொறிகளைத் தோற்றுவித்து, ஒரு குமாரனைய் வளரும் வண்ணம் சரவணப் பொய்கையிலே சேர்ப்பித்தருளினார் என்றுணர்ந்தார். அதன்பின் "எம்பெருமானுக்குக் குமாரன் என்னிடத்தே தோன்றா வண்ணம் தடுத்த பிரமா விட்டுணு இந்திரன் முதலிய தேவர்களுடைய பன்னியர்களுக்கெல்லாம் புதல்வர்கள் இல்லாதொழிக" என்றார். உமாதேவியார் இவ்வாறே சொல்லிக்கொண்டு, மீண்டு சென்று சிவபெருமான் சந்நிதியை அடைந்து, அவருடைய திருவடிகளை வணங்கிநின்று, "எம்பெருமானே! தேவர்களெல்லாரும் குறையிரப்ப, நீர் தோற்றுவித்தருளிய அக்கினிப் பொறிகள் வன்மையையும் வெம்மையையும் கண்டு, வெம்பிச் சரீரமுற்றும் பதைபதைப்ப, ஓடினேன். பின்பு நீர்

அவ்வக்கினிப் பொறிகளை இங்கு நின்றும் அகற்றினமையால் மீண்டேன்" என்று விண்ணப்பஞ் செய்தார். சிவபெருமான் கருணைசெய்து தேவியாரைத் தம்பக்கத் திருத்தியுபசரித்தருளினார்.

உமாதேவியார் முன் ஓடிய பொழுது, அவருடைய திருவடிச் சிலம்பினின்றும் சிதறிய இரத்தினங்களெல்லாம் சிவபெருமான் றிருமுன் விளங்கின. சிவபெருமானுடைய ஆணையினாலே, அந் நவரத்தினங்களினும் உமாதேவியாருடைய திருவுருவந் தோன்றியது. அவ் வுருவங்களைச் சிவபெருமான் நோக்கி, திருவருளினால் "வாருங்கள்" என்று திருவாய்மலர்ந்தருள, ஒவ்வோரிரத்தினத்துக்கு ஒவ்வோர் சத்தியாக நவசத்திகள் தோன்றினார்கள். அவர்கள், சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி நின்று அவரிடத்தே விருப்பம் வைத்தமையால், இருடிபத்தினிகளைப் போல விரைவிலே கருப்பமுற்றார்கள். இவையாவையும் பார்ப்பதியார் கண்டு, அந் நவசத்திகள் மீது கோபங்கொண்டு, "நீங்கள் இங்கு நமக்கு மாறாயினமையால், பலகாலம் இக் கருபத்தோடிருக்கக் கடவீர்கள்" என்று சபித்தார். அப்பொழுது நவசத்திகள் அஞ்சி நடு நடுங்கிச் சரீரம் வெயர்த்தார்கள். அவ் வெயர்வையினின்றும், தேவதேவருடைய திருவருளினாலே, ஓரிலக்க வீரர்கள் உதித்தார்கள். அவ் வீரர்கள் இடியேறொக்கும் சொல்லையுடையவர்களும், பொன்னுடையை உடுத்தவர்களும், வாளையும் பரிசையையும் கையிலேந்தினவர்களுமாய், சிவபெருமான் றிருமுன்பு சென்று, அவருடைய திருவடிகளை வணக்கித் துதித்துக்கொண்டு நின்றார்கள். சிவபெருமான் அவர்களை நோக்கி, "நம் புதல்வர்களே! கேளுங்கள். தேவர்களுக்குப் பகைவர்களாகிய அசுரர்களைக் கொல்லும் பொருட்டு, நமது புதல்வனாகிய முருகக்கடவுளுக்கு நீங்

கள் யாவரும் படைகளாகக் கடவீர்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினர். அவ் வீரர்கள் இலக்கரும், நாடோறும் பேரன்புடையர்களாய், சிவசந்நிதியை அகலாது, திருத் தொண்டின் வழி நின்றார்கள்.

முன்னே பார்ப்பதியார் சபிப்ப, நவசத்திகள் நடு நடுங்கி, அவ்வம்மையாரை வழிபாடு செய்து கொண்டு, கருப்பத்தோடு பலகாலம் இருந்தார்கள். அந் நவசத்திக ளுடைய கருவினுள்ளே நந்தி கணத் தலைவர்கள் சிசுக்க ளாய்ப் புகுந்து காளையர்களாகி, சிவபெருமானைச் சிந்தித் துத் தொழுதுகொண் டிருந்தார்கள். அவர்கள் இவ்வாறு யோகஞ் செய்துகொண் டிருத்தலால் கருப்பம் மிகப் பார மாதலும், நவசத்திகள் சிவபெருமானையும் உமாதேவியா ரையும் வணங்கி நின்று, " அடியேங்கள் இந் நாள்காறும் இக் கருப்பத்தினால் வருந்தினேம். இனித் தாங்கலாற் றேம். திருவுளமிரங்கி யருளுங்கள்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்பொழுது சிவபெருமான் திருவுளமிரங்கி, தேவியாருடைய திருமுகத்தை நோக்கி, "உமையே! உன் காற்சிலம்பினின்றும் உதித்த இந் நவசத்திகள் உன் சாபங் காரணமாக நெடுங்காலம் கருப்பத்தைச் சுமந்து மிக வருந்தினார்கள். இனிப் புதல்வர்களைப் பெறும் பொருட்டு அருள் செய்க" என்று பணித்தருளி னர். உமாதேவியார் "நன்று" என்று அதற்கிசைந்து, திருமுறுவல் செய்து, நவசத்திகளை நோக்கி, "இனி நீங் கள் புதல்வர்களைப் பெறக்கடவீர்கள்" என்று திருவாய் மலர்ந்தருள, அவர்கள் வயிற்றினுள் யோகஞ் செய்து கொண்டிருக்கும் வீரர்கள் அதனை யறிந்து, யோகத்தை விடுத்து, மனமிக மகிழ்ந்து சிவபெருமானுடைய திரு வருளை நினைந்து தொழுது பிறக்கும் பொருட்டுத் தங்களுக் குள்ளே நினைத்தார்கள்.

நவசத்திகள் உமாதேவியாருடைய பெருங்கருணைத் திருவாக்கைக் கேட்கவும், கவற்சி நீங்கி, மகா தேவரையும் தேவியாரையும் வணங்கித் துதித்து, விடை பெற்றுக் கொண்டு அங்கு நின்று நீங்கி, ஓரிடத்தே சென்று புதல் வரைப் பெற்றார்கள். மாணிக்கவல்லியிடத்து வீரவாகுவும், மௌத்திகவல்லியிடத்து வீரகேசரியும், புட்பராகவல்லி யிடத்து வீரமகேந்திரரும், கோமேதக வல்லியிடத்து வீரமகேச்சுரரும், வைடூரிய வல்லியிடத்து வீரபுரந்தர ரும், வைரவல்லியிடத்து வீரராக்கதரும், மரகத வல்லி யிடத்து வீரமார்த்தாண்டரும், பவள வல்லியிடத்து வீராந்தகரும், இந்திரநீலவல்லியிடத்து வீரதீரரும் அவ தரித்தார்கள். இவ் வீரர்கள் ஒன்பதின்மரும் சிவபெருமா னுடைய திருவருளினாலே, தங்கள் தங்கள் அன்னையர்களு டைய நிறத்தை யுடையவர்களாய், பொன்னுடை யுடுத்த வர்களாய்ப் பலகாலம் வளர்ந்த உறுப்புக்களோடும் நவசத்தி களுடைய உந்தியின் வழியே பிரமதேவரைப்போல உதித் தார்கள். இவ்வண்ணம் உதித்த வீரர்கள் சிவபெருமானை யும் உமாதேவியாரையும் வணங்கி எழுதலும், சிவபெரு மான் பார்ப்பதியாரை நோக்கி, "நம் மைந்தர்களாகிய இவர்கள் அறிவுடையவர்கள், ஆற்றலுடையவர்கள், மான முடையவர்கள் ஒழுக்க முடையவர்கள், இவர்கள் புதியர்க ளல்லர், நந்திகணத்தலைவர்கள்" என்று சொல்லி யருளி னார். தேவியார் அது கேட்டு அம் மைந்தர்களுக்குத் திரு வருளைப் புரிந்து தனித்தனி ஈட்டி கொடுத்தனர். பின்னர்ச் சிவபெருமான் அவர்களெல்லாருக்கும் தனித்தனி வாளும் கொடுத்து "ஓரிலக்க மைந்தர்களோடு நீங்களுங்கூடி, உங்களுக்கு நாயகனாகிய அறுமுகக்கடவுளை நீங்காது, அவன் பணித்த தொண்டுகளைச் செய்துகொண்டொழுகக் கடவீர்கள்" என்று அருளிச்செய்ய, அவர்களும் அதற்

கியைந்து வணங்கினூர்கள். இவ்வொன்பது வீரரும் இலக்க வீரர்களோடு கலந்து, எம்பெருமானுடைய திருக்கோயிலை அகலாது, அங்கிருந்தார்கள். சத்திகள் ஒன்பதின்மரும் உமாதேவியாரை நீங்காது, அவர் பணித்த தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தார்கள்.

கந்தபுராணம் - சரவணப்படலம்

சிவபெருமான் உமாதேவியாரை நோக்கி, 'பிரமன் முதலிய தேவர்களின் துன்பம் ஒழியும்படி சரவணப் பொய்கையில் அவதரித்த நம் புதல்வனாகிய கந்தவேளை அழைத்துக்கொண்டு வருவோம்'' என்று சொல்ல, உமா தேவியார் "அப்படியே போய் அழைத்து வருவோம்" என்றெழுந்தனர். உடனே சிவபெருமான் உமாதேவியா ரோடு புறப்பட்டுச் சரவணப் பொய்கைக் கரையைச் சேர்ந்து, "உன் மகனைக் கொண்டுவா" என்று இறைவிக் குக் கட்டளையிட உமாதேவியார் அந்தப் பொய்கையில் இறங்கித் தன் புதல்வனாகிய சண்முகனுடைய ஆறு திரு வுருவத்தையும் தன்னிரண்டு கைகளால் அன்போடெடுத் துத் தழுவி, ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக் கரங்களும் சேர்ந்த ஒரு திருவுருவாகச் செய்தனர். பின்பு அக் குழந்தையை யெடுத்து உச்சிமோந்து முதுகுதடவி நிற்கையில், அன்பின் பெருக்கால் அம்மையாரின் ஸ்தனங் கள் பால் சுரந்தன. அப்பொழுது அந்தப் பாலை இறைவி யார் ஒரு மணிக்கிண்ணத்திலேற்றுத் தன் குமாரனுக்குண் பித்துக் கையிலேந்திச் சென்று, சிவபெருமானை வணங்கு வித்துப் பிறகு எடுத்து மார்போடணைத்துப் பெருங்கருணை யால் இறைவனுக்கும் தனக்கும் இடையே யிருத்தினர். இப்படி அமர்ந்திருந்த சோமாஸ்கந்தரை பிரமன் முதலிய தேவர்களெல்லாரும் கண்களிகூர நோக்கி, "அறுமுகக் கடவுளே! சூரன் முதலியோரால் மிகவும் துன்பப்பட்

டோம்; அவ்விடரொழித்து இனி எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்று புட்பமாரி பொழிந்து வாழ்த்தினர். அந்தவேளையில் கார்த்திகை முதலிய பெண்கள் அறுவரும் வந்து சிவபெருமானைப் பணிந்து நின்றனர். பெருமான் அவர்களை நோக்கி, "உங்களால் வளர்க்கப்பட்டமையால் இப் புதல்வனுக்குக் 'கார்த்திகேயன்' என்னும் பெயர் வழங்கும். உங்கள் நாளாகிய கிருத்திகையில் இவனைப் பூசித்து வணங்கினோருக்கு அவர் விரும்பினவற்றைத் தந்தருளுவோம்'' என்று வரங்கொடுத்தருளினர். அப்பொழுது உமாதேவியார் அப் புதல்வனை அன்போடெடுத்தலும் அபரஞானம் பரஞானம் என்னும் தனங்களினின்றும் பெருகின பாலானது கங்கையாறு போலச் சரவணப் பொய்கையிற் பாய்தலும், அதில் சாபத்தால் மீனுருவாயிருந்த பராசர முனிவர் புத்திரர் அறுவரும் அந்தப் பாலையுண்டு தமது சாபமொழிந்து பழையபடியே முனிவர் உருக்கொண்டு பொய்கையை நீங்கி, "எங்களுக்கு ஞானோபதேசம் செய்தருள வேண்டும்'' என்று சிவபெருமானைப் பிரார்த்திக்க, பெருமான் அவர்களை நோக்கி "நீங்கள் திருப்பரங்குன்றை அடைந்து தவஞ் செய்யுங்கள், இம் மைந்தன் அங்குவந்து உங்களுக்கு மெய்ஞ்ஞானம் போதிப்பான்'' என்று, அருளிச்செய்ய, அவர்களும் விடைபெற்றுப் போனார்கள். சிவபெருமானும் பிரமன் முதலியோரை விடைதந்தனுப்பித் தானும் உமாதேவியாரோடும் குமரவேளோடும் திருக்கைலையை யடைந்து வீற்றிருந்தனர். அப்பொழுது இலக்கத் தொன்பதின்மரும் வந்து கந்தக்கடவுளைத் திருவடி தொழுது அவரை அகலாது சூழ்ந்திருந்தனர்.

இந்தச் சரித்திரத்தை இம்மட்டில் நிறுத்திக் கொள்ளாமல் முற்றிலும் படித்துணர்வது பதிபுண்ணியமாகும்.

அது கொண்டே இவ்விடத்தில் தொகை யாகக் கூறிய கந்த புராணம் சேர்க்கப்படுகின்றது.

பாயிரப்படலம்

"பூமிசை யிருந்த புத்தேள் புரிந்திடு புதல்வர் தம்முள்
ஏமுறு தக்க னீன்ற விருந்தனிக் குமரி யான
தீமையை யகற்ற வம்மை சிந்தைசெய் திமைய மன்னன்
மாமக ளாகி நோற்று வைகினள் வைகு நாளில்.

அவுணர்க ளோடு சூர னவனிமேற் றோன்றி நோற்றுச்
சிவன்வர மளிக்கப் பெற்றுத் தேவர்யா வரையும் வென்று
புவிதனி லுவரி தன்னிற் புங்கவர் புனைவன் செய்த
தவலரு மகேந்தி ரத்தில் வைகுறான் றானை சூழ.

அனையதோர் காலை வெள்ளி யடுக்கலிற் சனக னாதி
முனிவரர் தமக்குத் தொல்லை மூவகைப் பதமுங் கூறி
இனியதோர் ஞான போத மித்திற மென்று மோனத்
தனிநிலை யதனைக் காட்டித் தற்பர னிருந்தா னன்றே.

வீற்றிருந் தருளு மெல்லை வெய்யசூர் முதலா வுள்ளோர்
ஆற்றவுந் தீங்கு செய்தே யமரர்கள் சிலரைப் பற்றிப்
போற்றிடுஞ் சிறையி லுய்ப்பப் புரந்தரன் முதலா வுள்ளோர்
மாற்றருந் துயரின் மூழ்கி மறைந்தன ராகி வைகி.

சங்கரன் மோனத் தன்மை சதுர்முகற் குரைப்ப வன்னோன்
வெங்கணை வேளை யுய்ப்ப விழித்தவன் புரமீ றாக்கிப்
பங்கயன் முதலா வுள்ளோர் பலரும்வந் திரங்கிப் போற்ற
அங்குறை மோன நீங்கி யவர்க்கருள் செய்தா னையன்.

ஓரெழு முனிவர் தம்மை யோங்கலுக் கிறைவன் றன்பால்
பேருண் முறையாற் றாண்டிப் பெருமணம் பேசு வித்துப்
பாரறு நோன்பின் மிக்க பராபரை யன்பு தேர்ந்து
காரணி கண்டத் தெந்தை கணங்களோ டிமயம் புக்கான்.

புடையக விமயந் தன்னிற் புவனங்கண் முழுது மீண்ட
வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலு மலயந் தன்னில்
கடமுனி தன்னை யேவிக் கவுரியை மணந்து பின்னர்
அடன்மத வேளை நல்கி யநங்கனே யாகச் செய்தான்.

மன்புனை கைலை தன்னின் மலைமக ளோடு மீண்டு
முன்பென வமர்ந்து நாதன் முழுதுல குயிர்கட் கெல்லாம்
இன்பமும் புணர்ப்பு நல்கி யிமையவர் யாரும் வேண்டத்
தன்பெரு நுதற்கட் டீயாற் சரவண பவனைத் தந்தான்.

அந்தமில் விளையாட் டுள்ள வறுமுகக் கடவு டன்னைத்
தந்திடு மெல்லை யன்னோன் றுணையந் தலைவ ராக
முந்திய விறல்சேர் மொய்ம்பன் முதலிய விலக்கத் தொன்பான்
நந்திதன் கணத்தி னோரை நங்கைபா லுதிப்பச் செய்தான்.

அண்ணலங் குமரப் புத்தே ளலகிலா வாடல் செய்து
மண்ணுறு கடலும் வெற்பும் வானமுந் திரிபு செய்து
துண்ணெனக் குழவி யேபோற் றோன்றிட வதனை நோக்கி
விண்ணவர் யாருஞ் சூழ்ந்து வெஞ்சமர் புரிந்து நின்றார்.

ஆரமர் செய்து ளாரை யட்டட னுயிரு நல்கிப்
பேருரு நிலைமை காட்டிப் பெறலருங் காட்சி நல்கி
நாரதன் மகத்திற் றோன்றி நடந்ததோர் செச்சை தன்னை
யூர்திய தாகக் கொண்டே யூர்ந்தனன் னொப்பி லாதன்.

மறைமுதற் குடிலை தன்னின் மாண்பொருண் முறைக டாவி
வெறிகமழ் கமலப் புத்தேள் விடைகொடான் மயங்கக் கண்டு
சிறையிடை யவனை வைத்துச் செகமெலா மளித்துத் தாதை
குறையிரந் திடவே விட்டுக் குறுமுனிக் கதனை யீந்தான்.

ஆவதோர் காலை யீச னறுமுகப் பரனை நோக்கி
ஏவரு முடிக்க வொண்ணு திருந்தசூர் முதலோர் தம்பால்
மேவினை பொருது வென்று விரிஞ்சனே முதலா வுள்ள
தேவர்த மின்ன னீக்கிச் செல்லுதி குமர வென்றான்.

விராவிய விலக்கத் தொன்பான் வீரரை வெய்ய பூதர்
இராயிர வெள்ளத் தோரை யிகற்படை மான்றே ரோடு
பராபர னுதவித் தூண்டப் பன்னிரு புயத்த னேகித்
தராதலம் புக்கு வெற்பைத் தாரக னோடு செற்றான்.

பூவினன் முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்தத்
தேவர்தங் கிரியின் வைகித் தென்றிசை நடந்து தாதை
மேவரு மிடங்கள் போற்றி மேதகு சேய்ஞ னண்ணி
மூவிரு முகத்தன் முக்கண் முன்னவன் படையைப் பெற்றான்.

பானருள் படையைப் பெற்றுப் பாரசான் சிறார்வந் தேத்தத்
திருவருள் புரிந்து சென்று செந்திலின் மேவிச் சூரன்
வரமொடு திருவுஞ் சீரும் வாசவன் குறையும் வானோர்
குரவனை வினவி யன்னோன் கூறவே குமரன் றேர்ந்தான்.

அறத்தினை யுன்னி யைய னடல்சேர் மொய்ம்பன் றன்னை
உறத்தகு மாபிற் றூண்டி யொன்னலன் கருத்தை யோர்ந்து
மறத்தொடு கடலுள் வீர மகேந்திர மணுகி யேதன்
புறத்துள தானை யோராற் சூர்கிளை பொன்றச் செற்று.

சீயமா முகத்த னென்னுஞ் செருவலான் றனையு மட்டு
மாயையுந் திருவுஞ் சீரும் வரங்களும் பிறவு மாற்றி
ஆயிர விருநா லண்டத் தரசனுஞ் சூரன் றன்னை
ஏயெனு மளவில் வேலா லிருதுணி படுத்து நின்றான்.

துணிபடு சூர னோர்பால் சூட்டுவா ரணமா யோர்பால்
பிணிமுக மாகி நிற்பப் பெருந்தகை யவற்றை யூர்தி
அணிபடு துவச மாக்கி யப்பகல் செந்தில் வந்து
மணிசொரி யருவி தூங்கும் வான்பரங் குன்றஞ் சேர்ந்தான்.

தெய்வத யானை யென்னுஞ் சீர்கெழு மடந்தை தன்னை
அவ்விடை வதுவை யாற்றி யங்ஙனஞ் சிலநாள் வைகி
மெய்விய னுலகிற் சென்று விண்ணவர்க் கரச னாக்கி
எவ்வமின் மகுடஞ் சூட்டி யிந்திரன் றன்னை வைத்தான்.

சில்பக லங்கண் மேவிச் சேனையோ டணங்குந் தானும்
மல்லலங் கயிலை யேகி மங்கைபங் குடைய வண்ணல்
மெல்லடி வணங்கிக் கந்த வெற்புறை நகரி னேகி
எல்லையி லருளால் வைகித் தணிகையி லெந்தை வந்தான்.

சாரலி னோங்கு தெய்வத் தணிகைமால் வரையின் மீது
வீரம துடைய வேலோன் வீற்றிருந் திடலு மங்கண்
நாரதன் வந்து தாழ்ந்து நவைதவி ரெயின மாதின்
சீரெழி னலத்தைக் கூற வவள்வயிற் சிந்தை வைத்தான்.

வள்ளிமால் வரையிற் போந்து மானிடைப் பிறந்த தெய்வக்
கிள்ளையை யடைந்து போற்றிக் கேடில்பல் லுருவங் காட்டிக்
கள்ளமோ டொழுகிப் பன்னாட் கவர்ந்தனன் கொணர்ந்து பின்னர்த்
தெள்ளுசீர் வேடர் நல்கத் திருமணஞ் செய்து சேர்ந்தான்.

செருத்தணி வரையில் வந்து சிலபகல் வள்ளி தன்னோ
டருத்தியின் மேவிப் பின்ன ரவளொடுங் கந்த வெற்பின்
வரைத்தனிக் கோயில் புக்கு வானமின் பிரிவு நீக்கிக்
கருத்துற விருவ ரோடுங் கலந்துவீற் றிருந்தான் கந்தன்."

இந்தத் திருவிருத்தங்களால் சுப்பிரமணியக்கடவுள் தோற்றம் முதல் அவர் வள்ளியம்மையை மணந்து கந்த மாதனம் சென்றமை ஈறுக அறியக் கிடந்தமை காண்க.

## குந்தப்படைச்சிறப்பு

பிறந்தவோன் பதின்மர்குந்தப் பெருமையாம் பேசமாட்டோம்
பறந்தன கழுதும் பாறும் பயிரவி காளி யஞ்ச
மறந்தகு மவுணர ராட்ட மடங்கின மகிழ்ச்சி யால்வாய்
திறந்தன வலகை யீட்டஞ் செய்யவாய்ச் சிறுவ ரோடே.

இ - ள். அவ்வாறு உதித்த வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களுடைய திருக்கரத்தில் இருந்த உமையவளால்

கொடுத்த படையாகிய ஈட்டியினது பெருமையை எம்மாற் சொல்ல முடியாது; ஆயினும் ஒருவாறு சொல்லுகின்றோம். அவர்கள் செய்த யுத்தத்தைக் கண்டு கழுகின் கூட்டங் களும், பருந்தின் கூட்டங்களும் ஆகாயத்தில் வட்டமிட் டுப் பறந்தன. துர்க்கையும் காளியும் கண்டு அஞ்சும்படி, அதர்மத்தில் மிகுந்த சூரபதுமன் முதலிய அவுணர்களது பெருய கூத்தாட்டங்கெட்டன. அவ்வசுரர்களது கொழுத்த பிணக் குப்பையைக் கண்டு மகிழ்ந்து பேய்க் கணங்கள் தங்கள் தங்கள் சிவந்த வாயினையுடைய சிறிய குழவிக ளோடும் வாயைத் திறந்தன எ - ம்.

'குந்தம்' என்பது, படைத்தொழிலுக்குரிய ஒரு சிறந்த ஆயுதம். இது கைவேல், ஈட்டி, சவளம் என்று பண்டைய நூல்களில் ஆங்காங்கே வரக் காணப்படுகின்றது. ரு

## தகரைவாகனமாக்கியசிறப்பு

### கலிவிருத்தம்

ஓதிய வேள்வியி னுவப்ப நாரதன்
போதவே தகர்தனைப் போங்கு தீத்தர
வேதனைப் படுப்பதை விரைந்து கட்டியே
சேய்தனக் குதவின திருச்செங் குந்தமே.

இ - ள். நாரத முனிவர் தாம் விரும்பிய பயனைப் பெற்றுச் சந்தோஷமடைய, வேதத்திற் சொல்லிய விதி வழாது செய்த யாகத்தில் பொங்கி எரியாநின்ற அக்கினி யானது, மிகுந்த வலிமையினை யுடைய ஆட்டுக்கடாவைத் தர, அது தம்மையும் அன்றிச் சகல உலகங்களையும் துன் பப் படுத்துவதைக் கண்டு, நாரத முனிவரும் தேவர்களும் வெள்ளியங்கிரியில் திருவிளையாடலைச் செய்யாநின்ற முரு கக்கடவுளை யடைந்து முறையிட, அவரது கட்டளையினால்

அழகிய செங்குந்தராகிய வீரவாகுதேவர் அதிசீக்கிரத்திற் சென்று அவ் வாட்டுக்கடாவைக் கட்டி அம் முருகக் கடவுளுக்கு வாகனமாக உதவினர் எ - ம்.

சேய்தனக்கு என்பது ஆசிடையிட்ட எதுகை.

'தகர்தனை விரைந்து கட்டியே சேய்தனக் குதவின திருச் செங்குந்தம்' என்பது,

"ஆடலந் தொழின்மேல் கொண்டே யனைவரு மிரியச் செல்லும்
மேடமஞ் சுறவே யார்த்து விரைந்துபோய் வீர வாகு
கோடவை பற்றி யீர்த்துக் கொண்டுராய்க் கைலை நண்ணி
ஏடுறு நீபத் தண்டா ரிளையவன் முன்ன ருய்த்தான்"

என்பதை யுணர்த்துகின்றது. ௬

சரித்திரவரலாறு - கந்தபுராணம் - தகரேறுபடலம்

நாரதமுனிவர் சிவப் பிரீதியாக வேள்வி யொன்று செய்தார். அவ் வேள்வித் தீயினின்றும், தகர் ஒன்று தோன்றிற்று. அவ்வாறு தோன்றிய ஆடானது, "யாகத்தின்கண் நங்களினத்திற் பலவற்றையும் கொலைசெய்கின்றமையால், இவ் வுலகத்தவரை யான் கொல்ல வந்தேன்" என்று மேலெழுந்த தோற்றமெனவும், ஊழிக் காற்றும் ஊழித் தீயும் இடியும் ஓர் உருக்கொண்டு வந்ததெனவும் ஓடித்திரிந்து உயிர்களை வருத்திற்று. இவ்வாறு உயிர்கள் வருந்துவதைக் கண்ட தேவர்களும் நாரத முனிவரும் மற்றை முனிவரும் திருக்கைலாயம் அடைந்து குமாரக்கடவுளை வணங்கி அவ்வாட்டின் கொடுமையைக் கூறிச் சரணமடைந்தனர். அப்போது குமாரக்கடவுள் அவர்களைப் பார்த்து "நீங்கள் சிறிதும் அஞ்சன்மின்" என்று சொல்லி அபயம் கொடுத்துத் தம் பரிவாரத்துள் வீரவாகுதேவரை நோக்கி " நீர் சென்று நாரதர் செய்த வேள்வித் தீயிற் பிறந்து உயிர்களை வருத்தும் ஆட்டினை விரைந்து கொண்டு

வாரும்'' என்று கட்டளை யிட்டனர். உடனே வீரவாகு தேவர் கைலைமலையை நீங்கிக் கடல்சூழ்ந்த உலகமுழுதும் அவ்வாட்டினைத் தேடிக் காணுமல் பிறகு பிரம பதத்தைக் கிட்டி அவ்வாட்டினைக் கண்டனர். அது கண்ட வீரவாகு தேவர் விரைந்துசென்று அவ்வாட்டின் கோட்டைப் பிடித் திழுத்துக்கொண்டு வந்து குமாரக்கடவுள் சந்நிதானத்தில் விடுத்து வணங்கி நின்றார். பின்னர்க் குமரநாயகன் தேவர் களையும் முனிவர்களையும். நோக்கி, ''இனி நீவிர் உமது இருக்கையிற் சென்று வேள்வி செய்மின்'' என்று விடை கொடுக்க, அவர்கள் வணங்கி விடைபெற்றுப் போயினர். குமாரக்கடவுள் நாமெல்லாம் உய்யும் பொருட்டு அவ்வாட் டுக்கடாவினை வாகனமாகக்கொண்டு ஏறியருளினர். விடை கொண்டு சென்ற நாரதமுனிவர் பூமியில் வந்து வேள்வியை முடித்தனர். அன்று முதல் முருகக்கடவுள் அவ்வாட்டை வாகனமாக வூர்ந்து வருவாராயினர்.

## பிரமனைச்சிறையிட்டசிறப்பு

### கலிநிலைத்துறை

பொதிய மால்வரைக் குறுமுனி தேறவும் பொருள்சொன்ன
மதியை யாறென வுடையவோர் மூவிரு வதனத்தான்
கதியை யாற்றியுங் குணத்தோடு பழகி யுங்காணு
விதியை மேவலர் நடுங்கிடத் தளையிடு மிளிர்குந்தம்.

இ - ள். பெரிய பொதிய மலையை இடமாக வுடைய அகத்திய முனிவர் மெய்ஞ்ஞானத்தைத் தெளிந்து கொள் ளும்படி உண்மைப் பொருளை உபதேசித்த, ஆறு முழுமதி யென்று சொல்லும்படி ஒப்பற்ற ஆறு முகத்தை உடையவ ராகிய முருகக்கடவுள், விளங்காநின்ற குந்தத்தை யுடைய வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களால் சத்திய பதவிக்

குத் தலைவனாக இருந்து சிருட்டித் தொழிலைச் செய்தும் இராசத குணத்தோடு பழகியும் பிரணவத்திற்குப் பொருளறியாது விழித்துக்கொண் டிருந்த பிரமனைப் பகைவர் நடுக்கங் கொள்ள விலங்கிடுவர் எ - ம்.

கதி - சிருட்டித்தொழில். மிளிர்குந்தம் - அன்மொழி.

'பொதிய மால்வரைக் குறுமுனி தேறவும் பொருள் சொன்ன' என்பது,

"ஆங்குறு குமரப் புத்தே ளருமறைக் காதி யாகி
யோங்குமெய்ப் பொருட்கு மேலா மோரெழுத் துரையி னுண்மை
தீங்கற வணங்கிக் கேட்பச் சிறுமுனிக் குதவி மற்றும்
பாங்குறு மிறைவ னாலும் பரிவினு லுணர்த்தி னானல்"

என்பதை யுணர்த்துகின்றது.

'குறுமுனி தேறவும்' என்ற உம்மையால், மற்றும் ஞானோபதேசம் வரலாற்று முறையிற் கேட்டுணர்ந்தவர்களை யெல்லாம் கொள்ளக் கிடந்தமை காண்க.

'விதியைத் தளையிடு மிளிர் குந்தம்' என்பது,

"மறைபு ரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மேல்
உறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினு லுதைத்து
நிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்"

என்பதை யுணர்த்துகின்றது.

பரிசனர் - வீரவாகுதேவர் முதலியோர். எ

சரித்திரவரலாறு - கந்தபுராணம் - அயனைச்சிறைபுரிபடலம்

ஒருநாள் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களெல்லாரும் திருக்கைலாச மலையை அடைந்து சிவபெருமானை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, வாசலிலே வந்தார்கள். அங்கே

இலக்கத் தொன்பதின்மர் அன்போடு சூழ்ந்து வணங்க நின்ற சண்முகப்பெருமாள் பிரமனை நோக்கி, "இங்கே வருக" என்றழைக்க, அவன் வந்து அவரை வணங்காது நின்றனன். அது கண்ட குமாரப்பெருமாள் பிரமனைப் பார்த்து, "நீர் இவ்விடத்தில் இரும்" என்று சொல்லி, "உமது தொழில் யாது" என்று கேட்டார். அவன் "பரமசிவன் திருவாணையால் யான் சிருட்டித் தொழில் செய்பவன் என்று கூறினன். முருகவேள் புன்முறுவல் செய்து, "நீர் உலகமுழுதும் படைப்பது உண்மையேயாயின் பிரணவப் பொருளை விளங்க "உரைக்கவருமா" என்று கேட்டனர். பிரமன் அப் பொருள் சொல்ல அறியாமல் திகைத்து நின்றனன். பெரியபெருமாள் "அது நமக்குப் பீடமாய் யாவருந் தோன்றும் இடமாய் வேதங்கட்கு முதலாய்க் காசியில் இறப்பவர்களுக்குப் போதிப்பதா யிருப்பது; நீர் அப் பிரணவப் பொருளை உணராமல் எப்படி படைப்புத் தொழில் செய்யவல்லீர்" என்று கோபித்து அவன் தலையிற் குட்டி, வீரவாகுதேவர் வழியாக கந்தகிரியில் சிறைப்படுத்தினர். பின்பு குமாரக்கடவுள் ஒரு கரத்தில் கண்டிகை ஒரு கரத்தில் குண்டிகையுந் தரித்து, இரண்டு கைகள் அபய வரதங்களாகக் கொண்டு ஒரு திருமுகத்தோடிருந்து தானே படைப்புத் தொழிலை நடத்தி வந்தார். பிரமனுடன் வந்த தேவர்களெல்லாரும் நடுக்கம் கொண்டு ஓடிவிட்டார்கள்.

## தாரகன்வதைச்சிறப்பு

### கலிவிருத்தம்

வனமுறு வாசமா வைகல் விட்டியா
சனமுற விண்ணிடந் தனிவை குந்தமும்
இனனுறு பங்கய மூவர்க் கெய்தவே
சினமுறு தாரகற் செறிசெங் குந்தமே.

இ - ள். அகத்தியனுதிய முனிவர்கள் அவுணர்களால் துன்பம் அடைந்து காட்டிற் குடியாக இருத்தலை விட்டுத் தங்கள் தங்கள் பூசா கயிங்கரியங்களை நடத்தவும், சுவர்க்க லோகமும் ஒப்பற்ற வைகுந்தமும் சூரியனைக்கண்டு அலரா நின்ற தாமரை யாசனமும், தேவேந்திரன் திருமால் பிரமன் இம் மூவருக்கும் கிடைத்திருக்கவும், கோபத்தைப் பொருந் திய தாரகாசுரனை யுத்தகளத்திலே நாசம் பண்ணினோர் செங்குந்தத் தலைவர்களாவர் எ - ம்.

'சினமுறு தாரகற் செறி செங்குந்தம்' என்பது, தாரக சம்மாரத்தில் வீரகேஸரி,

"கொற்றவி னுழவன் வீர கேஸரி யதனை நோக்கிச்
செற்றமொ டேகிச் செவ்வேள் சேவடி மனத்துட்கொண்டு
பற்றிய தனுவை வாங்கிப் பகழிநா றுய்த்துத் தீயோன்
பொற்றட மவுலி தள்ளிப் புணரியு நாண வார்த்தான்"

என்பதையும், வீரவாகுதேவர்,

"தார கப்பெய ரவுணர்கோன் மாயையின் சமரும்
ஆறு மச்சுறு கின்றது மாடன்மொய்ம் புடையோன்
பேர முற்பொறி கதுவுற நோக்கியே பிறங்கும்
வீர பத்திர னெடும்படை யெடுத்தனன் விடுவான்"

"துங்க வுக்கிரச் சிம்புண்மாப் படையினைத் தூயோன்
செங்கை பற்றலு மன்னது தாரகன் செயலால்
அங்க ணின்றிடு மாயைகண் டச்சமுற் றழுங்கிப்
பொங்கு பானுமுன் னிருளென முடிந்ததப் பொழுதே"

"தண்பு ணர்ப்புறு மாயைதா னுடைதலுந் தமியாய்
முன்பு நின்றதோர் தாரகன் மொய்ம்புளான் றன்னைப்
பின்பு மாயையிற் படுத்தவோர் சூழ்ச்சியைப் பிடித்து
மின்பொ லிந்ததன் றேரைவிட் டோடினன் விரைவில்"

என்பதையும் உணர்த்துகின்றது.

அ

பானுகோபன்வதைச்சிறப்பு

பூட்டிய தேரோடும் பொலிந்த பானுவை
யீட்டிய தொட்டிலி னிறுக்கு மைந்தனை
மூட்டிய சமரிடை முடித்து மாசறத்
தீட்டிய வீரர்கைச் சிறந்த குந்தமே.

இ - ள். குழந்தைப் பருவத்தில் தன்மீது சூரிய கிரணந் தாக்கி யழலக் கோபித்து, ஏழு குதிரைகளைப் பூட்டிய தேரினோடும் பொலிவுபெற்ற சூரியனைத் தெரிந் தெடுத்துச் சேர்த்த நவமணிகளாற் செய்த தொட்டிலோடுஞ் சேர்த்து இறுக்கிக் கட்டிய பானுகோபன் என்னும் சூரபதுமன் பிள்ளையை மூளுவித்த யுத்தகளத்தினிடத்துச் சங்கரித்து, அவுணர்களாலாகிய குற்றம் நீங்கும்படி புகழை உலகத்தில் நன்றாக எழுதி வைத்தது நவவீரர்களது கையிற் பிடித்த சிறப்புப் பெற்ற குந்தம் எ - ம்.

தீட்டிய என்பதில் துவ்விகுதி தொகுத்தல்.

'பானுவைத் தொட்டிலில் இறுக்கு மைந்தன்' என்பது,

"கட்டழ குடைய மைந்தன் கம்பலங் கொண்ட செம்பொன்
தொட்டிலிற் றுயிலு மெல்லை யொருபகற் சுடரி னென்றாழ்
விட்டதோர் நூழை தன்னுன் மேவியே யனையன் மெய்யில்
பட்டதங் கதனை நாடிப் பரிதியைச் சுளித்துப் பார்த்தான்"

"பார்த்திடு கின்ற மைந்தன் பன்மணித் தொட்டி னின்றுஞ்
சீர்த்தெழுந் தண்டம் பாய்ந்து செங்கதிர்ச் செல்வற் பற்றிக்
கார்த்திடு புயங்கங் கவ்வும் படித்தெனக் கரத்திற் கொண்டு
பேர்த்துமோரிறையில்வந்தான் றவத்தினும்பெரிதொன் றுண்டோ"

என்பதையும்,

'பானு மைந்தனை சமரிடைத் தீட்டிய குந்தம்' என்பது,

"தீய வன்றனி முயற்சியை நோக்கியே திறலோன்
தூய வாள்கொடே யன்னவ னிடக்கையைத் துணிப்ப
மாயை தொல்படை விடுத்திடு வேனென மதித்தான்
ஆய காலையி லறிஞனு மவன்றலை யறுத்தான்"

"வாளி லங்கவ னடுதலுஞ் சென்னியும் வரைநேர்
தோளும் யாக்கையும் வீழ்ந்தன சூரியன் பகைஞன்
நாளு லந்தன னவனுயிர் வெளவியே நடுவன்
ஆளி மொய்ம்பனை வழுத்தியே தென்புலத் தடைந்தான்"

என்பதையும் உணர்த்துகின்றது. சுசு

கடப்பமாலையணிந்தசிறப்பு

பங்கமி லரிமுகப் பலைற லேக்கிளை
மங்கவே நூறியோர் வாகை மாலையை
யெங்கள்வேற் படைதனக் கென்று சூட்டியோண்
செங்கடம் பணியுமால் செய்ய குந்தமே.

இ - ள். இரத்தத்தாற் சிவந்த குந்தமானது கெடாத வரத்தைப் பெற்ற சிங்கமுகாசுரனுடைய பல தலைகளாகிய கிளைகளைக் கெடும்படி சங்கரித்து, ஒப்பற்ற வெற்றிமாலையை எங்கள் பெரியபெருமாள் கையிற் கொண்ட வேலாயுதத்திற்கே தக்கதென்று தரித்து, விளக்கமாகிய செங்கடப்ப மாலையைத் தான் தரித்துக்கொள்ளும் எ - ம்.

'பங்கமில் அரிமுகப் பலைறலைக் கிளை மங்கவே நூறி செங்கடம் பணியும் குந்தம்' என்பது,

"நூற்றுவ ரொருங்கு நேர்ந்து நோன்றலைச் சிலைகள் வாங்கி
மேற்றிகழ் முகில்கான் றென்ன வீசிய விசிகந் தன்னை
ஆற்றல்சேர் வீரன் காணு வயிற்கணை யநந்த கோடி
காற்றென்த் துரந்து மாற்றிக் கடவுளர் புகழ வார்த்தான்"

"காப்புடைச் சிலையின் விஞ்சை கற்றதே யன்றி யெம்போல்
வாட்படை பயின்றி லாய்கொல் வல்லையே லப்போர் செய்யச்
சேட்படை யன்றி யெம்முன் சேர்தியால் வீர வென்னுத்
தோட்புடை கொட்டி யார்த்தார் கூற்றனுந் துளக்க மெய்த"

"வன்றிற லவுணன் மைந்த ருரையினை வள்ளல் கேளா
நன்றிது புகன்றீ ரென்னு நகைசெய்து நாதன் றந்த
மின்றிகழ் சுடர்வாள் கொண்டு விரைந்துகீழ்த் தலத்திற் பாய்ந்து
சென்றன னதனை நோக்கித் தேவரு மிடுக்கண் செய்தார்"

"ஊறிலாத் தன்மை நோக்கி யுவனையாம் பற்றி மெல்லக்
கோறலே கரும மென்னுக் குழுவொடு மவனைப் புல்லச்
சீறினன் றன்வா ளோச்சிச் சிறிதுமெய் தெரியா வண்ணம்
நூறினன் கொல்லோ வென்ன நூற்றுவர் தமையு மட்டான்"

என்பதை யுணர்த்துகின்றது. கo

புலிக்கொடிபெற்றசிறப்பு

வனப்புறு மிளவலும் வரச்செவ் வேற்குகன்
கனப்பக லாறினிற் கலாப மேறியே
யினப்புகழ் சேவலங் கோடிதற் கேற்றுவெஞ்
சினப்புலிக் கோடிதரச் செறிசெங் குந்தமே.

இ-ள். அழகு பொருந்திய இளவலாகிய வீரவாகு தேவர் முதலிய நவவீரர்களும் தம்மைச் சூழ்ந்துவர, இரத்தத்தாற் சிவந்த வேலாயுதத்தை யுடைய முருகக்கடவுளானவர், பெருமை பொருந்திய ஆறு நாளையில் சூரபதுமனைச் சங்கரிக்க, அவன் கடலில் தலை கீழாக மாமர வுருவங் கொள்ள, அதை வேலினால் இருபிளவாக்க, அவ்விரு பிளவும் மயிலும் கோழியும் ஆகி வர, அம் மயிலை வாகனமாக ஏறித் தன்னினத்தைப் புகழாநின்ற கோழியைக் கொடி

யாகத் தமது கையில் தாங்கிக் கொடிய கோபத்தை யுடைய சூரபதுமனது புலிக்கொடியைக் கொடுக்க அச் செங்குந்த வீரர்கள் பெற்றனர் எ - ம்.

கலாபம் - ஆகுபெயர், கலாபம் என்பது மயிற்றோகை.

செறி எனனும் பகுதி வினைமுற்றுப் பொருளது. ' கள்வரும் நேர் ' எனபது போல.

'செவ்வேற் குகன் கலாபமேறிச் சேவலங் கொடி தற் கேற்றுப் புலிக்கொடி தரச் செறி செங்குந்தம்' என்பது,

"சீர்திகழ் குமர மூர்த்தி செறிவிழி கொண்ட தொல்லை
யூர்தியி னிருக்கை நீங்கி யுணர்வுகொண் டொழுகி நின்ற
சூர்திகழ் மஞ்ஞை யேறிச் சுமக்குதி யெம்மை யென்னுப்
பார்திசை வான முற்றும் பரியென நடாத்த லுற்றான்"

"அக்கண மெம்பி ரான்ற னருளினு லுணர்வு சான்ற
குக்குட வுருவை நோக்கிக் கடிதினீ கொடியே யாகி
மிக்குயர் நமது தேரின் மேவினை யார்த்தி யென்னத்
தக்கதே பணியி தென்று வெழுந்தது தமித்து விண்மேல்"

"சென்னிறங் கெழீஇய சூட்டுச் சேவலங் கொடியொன் றாகி
முன்னுறு மனத்திற் செல்லு முரண்டகு தடந்தேர் மீப்போய்
இந்நில வரைப்பி னண்ட மிடிபட வுருமே றுட்க
வன்னியும் வெருவ வார்த்து மற்றவ ணுற்ற தன்றே"

"சூரனுக் குரிமை யான சுடர்புலிப் பதாகை தன்னைப்
பேரமர் விளைத்த வீரப் பெருந்தகை தனக்கு நல்கி
ஏரம ராசி கூறி யிம்மென வெழுந்து கோயிற்
சாரவே போந்தா னென்றுஞ் சலமிலாக் குமரன் மாதோ"

என்பதை யுணர்த்துகின்றது. கக

### தேவர்கள்சிறைநீக்கியசிறப்பு

குறையினைக் கடவுளர் கூறக் கேட்டவர்
துறையினை நிறுவியே சூர்த டிந்துநான்
மறையினை வழுவற வளர்த்துத் தேவர்தஞ்
சிறையினை மீட்டது திருச்செங் குந்தமே.

இ-ள். தேவர்கள் சூரபதுமனால் தங்கள் தங்கள் கர்மானுட்டானமும் முறை செலுத்தன் முதலிய செயல்களையும் விட்டுத் துன்பப்படும் குறைகளைச் சொல்லக்கேட்டு அச்சூரபதுமன் முதலிய அவுணர்களைக் கொன்று, அத்தேவர்களை மகேந்திர புரத்தினின்றும் சிறைமீட்டு அவரவர்கள் செய்யுந் தொழிலை நிலைபெற வைத்து, இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் குற்றமற வளர்வித்த புகழை யுடையது அழகிய செங்குந்தம் எ-ம்.

'குறையினைக் கேட்டுத் தேவர்தம் சிறையினை மீட்டது திருச் செங்குந்தம்' என்பது,

"வம்மின்கள் வம்மின்கள் வானத்தீ ரெல்லீரும்
நம்மை யயர்வித்த நொறில்ப ரித்தேர் வெஞ்சூரை
அம்ம வவுண ரனிகத் துடனெங்கோன்
இம்மெனவே வேலா லிதுபோழ் தெறிந்தனனே"

"என்றுங் கிசைப்ப விமையோ ரதுகேளாப்
பொன்றாது முத்தி புகுந்தோ ரெனமகிழ்ந்து
வன்றாண் மிசைப்பிணித்த வல்லிகளின் மூட்டறுத்துச்
சென்று ரவுணன் றிருநகர நீங்கினரே"

என்பதை யுணர்த்துகின்றது. கஉ

### பொன்னகர்ச்சீர்பெறச்செய்தசிறப்பு

தாருவுஞ் சுரபியுந் தவள வேழமும்
தாருடைப் புரவியுஞ் சசியுங் கைம்மிசைப்
போருடை வச்சிர வாளும் பொன்னகர்ச்
சீருறும் படியவுண் செறிசெங் குந்தமே.

இ - ள். அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் ஆகிய பஞ்சதருக்களும், காமதேநுவும், வெள்ளிய ஐராவதமும், சதங்கைமாலை முதலிய பல மாலைகளை யுடைய உச்சைச்சிரவம் என்னும் குதிரையும், இந்திராணியும், கையின்கண் தாங்கிய பகைவரது போரை அழிக்காநின்ற வச்சிராயுதமும், பொன்னுலகத்தில் அரசிருத்தன் முதலிய பல சிறப்புகளுமாகிய இவற்றைத் தேவேந்திரன் அடைந்து வீற்றிருக்கும்படி சூரபதுமன் முதலிய அவுணர்களை அழித்தது செங்குந்தம் எ - ம்.

உடை வச்சிரவாள்-வினைத்தொகை. சீருறும்படி என் புழி, எண்ணும்மை விகாரத்தாற் றொக்கது. அவுண் - ஆகுபெயர். செறி - பகுதி வினைமுற்றுப் பொருளது.

'பொன்னகர்ச் சீருறும்படி யவுண்செறி செங்குந்தம்' என்பது.

"போரிடை விழுந்த பூதர் தங்களை யெழுப்பிப் பொல்லாச்
சூரன்முன் கவர்ந்த தேவர் தொல்வள முழுதுந் தன்பாற்
சாருற வழைத்து வீர வாகுவாற் சயந்த னோடும்
ஆரும்வின் னவர்தங் காவ லகற்றிநீ ரிறையை நோக்கி"

என்பதையும்,

"கந்தவேள் பணிதனைக் கண்டு பொன்னகர்
முந்திய படிவள முதிர்ந்து வாழ்வுற
இந்திரற் காக்கிவைத் தெழுந்து போந்தனன்
அந்தமில் வாகுவா மண்ண லென்பவன்"

என்பதையும் உணர்த்துகின்றது.

கஈ

## தேவர்பகையொழித்தசிறப்பு

முன்பகை யாவையு முடித்துக் கூரெயிற்
றன்பகை யாவையுந் தடிந்து சந்ததம்
பின்பகை யில்லதாப் பேற்றி செய்ததாம்
ஒன்பதி ஞேர்கரத் தோளிருங் குந்தமே.

இ - ள். பழைய பகையாகிய சூரபதுமனைக் கொன்று, அவனுக்கு முற்பிறப்பிற் கொடுத்த வரத்தை நிறைவேற்றிக் கூரிய பற்களை யுடைய சிங்கமுகாசுரன் முதலிய, தேவர் பகையாகிய யாவரையும் நாசஞ் செய்து, பின்னர் எக்காலத்தும் பகை யில்லாததாக வீரத் தன்மையைச் செய்த தாகும். வீரவாகுதேவர் முதலிய ஒன்பது வீரர்களது கையின்கண் விளங்காநின்ற குந்தம் எ - ம்.

முடித்து என்பதற்குக் கொன்று எனவும், நிறை வேற்றி எனவும் பொருள் கொள்க.

'முன்பகை' என்பதும், 'யாவையுந்தடிந்து' என்பதும்,

சூரபதுமன் முன்சென்மத்தில், அன்னமுங் கருடனும் துன்பத்தை யடைய, மயிலையும் சேவலையும் தூண்டிக் கலகம் விளைத்தான். அது கண்ட பிரமன் விட்டுணு முதலிய தேவர்கள் முருகக்கடவுள் சந்நிதானத்தை யடைந்து அதனை விண்ணப்பஞ் செய்தனர். உடனே முருகக்கடவுள் தமது பரிசனர்கள் வழியாகச் சூரன் பதுமன் முதலிய நால்வரையும் விளித்து,

"நீவி ரினிப்போய் நெடுநீர்ப் பெருநிலத்துப்
பாவ நிருதர்குலத் துற்பவித்துப் பன்முறையாற்
றேவர்க் கிடுக்கண் செய்வீர் கடைமுறையெம்
பூவிலைய வேலாற் றுலைந்து கதிபுகுவீர்.

என்னுங் கடுஞ்சாபங் கேளா விகற்பூதர்
மின்னுஞ் சுடரிலைவெள் வேலோற் பதம்போற்றி
மன்னுங் கொடியே நிருதர்குலம் வைகுறினு
நின்னன் பகலாத நெஞ்செமக்கு வேண்டுமால்.

ஈதன்றி மற்றென் றுளதா லெளியோங்கள்
போதுங் குலத்துப் புரிதவத்தா னெட்டிலைவேல்
காதுந் திறத்திறக்குங் காலை மயிலாகிப்
பாதம் பொறுக்கக் கொடியாகிப் பாலிப்பாய்.

ஆய வரமிரண்டு மெம்பா லருடியெனத்
தூய முருக்கெயிற்றுச் சூரன் பதுமனொடு
மேய வுவகையொடும் பெற்றான் மிகுதவத்தால்
மாயை வயிற்றிலிவர் நால்வோரும் வைகினர்.

என்று மிளையா னியம்பு மொழிதிறம்பாத்
துன்று துணைத்தடந்தோட் சூரன் பதுமனொடு
மொன்று தனிவயிற்றி னோருருவா யுற்பவித்தார்
நின்ற விருவருடன் பிறந்தார் நீணிலத்தில்.

சூலப் படைபொறுத்த சூரபன்ம னென்றொருவன்
சீலக் குணமொழிந்த சிங்கமுக னென்றொருவன்
சாலத் தவமிழைத்த தாரகனென் றொருவன்
ஞாலத் தசுரகுல மன்னவராய் நண்ணினர்.

பூவிற் பொலியும் புனைகழலோன் போர்வேலாற்
காவற் கணத்தோ டிருவர் கலந்தொழிந்தார்
தூவிற் பொலிசூலச் சூரனுயி ரிறந்து
சேவற் கொடியு மயிலுமெனச் சென்றொழிந்தார்"

என்பதை யுணர்த்துகின்றது. கசு

## திருக்கையிலயாதிகாப்புச்சிறப்பு

### அறுசீர்விருத்தம்

வெள்ளிமால் வரைசூழ் காப்பு மிளிர்மணிச் சிகரக் காப்பும்
பள்ளிமால் வரையின் காப்பும் பைம்பொனு பரணக் காப்பும்
வள்ளிதாக் கைக்கோ ளென்று மகிழ்நீற்றுக் காப்பு மிட்டுத்
தேள்ளிதா யுமையா டந்த செங்குந்தம் போலு முண்டோ.

இ - ள். உயர்ந்த வெள்ளியைங்கிரியைச் சூழ்ந்து காக்கின்ற காவலும், உச்சியின்கண் பிரகாசம் பொருந்திய இரத்தினங்களிழைத்த கொலுமண்டபக் காவலும், அந்தப்புரத்தையுடைய மகாமேருவின் காவலும், பசும்பொன்னுலும் மணிகளாலும் செய்த ஆபரணக் காவலும், வளப்பமாகக் கைக்கொள்ளுங்கள் என்று உமாதேவியார் நவவீரர்களை அழைத்து மிக்க மகிழ்ச்சியோடு திருநீற்றுக் காப்புமிட்டுத் தெளிவாகக் கொடுக்கப் பெற்ற இச் செங்குந்தம் போலப் புகழ் பெற்றது இவ் வுலகத்தில் வேறுண்டோ எ - ம்.

'நீற்றுக் காப்பும் இட்டு' என்பதை ஒன்பான் வீரருக்கும், அவர் கைவேலுக்கு மாகக் கொள்க.

'வெள்ளிவரைக் காப்பும் மணிச்சிகரக் காப்பும் பள்ளி வரைக் காப்பும் ஆபரணக் காப்பும் கைக்கொள் என்று உமையாள் தந்த செங்குந்தம்' என்பது,

"கயிலையே யாதி யான கவின்பெறு தலங்க ளெல்லாம்
மயிலுரு வான வம்மை மகிழ்ந்தருள் செய்த சீர்சால்
அயில்கயிற் கொண்டு நாளு மழகுடன் காவல் பூண்ட
செயமுறு வாகை வீரன் திறத்தினைப் பேச லாமோ"

என்பதை யுணர்த்துகின்றது. கரு

## ஈட்டிப்படைச்சிறப்பு

சலம்பிரி யாத சூட்டுச் சாவற்கே தனமேஞ் ஞான்றும்
வலம்பிரி யாத செவ்வேட் குறுதுணை யாக மன்னுட்
குலம்பெற வந்தா ரென்றங் கொடியுமை தந்த வீட்டி
நலம்பெறு மிந்தக் குந்தர் பரிசுபோ னுட்டி லுண்டோ.

இ - ள். தன்னினத்தில் ஒன்றையொன்று காணிற் பகையாற் கோபநீங்காத உச்சிக் கொண்டையினை யுடைய சேவற் கொடியானது எக்காலத்தும் வலப்பக்கத்தைவிட்டுப் பிரியாத சுப்பிரமணியக்கடவுளுக்கு மிகுந்த துணையாக வும் நிலைபெற்ற தமது கைலாய பரம்பரைக் குலம் விளக் கத்தைப் பெறவும் வந்தனர் என்று மகிழ்ந்து, அழகிய பூங்கொடி போன்ற உமாதேவியார் கொடுத்த கைவேலி னது நன்மையைப் பெற்ற இச் செங்குந்தர்கள் பெருமை போல இந் நாட்டில் வேறில்லை எ - ம்.

'செவ்வேட்குறுதுணையாகக்குலம்பெறவந்தார்' என்பது,

"உதிதருமத் திறல்வீர ரரியணைமே
லம்மையுட னுறைந்த நாதன்
பதமலர்கள் பணிந்தெழலு மவர்க்கண்டு
பார்ப்பதியைப் பரிவா னேக்கி
மதியுமிகு திறலுமெழின் மானமுங்கை
யெனப்பெறுநம் மைந்த ரின்னோர்
புதியரலர் நந்திதனிக் கணத்தவரொன்
றுன்சுருதிப் பொருளாய் நின்றான்"

என்பதையும்,

'அங்கு உமைதந்த ஈட்டிப் பரிசுபோல் நாட்டில் உண்டோ' என்பது,

"தேவியது கேட்டுமைந்தர்க் கயிலருள
வவர்க்கெல்லாஞ் சிவன்வெவ் வேறு
தாவில்சுடர் வாளுதவி வியர்ப்பில்வரு
மோரிலக்கந் தனய ரோடு
நீவிர்களு மொன்றிநுங்கட் கிறையவனு
கியசேயை நீங்க லின்றி
ஏவலவன் பணித்தனசெய் தொழுகுதிரென்
றுனவரு மிசைந்து தாழ்ந்தார்"

என்பதையும் உணர்த்துகின்றது. கரு

அறுபடைவீட்டின்குந்தச்சிறப்பு

பருப்பத மேரகம் பரங்குன் றம்பழம்
பொருப்பத மாவினன் குடிசெந் திற்போது
விருப்பெனக் குன்றுதோ ருட லாமெனும்
திருப்பதி தமிலமர் செய்ய குந்தமே.

இ - ள். முருகக்கடவுள் சமத்துவமான விருப்பத்தை யுடையவரென்று சொல்லும்படியான திருவேரகம் என்னு மலையும், திருப்பரங்குன்றமும், பழமுதிர்சோலையும், அழகிய திருவாவினன்குடியும், திருச்செந்தூரும், குன்றுதோருடலுமாமென்று சொல்லாநின்ற இந்த ஆறு தலங்களினும் இச் செங்குந்தம் வீற்றிருக்கின்றது எ - ம்.

ஏரகப் பருப்பதம் என மாற்றுக. அமர் என்னும் பகுதி வினைமுற்றுப் பொருளது. திருப்பதி தமில் என்புழி, தம் - சாரியை.

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவேரகம், திருவாவினன்குடி, குன்றுதோருடல், பழமுதிர்சோலை என்பன முருகக்கடவுளுக்குப் படைவீடென்ப.

திருவேரகம் என்பது சுவாமிமலை. இதனை "ஏரக வெற்பெனு மற்புத மிக்க சுவாமி மலைப்பதி" என்பதனாற் காண்க. பழமுதிர்சோலை என்பது இக்காலத்துக் கள்ளழகர் கோயிலாக வழங்குகின்றது. திருவாவினன்குடி என்பது பழனிமலை யடிவாரக் கோயிலை.

இந்த ஆறு திருப்படைவீட்டினுள்ளே 'அமர் செய்ய குந்தம்' என்பது,

"முருகனுக் குரிமை யான மூவிரு தலங்க டன்னில்
அருமையின் பெருமை யாக வந்தண ராதி மாக்கள்
வரிசையி னேத்தி வாழ்த்த வழிவழி வந்து நிற்கும்
ஒருபெருங் குந்தம் போல வுள்ளதோ வுலகி லம்மா"

என்பதை யுணர்த்துகின்றது. ௧௭

குந்தமகிமைச்சிறப்பு

தேடுவார் வலமாய் வந்து தெரிசிப்பார் சென்னி மீது
சூடுவார் மலரே தூவித் தொழுதகை கூப்பி நிற்பார்
பாடுவார் காவென் றெம்மைப் பரிவினு னந்த மாக
ஆடுவார் குகன்கைச் செவ்வேற் கருந்துணைக் குந்த மென்றே.

இ-ள். உலகினுள்ளார் முருகக்கடவுள் கையின்கண் உள்ள இரத்தத்தாற் சிவந்த வேலாயுதத்திற்குக் கிடைத்தற்கரிய சகாயமாகுங் குந்தமென்று கருதிச் செங்குந்தம் எவ்விடத்து இருக்கின்றதெனத் தேடுவார்; தங்கள் கண்களாற் கண்டு வலமாகவந்து தரிசிப்பார்; மலர்களால் அருச்சித்துத் தலைமீதணிந்து கொள்வார்; பாதத்தில் வீழ்ந்து வணங்கி இரண்டு கைகளையுங் கூப்பி எதிராக நிற்பார்; எம்மை இரட்சிக்கக் கடவாயென்று அதன் புகழைப் பாடுவார்: பின்னும் ஆசையோடும் ஆனந்தமாக ஆடுவார் எ-ம்.

அருந்துணைக் குந்தம் என்புழி, அருமை ஈண்டு இன்மை மேற்று; 'அருங் கேடன்' என்பதிற்போல.

'குகன்கைச்செவ்வேற்கருந்துணைக் குந்தம்' என்பது,

"தற்பெயர் புணர்த்திக் கற்பிஞெடு கொடுத்த
அமையா வென்றி யரத்தநெடு வேல்"

என்பதையும்,

"குருதியிற் றோயக் கொடுத்தருள் புரிந்த
குந்தப் பெயரியக் கூரிய படை வேல்"

என்பதையும் உணர்த்துகின்றது. ௧௨

### காளிகைத்தாளம்பறித்தசிறப்பு

கலிநிலைத்துறை

ஆலங் காட்டினி லரனுட னன்றுவா தாடும்
கோலங் காட்டிய காளிதன் கோற்றம்போய் வெள்கப்
பாலங் காட்டிய பன்மணித் தாளமே பறித்துச்
சீலங் காட்டிய குந்தர்நற் பெருமையார் தெரிப்பார்.

இ-ள். திருவாலங்காடு என்னும் சிவத்தலத்தில் பரமசிவத்தோடு அக் காலத்து வாதாடுகின்ற கோலத்தைக் காட்டிய காளியம்மை, தனது வெற்றி யிழந்து நாண, அந்தக் காளியம்மையினது கையின்கண்ணுள்ள ஒளி வீசிய பல இரத்தினங்களிழைத்த தாளத்தைப் பறித்துத் தமது மகிமையை யுலகத்திற் காட்டிய குந்தர்களது நல்ல பெருமையை யார் சொல்லத் தக்கவர் எ-ம்.

'ஆலங்காட்டினில் காளிதன் தாளமே பறித்துச் சீலம் காட்டிய குந்தர்' என்பது,

"தொடுகட லுலகின் மாக்கள் தோற்றமுங் காப்பு மீறும்
நடைபெற வாலங் காட்டி னடனமே செய்யு நம்ப

னுடனுறு காளி வாத மொழித்துகைத் தாளங் கொண்ட
மடனறு குந்த மன்னர் மரபினை முறையிற் கேண்மோ"

என்பதை யுணர்த்துகின்றது. கக

பகைஞரைச்சுவர்க்கம்புகுத்துஞ்சிறப்பு

கலிவிருத்தம்

செங்களம் பொருதிய திருந்த லாருர
வங்கமே மண்மிசை யாக்கி யாவியைச்
செங்கதிர் வழியிடைச் செலுத்தித் தேவர்க
டங்களை வான்புகத் தருஞ்செங் குந்தமே.

இ - ள். இரணகளத்தில் வந்து தம்மோ டெதிர்த்து யுத்தஞ் செய்த, பகைவர்களாகிய அரக்கர்களது வலிய வுடலை மண்மீது வீழச்செய்து, உயிரைச் சூரியன் மார்பின் வழியாகச் சுவர்க்லோக பதவியை யடைவித்துத் தேவர்களை யெல்லாம் வானுலகத்தில் என்றும் நிலைபெற் றிருக்கச் செய்யும் செங்குந்தம் எ - ம்.

உரம்+அங்கம் = உரவங்கம் என்றாயது. 'மரவடி' என்பது போல.

'திருந்தலார் உரவங்கம் மண்மிசை ஆக்கி ஆவியைச் செங்கதிர் வழியிடைச் செலுத்தித் தேவர்களை வான்புகத் தரும் செங்குந்தம்' என்பது,

"பகைவர் யாவரும் பாலுல கெய்தமேற்
றொகைய தாகிய சுரர்குழு வாழ்வுற
நகைசெய் வேலுடை நாய ளுர்வழி
வகைசெ யீட்டியின் வன்மை பேசுவாம்"

என்பதை யுணர்த்துகின்றது. உ0

## தேவர்தம்மகுடம்பெற்றசிறப்பு

அறுசீர்விருத்தம்

பரகதி வேள்வி பண்ணு மிருடிதன் பான்மை பாரா
வரகதி தந்தை யேவு மமரரை மடிய நூறி
யிரதமோ டிவுளி வேழ மியாகதா னத்துக் கீந்து
சிரமணி மகுடம் பெற்ற செங்குந்தர் போலு முண்டோ.

இ - ள். மோக்ஷ கதியை முருகக்கடவுளால் பெறும் பொருட்டு ஒரு யாகத்தைச்செய்யு முனிவனது வைராக்கியத் தன்மையை நோக்கிப் பிரமதேவன், தனது மேலான பதவியை கொடுக்கும் பொருட்டு அமரரை யேவ, அதற்குத் தான் விரும்பியது அஃதன்றெனவ மறுத்த முனிவரனை எதிர்த்ததால், அவ்வமரரைப் போர்க்களத்தின் மடியக் கொன்று, அவர்கள் இரதங் குதிரை யானை இவைகளை அவ் வியாகத்துக்குத் தானமாகக் கொடுத்து, அவர்கள் சிரசிற் றரித்த இரத்தின கிரீடங்களைக் கைக்கொண்ட செங்குந்தர் களைப் போலும் இவ் வுலகத்திலுண்டோ எ - ம்.

'சிரமணி மகுடம் கொண்ட செங்குந்தர்' என்பது,

"நந்தியங் கணத்த ரான நற்குல வீர வாகு
முந்திய பகலோர் நாளின் மூதண்ட முனிவர்க் காகச்
செந்திலம்பதிவேள்சொன்ன செயலினை முடித்துத் தேவர்
அந்தநல் மகுடங் கொண்டா னழகிதே வவனி தன்மேல்"

என்பதை யுணர்த்துகின்றது. உக

சரித்திரவரலாறு - ஏழாயிரப்பிரபந்தம்-வேள்விச்சருக்கம்

மூதண்டமுனிவர் மோக்ஷமடைய வேள்வி யொன்று செய்தார். அந்த வேள்வியின் வைராக்கியத் தன்மையைப் பிரமன் முதலிய தேவர்களெல்லாரும் கண்டு பொறுமை

கொண்டார்கள். பின்பு பிரமதேவன் அந்த யாகத்தை நடைபெறுமற் செய்யச் சூழ்ச்சிகள் பலசெய்தான்; ஒன்றும் பலிக்கவில்லை. அப்பால் பிரமன் கோபங்கொண்டு தனது பரிவாரத்துடன் தேவர்களோடு கலந்து மூதண்டமுனிவர் மேல் போர்செய்ய ஆரம்பித்தான். அது கண்ட முருகக் கடவுள் நவவீரரை ஏவி, யுத்தகளத்தில் மூதண்டமுனிவருக்கு வெற்றியை உண்டாக்கினர். இப்பால் வீரவாகுதேவர் யுத்தகளத்தில் தோல்வியடைந்த தேவர்கள் திரவியமனைத்தும் மூதண்ட முனிவர் யாக சாலைக்குத் தானமாகக் கொடுத்து, அவர்கள் அணிந்திருந்த இரத்தின கிரீடங்களைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டார். பின்பு மூதண்ட முனிவர் யாகத்தை முடித்து விரும்பிய பயனைப் பெற்றுர்.

சம்பாதிக்கமுதளிக்குஞ்சிறப்பு

அம்பாழி மூழ்கியொரு கற்பமெலாங்
கிடைக்கினுமேன் னழலி னின்று
வெம்பாமே வெளிக்காலுண் டேகாலை
வெளியில்விடா திருந்தா லென்னே
வம்பாரு மிதழியணி வேணியனுர்
வேதமலை வலம்வந் தீண்டுஞ்
சம்பாதிக் கமுதளிக்குஞ் சயக்குந்தம்
போல்வினவத் தாரா வன்றே.

இ - ள். ஒரு கற்பகால மெல்லாம் சமுத்திரத்தில் மூழ்கித் தவஞ்செய்திருக்கக் கிடைக்கினும் யாதுபிரயோசனத்தைத் தரும்; பஞ்சாக்கினி மத்தியில் நின்று சரீரம் புழுங்காமல் வெளியில் உலாவுகின்ற காற்றை ஆகாரமாகக் கொண்டு, உள்ளிருந்து இடைபிங்கலையின் வழியாகப் பன்னிரண்டங்குலம் செல்லா நின்ற காற்றைக் கும்பித்துச் சுழிமுனையிற் செலுத்தி யோகஞ் செய்து ஒரு கற்ப

காலமிருந்தாலும் யாதுபிரயோசனத்தைத் தரும்; வாசனை பொருந்திய கொன்றை மாலையைத் தரித்த சடாமகுடத்தை யுடைய வேதகிரிநாதர் வாழுகின்ற திருக்கழுக்குன்றத்தை வலமாக வந்து நெருங்கிய சம்பு ஆதி என்னும் கழுகு களுக்குத் தினம் அன்னத்தைக் கொடுத்து மோக்ஷகதியை அடைவிக்கும் வெற்றி பொருந்திய நவவீரர்களது செங்குந்தம் போலக் கேட்டவுடன் கொடுக்க மாட்டாதன மற்றைத் தவங்கள் எ - ம்.

சூரன் பதுமன் என்கிற இரண்டு சொல் 'சூரபதுமன்' என்று வழங்குவது போல, இங்கே சம்பு ஆதி என்கிற இரண்டு சொல் 'சம்பாதி' என்று வழங்கலாயிற்று.

'சம்பாதிக் கழுதளிக்கும் சயகுந்தம்' என்பது,

"வேதமா மலையிற் குந்தம் விளம்புசம் பாதிக் கென்றே
ஓதனஞ் சமைத்து நாளு முச்சியி லுண்ண வூட்டும்
காதையைக் காணார் யாரோ காசினி தன்னி லம்மா
ஈதொரு கலியிற் காட்சி யென்பதும் புதுமைத் தன்றே"

என்பதை யுணர்த்துகின்றது. உஉ

### சைவசமயபரிபாலனச்சிறப்பு

உருக்கோடு பணியா தாரை யுளத்திலெந் தெழுத்தை யுன்னிப்
பெருக்கோடு தவள நீற்றைப் பேணியே யணியா தாரைத்
தருக்கோடு நின்று கண்ணீர்த் ததும்பமுன் னுடா தாரைத்
திருக்கோயில்வலம்வாராரைச்சினத்தோடுபோருஞ்செங்குந்தம்

இ - ள். சிவபெருமானை மனவுருக்கத்தோடு வணங் காதவரையும், பஞ்சாக்கரத்தைத் தமது உள்ளத்தில் தியா னித்து வெள்ளிய திருநீற்றை மிகுதியாக விருப்பத்தோடு திருமேனியில் தரித்துக்கொள்ளாதவரையும், தவச்செருக்

கோடு எதிராக நின்று ஆனந்தக்கண்ணீர் ததும்ப நடனம் செய்யாதவரையும், சிவாலயங்களை வலஞ் செய்யாதவரை யுங் கோபத்தோடு சங்கரித்து விடுகின்ற பத்திமான்கள் இச் செங்குந்தத் தலைவர்களாவர் எ - ம்.

இச்செய்யுளுக்குச் செங்குந்த மரபில்வந்த சைவாசாரி யர்கள் ஆன்மார்த்த பூசனையால் சிவபெருமானை அன்பொடு வணங்க அறியாத மாணவர்கள் மலபந்தங்களையும், பஞ்சாக் கரத்தை நினையாமல் நினைத்து வெள்ளிய திருநீற்றை. ஈசானம் முதலிய மந்திரங்களால் சிரம் முதலிய இடங்க ளில் ஆசையுடன் தரிக்க அறியாத மாணவர்கள் மலபந்தங் களையும், சமயம் விசேஷம் நிர்வாணம் என்கிற தீக்ஷையின் வல்லமையினால் களங்கமற்ற மனமாகி, "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாய்" என்ற திருவாக் கின்படி சிவானந்தத்தில் அழுந்தி அவ்வானந்தப் பேற்றால் கண்ணீர் ததும்ப முதல்வனிடத்து நடனம் கொள்ள அறி யாத மாணவர்கள் மலபந்தங்களையும், பாரார்த்த பூசனை யால் சிவாலயங்களை வலம் செய்ய அறியாத மாணவர்கள் மலபந்தங்களையும், சிக்ஷைசெய்து சிவதீக்ஷையால் போக்கு வர் என்று பொருள் கூறுவாருமுளர்.

செங்குந்தம் - ஆகுபெயர். பொரும் என்பதைச் செய்யும் என்னும் முற்றுக்கினும் அமையும்.

'உருக்கொடு பணியாதாரைச் சினத்தொடு பொரும் செங்குந்தம்' என்பது,

"என்புருக மாக்க ளிறைவன் றிருப்பூசை
அன்போடு செய்ய வறைகுந்தம்—இன்புருவாய்ச்
செய்யாத மானுடரைச் சீறுஞ் செயகுந்தம்
உய்யும் வழியினையே யோர்ந்து"

என்பதையும்,

'உளத்தில் ஐந்து எழுத்தை உன்னி நீற்றை யணியா தாரைச் சினத்தொடு பொரும் செங்குந்தம்' என்பது,

"உன்னும வுன்னுக வுளத்தி லெழுத்தைந்தும்
பன்னூரு மென்று பகர்குந்தம்—எந்நாளும்
நீற்றை யணியா நினைவினரைக் காய்குந்தம்
காற்றிற் றுரும்பெனவே கண்டு"

என்பதையும்,

'தருக்கொடு நின்று கண்ணீர் ததும்ப முன் ஆடா தாரைச் சினத்தொடு பொரும் செங்குந்தம்' என்பது,

"தெய்வப் பெருமானைத் தேடித் திருநடனம்
செய்ய நிதமருள்செய் சீர்குந்தம்—வையகத்தில்
அவ்வணமே போற்றுரை யாண்டும் பொருங்குந்தம்
பவ்வஞ்சூழ் பார்தனிலே பார்த்து"

என்பதையும்,

திருக்கோயில் வலம் வாராரைச் சினத்தொடு பொரும் 'செங்குந்தம்' என்பது,

"பெம்மான் றிருத்தளியைப் பேணிவலம் வாராத
கைம்மாண்ட மாக்களையே காதுகுந்தம்—செம்மாண்பு
கொண்டுநின்றூர் தங்குழுவிற் கூட்டுறவு செய்குந்தம்
மண்டுபுவி தன்னின் மதித்து"

என்பதையும் உணர்த்துகின்றது. உங

சிவலோகவாழ்வளிக்குஞ்சிறப்பு

கூவிளை யிதழி தும்பை கோண்டருச் சித்த பேர்க்கும்
மூவர்தம் பாட லோதி முன்னின்று பணிந்த பேர்க்கும்
ஆவலோ டைந்தே ழுத்தை யகத்துள்ளே நினைந்த பேர்க்கும்
தேவர்நா டாளு வைக்குந் திருக்கைவேற் றுணைச்செங் குந்தம்.

இ - ள். பரமசிவனை வில்வத்தளிர்களும் கொன்றை மலர்களும் தும்பை மலர்களும் கைக்கொண்டு அருச்சனை செய்த அடியார்களையும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் ஆகிய மூவரால் சொல்லிய தேவாரத் திருமுறைப் பாடலைத் தோத்திரஞ் செய்து எதிராகநின்று வணங்கின அடியார்களையும், ஆசையோடு பஞ்சாக்கரத்தை யுள்ளத்தில் தியானித்த அடியார்களையும், மகாதேவரது சிவலோகத்தை யாளும்படி செய்விக்கும்; முருகக்கடவுளது அழகிய கையின்கண் நிலைபெற்றுள்ள வேலாயுதத்தைத் துணையாக வுடைய செங்குந்தம் எ - ம்.

செங்குந்தம் ஆளவைக்கும் என இயையும்.

'கூவிளை யிதழி தும்பை கொண்டருச் சித்த பேர்க்கு தேவர் நாடு ஆள வைக்கும் திருக்கைவேற் றுணை செங்குந்தம்' என்பது,

"பச்சிலை யிட்டுப் பரவுந் தொண்டரை
மெச்சிச் சிவபத வீட்டிடை யுய்க்கும்
வாகை மன்னனை வாழ்த்துதும்
போகமெய்ஞ் ஞானம் பொருந்துதற் பொருட்டே"

என்பதை யுணர்த்துகின்றது. உச

குந்தத்திற்கொப்பின்மைச்சிறப்பு

ஆலமார் மிடற்ரு ராடு மாடலே யாட லம்மை
ஏலவார் குழலா ளங்கைத் தாளமே தாள மேந்தும்
சூலமா குவதன் ஞன்கைச் சூலமே சூல மற்றிக்
கோலம்வாழ் வீரர் கையிற் குந்தமே குந்த மாகும்.

இ - ள். விஷம் பொருந்திய கண்டத்தினை யுடைய சதாசிவமூர்த்தி சர்வசம்மார காலத்திற் செய்யும் நடனமே

நடனம்; அக் காலத்து மயிர்ச்சாந்து பொருந்திய நீண்ட அளகத்தை யுடைய தாயாகிய ஞானசத்தி அந் நடனத்திற் குத் தகத் தன்கையாற் கொட்டிய தாளமே தாளம்; சூலமாவது அச் சதாசிவம் தனது கையிற்றாங்கிய சூலமே சூலம்; அது போலவே அழகு வீற்றிருக்கின்ற நவவீரர் கையிற் கொள்ளுங் குந்தமே குந்தம் எ - ம்.

'ஆலமா மிடற்றார் ஆடும் ஆடலே யாடல்' என்பது,

"எல்லா மொழிந்தவிடத் தெம்பெருமான் செய்நடம்போல்
இல்லாமை கண்டோ மினி"

என்பதையும்,

'அம்மை கைத் தாளமே தாளம்' என்பது,

"அம்மை திருக்கரத்தா லன்றுகண்ட தாளம்போல்
இம்மையினு மம்மையினு மேது"

என்பதையும்,

'அன்னன்கைச் சூலமே சூலம்' என்பது,

"கால னுயிருண்ட காபாலி தன்கரத்துச்
சூலம்போ லெப்படையாஞ் சொல்"

என்பதையும்,

'வீரர் கையிற் குந்தமே குந்தம்' என்பது,

"நவமணிப் பெயரிய சிவமணப் பெண்கள்
உந்தியின் வழியில் வந்த வொன்பான்
குந்தப் படையின் சந்தத் திறத்தைக்
கூரிய வறிவின் குணமுடை யோரே
கூறுதல் மிகையாங் கூர்ந்து காண்மினோ"

என்பதையும் உணர்த்துகின்றது. உரு

குற்றமற்ற பிரபந்தங்கொண்ட சிறப்பு

ஆதிநா ளுமையவ ளளித்த குந்தமே
சாதிநா லுவப்புடன் றலைக்கொள் குந்தமே
காதிமே வலரையுங் கல்லுங் குந்தமே
கோதினம் பாடலே கொள்ளுங் குந்தமே.

இ - ள். நம்மாற் சொல்லப்பட்ட குற்றமற்ற பிரபந்தங்களை அங்கிகரித்துக் கொள்ளும் குந்தமானது, முன்னாளில் உமையவளாலே வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களுக்குக் கொடுக்கப்பட்ட குந்தமாகும்; அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர் என்று சொல்லாநின்ற நான்கு வருணத்தவர்களுங் களிப்புடன் தங்கள் தலைமீது வைத்துக்கொள்ளும் குந்தமாகும்; தன்னை வணங்காதவரைக் கோபித்து உலகத்தில் நிலைபெறாது அழிக்கும் குந்தமாகும் எ - ம்.

சாதி, பாடல் என்பன ஆகுபெயர்.

'கோதில் நம்பாடல்' என்பது,

"வெய்ய வன்குலத் துதித்திசை விளக்கிய வேந்தன்
வைய கம்புரந் தருளக ளங்கன்வாழ் மன்றில்
பொய்யில் பாரதி புருடன்மெய் யெடுத்தது போன்று
மையி லாக்கவி வரனொட்டக் கூத்தன்வாழ்ந் தனனால்"

என்பதை யுணர்த்துகின்றது. உசா

கொடையாதிசிறப்பு

கருதலர் பொடிபடக் கருதுங் குந்தமே
விருதுடைச் சூர்முடி வெட்டுங் குந்தமே
பொருதனிப் புலிக்கொடி புனையுங் குந்தமே
தருதலத் தருவெனத் தருஞ்செங் குந்தமே.

இ - ள். பொருதற்குக் காரணமாகிய ஒப்பற்ற புலிக்கொடியை அலங்காரமாகத் தரித்துக்கொள்ளும் இச்செங்

குந்தமானது, பகைவர்கள் முடி பொடிபடச் செய்தலே துணிவாகக் கருதுங் குந்தமாகும்; வெற்றி விருதுகளை யுடைய சூரபதுமன் முதலிய அவுணர்களுடைய தலைகளை வெட்டிய குந்தமாகும்; அடுத்தவர்க்குக் கொடுத்தலில் கற்பக முதலிய அந்தப் பஞ்சதருவைப் போலக் கேட்ட எப்பொருளையுங் கொடுக்கும் செய்ய குந்தமாகும் எ - ம்.

'தருதல் அத் தருவெனத்தரும் செங்குந்தம்' என்பது,

"வேண்டுவார் வேண்டுவ வெறுப்ப நல்கிடும்
தாண்டவ முதலியின் றன்மை போலவே
ஈண்டிய புவியிடை யெனைத்து மீயுமால்
காண்டகு குந்தரின் கருணை யென்பதே"

என்பதை யுணர்த்துகின்றது. உஎ

பெறுதற்கரியதுணைச்சிறப்பு

கைலைமால் வரையையுங் காங்குங் குந்தமே
அயிலைநற் றுணையென வாக்குங் குந்தமே
வெயிலைமன் மணிகளின் மிளிருங் குந்தமே
மயிலைவா கனமென வாக்குங் குந்தமே.

இ - ள். இச் செங்குந்தமானது, உயர்ந்த திருக்கைலைமலை முதலிய சிவபெருமானிடங்களெல்லாம் காக்கின்ற குந்தமாகும்; பெரியபெருமாளது வேலாயுதத்தைத் தனக்கு நல்ல துணையென ஆக்கிக்கொள்ளும் குந்தமாகும்; பிரகாசம் நிலைபெற்ற நவரத்தினங்களைப் போல ஒளிருங் குந்தமாகும்; சூரபதுமனுகிய மயிலை முருகக்கடவுளுக்கு வாகனமாக ஆக்கிய குந்தமாகும் எ - ம்.

வெயிலை என்புழி ஐ-சாரியை.

'அயிலை நற்றுணையென ஆக்கும் குந்தம்' என்பது,

"சங்கரன் கொண்ட கோலஞ் சண்முக வடிவே யாகும்
அங்கவன் கையிற் கொண்ட வயிலது சத்தி யாகும்
சங்கையில் வீரர் கையிற் றரித்தது மதுவே யாகும்
இங்கிவை துணையாய்ச் சொற்ற வியல்பினைக் குறித்துக் காண்டி"

என்பதை யுணர்த்துகின்றது. உ௯

## முதலியர்பட்டச்சிறப்பு

### அறுசீர்விருத்தம்

இந்திர னயன்மா றேவர் யாவர்க்கு முதன்மை யாக
வந்தபான் மையினூற் சூல மழுப்படை யத்த னூர்க்கு
முந்திய நாமந் தானு முதலிய ராகை யாற்செங்
குந்தர்சந் ததிக்கு மப்பேர் முதலிய ரேன்று கூறும்.

இ - ள். இந்திரன் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள் யாவருக்கும் முதன்மையாக அநாதியில் எழுந்தருளிவந்த தன்மையால், சூலமும் மழுவாயுதமும் திருக்கையினுடைய பரமசிவனுக்கு ஆதிநாமம் முதலியர் என்று வந்தது; ஆதலால், அந்தமரபில்வந்த செங்குந்தர் சந்ததிக்கும் முதலியர் என்று அந்த நாமத்தையே உலகங் கூறும் எ-ம்.

முதலியர் என்பது முதலியார் என்றாயது.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று தொழில்களை எப்போதும் செய்துவரும், பிரமன் விஷ்ணு உருத்திரன் என்கின்ற மும்மூர்த்திகளுள் சிவபெருமானே முற்பட்டவர் என்பது, " முன்னனை மூவர்க்கும்" எனவும், "முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த முத்தனே முடிவிலா முதலே" எனவும், "முன்னோன் காண்க முழுதோன் காண்க - தன்னே ரில்லோன் தானே காண்க" எனவும் "மூவாத முதலானே" எனவும், "முதலாய ஆனந்த மூர்த்

தியான்'' எனவும், ''ஆதி முதற் பரமாய பரஞ்சுடர்'' எனவும் ஆங்காங்கே வரும் அமுத வாக்கினுல் பெறப்படுதலின் இங்கே ஆசிரியர், 'இந்திரன் அயன் மால் தேவர் யாவர்க்கும் முதன்மையாக வந்த பான்மையினுல் சூல மழுப்படை அத்தனுர்க்கு மூந்திய நாமம் தானும் முதலியர்' என்று எடுத்துக் கூறினர்.

இனி யம் முதல்வனுர் பரம்பரையில்வந்த 'செங்குந்தர் சந்ததிக்கும் அப்பேர் முதலியர் என்று கூறும்' என்பது,

''முத்தொழிற் கிறைவ னென்று மூதறி வாளர் போற்றும்
சத்தியுஞ் சிவமு மான தற்பர னன்று வைத்த
பத்ததி வகையில் வந்த பானுவின் பகைஞ ருதி
உத்தம முதலி தங்க ளுதவியை மணந்தான் மன்னன்''

என்பதை யுணர்த்துகின்றது. உகூ

முசுகுந்தன் நவவீரரைப்பெற்ற சிறப்பு

கலிவிருத்தம்

முந்தை நோன்பினுன் முருக வேண்முசு
குந்த னுக்கோன்பான் குமர ரைத்தர
வந்த வீரரிவ் வகிலம் வென்றிசை
தந்த குந்தரித் தகுசெங் குந்தமே.

இ - ள். ஆதியில் முசுகுந்தச்சோழன் சஷ்டி விரதத்தினை முறைமையாகச் செய்தமையால் அவனுக்கு முருகக் கடவுள் தமது இளவலராகிய நவவீரர்களைப் படைத்துணைவர்களாகத் தர, அந்த வீரர்கள் இவ்வுலகின்கண் உள்ள அரசர்களையெல்லாஞ் செயங்கொண்டு அந்த முசுகுந்தச் சோழனுக்குச் 'சக்கரவர்த்தி' என்னும் பெயரிய புகழை நிலைபெறச் செய்த குந்தாரவர்; அவர்கள் சந்ததிகளே இந்தப் பெருமை பொருந்திய செங்குந்தர் எ - ம்.

*சரித்திரவரலாறு-திருவாரூர்லீலை - முசுகுந்தச்சருக்கம்*

ஒரு காலத்தில் விதூமன் என்னும் கந்தருவன் சுகுமாரி என்னும் இருடிபத்தினியை விழைந்தான். அவள் கோபங் கொண்டு அவனை முசுவாகுமாறு சபித்துப் போயினள். சாபம்பெற்ற விதூமன் குரங்கு முகமடைந்து கைலை மலையிலுள்ள ஒரு புஷ்பவனஞ் சென்றடைந்தான். அங்கே வசித்து வந்த பல குரங்குகள் விதூமனைக்கண்டு தங்களுக்கு அரசனாயிருக்கும்படி வேண்டிக்கொண்டது. அதற்கிணங்கி அரச செல்வத்தோடு நன்கு வாழ்ந்துகொண்டிருந்த விதூமன் ஒருநாள் தன்னை அறியாமல் வில்வ விருக்ஷத்தின் மேலேறியிருந்து அவ் வில்வத்தளிர்களைக் கையினால் உருவி பூமியிலே போட்டுக்கொண் டிருந்தான். அந்த வில்வத்தளிர்கள் யாவும் அம் மரத்தடியில் எழுந்தருளியிருந்த சோமாஸ்கந்தர் திருமுடியில் அருச்சனைப் பத்திரமாகக் குவிந்தது. அதனைக் கண்ட உமாபதி விதூமனைப் பார்த்து, "நீ அபுத்தி பூர்வமாகச் செய்திட்ட அருச்சனைப் பேற்றால் சூரிய பரம்பரை யாகிய மனு குலத்திற் பிறந்து எண்பத் தீராயிர வருஷகாலம் ஏக சக்கராதிபதியாய் அரசியற்றி வாழக் கடவை" என்று அனுக்கிரகஞ் செய்தனர். உடனே விதூமன் 'முசுமுகச்சோழன்' என்ற பெயரோடு சோணாட்டில் அவதரித்துக் கருவூரை இராஜதானியாகக்கொண்டு அரச காரியத்தை நடாத்தி வந்திருந்தான் என்பது,

"விண்டிடும் வைக றன்னில் விதூமனோர் மகளாற் சாபம்
கண்டிட முசுவே யாகிக் கயிலையங் கிரிப்பூங் காவில்
மண்டிய குரக்குக் கெல்லா மன்னவ னாக வன்னான்
பண்டய வினையால் வில்வப் பத்திரம் பரன்மேற் பெய்தான்.

பத்திரம் முடியிற் கண்ட பார்ப்பதி யிறைவ னந்த
வித்தக முசுவைக் கூவி விழைவுட னீபோ யின்னே

தத்துநீர்க் கடலாற் சூழ்ந்த தாரணி யாள்வா யென்று
வைத்தன னருளுப்பாடு வாழ்ந்தனன் முசுவின் மன்னன்"
என்பதையும்,

கந்தபுராணம் - கந்தவிரதப்படலம்

முன்பொரு காலத்தில் முசுமுகச் சோழன் தனது முன்னோர்களைப் போலத் தானும் திக்குவிசயம் செய்து சக்கரவர்த்தி யாமாறு விரும்பி அதற்குத் தக்க துணைவர்களைப் பெறவேண்டி வசிட்ட முனிவர் உபதேசப்படி முருகக்கடவுளுடைய சட்டி விரதம் பலநாள் கிமரப்படி அனுட்டித்து வந்தான் என்பது,

"முந்தொரு ஞான்று தன்னின் முசுகுந்தன் வசிட்ட னென்னும்
அந்தண னிருக்கை யெய்தி யடிமுறை பணிந்து போற்றிக்
கந்தவேள் விரத மெல்லாங் கட்டுரை பெரியோ யென்ன
மைந்தநீ கேட்டி யென்னு மற்றவை வழாது சொல்வான்.

வெற்பொடு மவுணன் றன்னை வீட்டிய தனிவேற் செங்கை
அற்புதன் றன்னைப் போற்றி யமரரு முனிவர் யாரும்
சொற்படு துலையின் றிங்கட் சுக்கில பக்கந் தன்னில்
முற்பக லாதி யாக மூவிரு வைக லேனேற்றூர்.

முந்திய வைக லாதி மூவிரு நாளுங் காலை
அந்தமில் புனலின் மூழ்கி யாடையோ ரிரண்டு தாங்கிச்
சந்தியிற் கடன்கள் செய்து தம்பவிம் பங்கும் பத்தில்
கந்தனை முறைமைய பூசை புரிந்தனர் கங்குற் போதில்.

நிறைதரு கட்டி கூட்டி நெய்யினுற் சமைக்கப் பட்ட
குறைதவிர் மோத கத்தைக் குமரநா யகற்க ருத்திப்
பிறவுள விதியுஞ் செய்து பிரான்றிருப் புகழ்வி னவி
உறுபுனல் சிறிது மாந்தி யுபவசித் திருந்தார் மாதோ.

ஆரண முனிவர் வானோ ரங்கதன் மற்றை வைகல்
சீரணி முருக வேட்குச் சிறப்பொடு பூசை யாற்றிப்

பாரணம் விதியிற் செய்தார் பயிற்றுமிவ் விரதந் தன்னால்
தாரணி யவுணர் கொண்ட தம்பதத் தலைமை பெற்றார்.

என்றிவை குரவன் செப்ப விறையவன் வினவி யெந்தாய்
நன்றிவை புரிவ னென்னா நனிபெரு வேட்கை யெய்தி
யன்றுதொட் டெண்ணில் கால மவ்விர தங்க ளாற்றிக்
குன்றெறி நதிவே லையன் குரைகழ லுன்னி நோற்றான்''

என்பதையும்,

முசுமுகமன்னன் பற்பகல் நோற்றுவந்த சட்டி விரதப்பயன்பெற முருகக்கடவுள் ஒன்பான் வீரரோடு மயின் மீது வந்து அவ்வரசனுக்குக் காட்சி தந்து, "வேண்டியவற்றைக் கூறுதி'' என்றருளினர். அப்போது முசுமுகச் சோழன் சண்முகக்கடவுள் திருவடியிற்பணிந்து "எங்கள் வழிவழிக் குலதெய்வமே, நான் விரும்பிய வண்ணம் சக்கரவர்த்திப் பதவியைப் பெற்றுப் பூமியில் வாழ இவ் வீரவாகுதேவர் முதலிய துணைவர்களை அடியேனுக்கு உறவினராகவும் படைத்துணைவராகவும் தந்தருளவேண்டும்'' என்று விண்ணப்பஞ் செய்து கொண்டான் என்பது,

"ஆன காலையி லாறுமா முகமுடை யமலன்
கோன வன்றனக் கருளுவான் மஞ்ஞைமேல் கொண்டு
தானை வீர னு மெண்மரு மிலக்கருஞ் சார
வானு ளோர்களுங் கணங்களுஞ் சூழ்வுற வந்தான்.

"வந்து தோன்றலு மன்னவர் மன்னவன் மகிழ்ந்து
கந்த வேளடி பணிந்தனன் கைதொழூஉப் பரவ
அந்த மில்பகல் விரதங்க ளாற்றினை யதனால்
எந்த நல்வரம் வேண்டினை யதுபுக லென்றான்.

என்ற காலையின் முசுமுக முடையவ னெந்தாய்
நன்று பாரெலா மெனதுசெங் கோலிடை நடப்பான்

வென்றி மொய்ம்பின ரூதியாம் வீரரை யெல்லாம்
ஒன்று கேண்மையிற் றுணைவராய்த் தருதியென் றுரைத்தான்'
என்பதையும்,

முசுமுகவேந்தன் விழைவின்படி முருகக்கடவுள் நவ வீரர்களைப்பாரத்து, "நீவிர்யாவரும் இவ்வரசன்பாற்சென்று சிலபகல் இவன் உறவினர்களாயும் படைத்துணைவர்களாயும் இருக்கக் கடவீர்கள்" என்று பணித்தருளினர் என்பது,

"மன்ன னிவ்வகை வேண்டுகோள் வினவுறு வள்ளல்
அன்ன வாறுனக் குதவுவ மென்றருள் புரிந்து
மின்னல் வாட்படை வீரமொய்ம் பன்முதல் விளம்பும்
துன்னு தானையந் தலைவரை நோக்கியே சொல்வான்.

நோற்றல் கூடிய முசுகுந்த னும்மினு மெம்பால்
ஏற்ற மேதகு மன்பின னெழுகடற் புவியும்
போற்ற வைகுவா னீவிர்க ளாங்கவன் புடைபோய்
ஆற்றல் சான்றிடு துணைவரா யிருத்திரென் றறைந்தான்"
என்பதையும்,

வீரவாகுதேவர் முதலியோர் முருகக்கடவுள் திருவடியிற்பணிந்து, "எங்கள் முதல்வனே, தம்முடைய ஏவலின் கீழ் சூரபன்மன் ஆதிய தேவகண்டரை எல்லாம் போர்க்களத்திலொழித்து வெற்றிகொண்டிருக்கும் யாங்கள் இம் மானுடன் பாங்கர் எய்தி இவனுற் பணிக்கப்படும் தொழில்களைப் புரியமாட்டோம்" என்று கூறிமறுத்தார் என்பது,

"முழுதருட்புரிதருங்கடவுள்சொல்வினவியேமுடிவதில்லாச்
செழுமதித் தன்குடைச் சூர்குலந் தனையடுந் திறலினேங்கள்
பழிபடப் பானுவின் வழிவருஞ் சிறுமகன் பாங்க ராகி
இழிதொழிற் புரிகிலோ மென மறுத் துரைசெய்தார் யாரும் வீரர்"
என்பதையும்,

முருகக்கடவுள் வீரவாகு தேவர் முதலியோரைப் பார்த்து, "வீரர்காள், நீங்கள் நமது கட்டளையை மறுத்த படியினால் இதுவே காரணமாக நீங்கள் யாவரும் மானுட வடிவராகி, இவ்வேந்தன்பாற் சேனைகளாக விருந்து காலத்தினைக் கழிக்கக் கடவீர்கள்" என்று ஆக்கியாபித்தனர். அப்போதே அந் நவவீரர்கள் மானுட வடிவமடைந்து முன்னைய வண்மை யனைத்தும் நீங்கிச் சரீரமெல்லாம் வியர்க்கப் பதைபதைத் தேங்கிப் பயந்தவர்களாய் முருகக் கடவுளைப் பணிந்தெழுந்து, தீன தயாளுவே, அடியேங்கள் ஆலோசியாமற் செய்த பெரும் பிழையினைப் பொறுத்தருளல்வேண்டும்" என்று பணிந்து கூறினர். பின்னர்ச் செவ்வேற் கடவுள் அவ்வீரர்களைப்பார்த்து, "நமது துணைவர்காள், நாம் பணித்த வண்ணமே சிலபகல் இம்மானுட வடிவினராய்ச் 'செங்குந்த மன்னர்' என்னும் பெயரோடு இப் பார்த்திபனுடைய சேனைத் தலைவராகி உங்கள் பரம்பரை உலகிற்பெருக வைத்துப் பின்னர் நம்மை நோற்றுத் தேவர் வடிவமாகி நம்பால் சேர்மின்கள்" என்று பணித்தருளினர். அக் கட்டளையைப் பெற்ற அவ் வீரர்கள் யாவரும் அதற்கிணங்கி அங்கே யிருந்தார்கள். இப்பால், சண்முகக்கடவுள் முசுமுகச் சோழனை நோக்கி, " பூபாலனே" இவ்வீரர்கள் குந்தப் படையினைக் கையிற்கொண்டு உன் சேனைக்குக் காப்பாளராக விருப்பவராதலால், இனிமுதல் இவர்கட்குச் 'செங்குந்த மன்னர்' என்றும், 'சேனைத் தலைவர்' என்றும் பெயர் வழங்குக; இவர்களை நீ உனக்குற்ற துணைவர்களாகவும், உறவின் முறையினர்களாகவும் கலக்கப் பெறுதலால், நின் பெயரோடு இவர்கள் படைப்பெயருங் கலந்து இனி 'முசுகுந்தன்' என்று உன் பெயர் வழங்கி வருக" என்று திருவாய் மலர்ந்தருளித் தாம் மயில் வாகனத்தோடு பரமாகாசவெளியில் மறைந்தருளினர் என்பது,

"ஞானநா யகனவர் மொழிதனைக் கேட்டுநம் முரைமறுத்தீர்
ஆனதோர் பான்மையா னீவிர்மா னுடவரா யவனி மன்னன்
ருனைநா யகருநற் றுணைவரு மாதிர்பின் றலைவனேக
வானுளோர் புகழவே நோற்றுநம் பக்கலில் வருதிரென்ருன்.

ஐயன்வாய் மொழியினுல் வீரமொய்ம் புடையவ ஞதியோர்
துய்யமா னுடவராய்த் தொல்லைநா ளுடையதோர் சுதன மேற்று
மெய்யெலாம் வியர்வுறப் பதைபதைத் தேங்கியே விழுமமிக்குப்
பொய்யரேம்பிழைபொறுத்தருடியாலென்றுபொன்னடிபணிந்தார்.

கமலமார் செய்யசே வடியின்மேற் ருழ்ந்துகை தொழுதுபோற்றிச்
குமரவேள் விடைதனைப் பெற்றுமானவரெலாங் கொற்ற மன்னன்
றமர்களா யொழுகினுர் நேமியம் படையுடைத் தரும மூர்த்தி
அமரர்கோ னிளவலா யாங்கவன் பின்செலு மமைதி யேபோல்.

இன்னண மவரொழு குறலுமெம் மிறையுல கிறையை நோக்கா
நின்னுறும் பெயரின்மற் றிருவரும் வேற்பெயர் நிறுவி யாண்டும்
சொன்னயம் பெறமுசு குந்தவேந் தாகெனச் சொற்றி நற்ருய்
என்னநின் ருன்மறை தன்னினும் பன்ஞெறு வியல்பி னின்ருன்.

ஆயதோர் காலையின் முசுமுகத் திறையவ னுடல் வேற்கை
நாயகன் பொற்பதம் வந்தியா நிற்பநல் லருள் புரிந்தே
பாயபொன் சுடர்மணித் தோகையம் புரவியும் படைக ளாகும்
மாயிரும் பூதருந் தானுமந் நிலைதனின் மறைத லுற்ருன்"

என்பதையும்,

இப்பால் முசுகுந்தமன்னன் தனது கருவூர் என்னும் பட்டினத்தருகே சிறந்த சிற்பர்களைக்கொண்டு மடவளாகம் வகுத்துப் பல அரண்மனைகளை கட்டி அதனுள் வீரவாகு தேவர் முதலிய வீரர்களை மகா விபவத்துடன் குடியேற்றி அவர்களுக்குத் தனதுறவினர் அரண்மனைகளிற் சிறுமியர்களாய் அவதரித்திருந்த தேவ மாதர்களைத் திருமணம் செய்வித்து வைத்தனன். பின்பு அவ்வீரருள் சேட்டாகிய

வீரவாகுதேவர் தமது மனைவியாகிய புட்பகந்தி யிடத்தில் சித்திரவல்லி என்னும் ஒரு பெண்மகவையும், அனகன் சனகன் என்னும் இரண்டு ஆண்மகவையும் பெற்றார். இவ்வாறே மற்றைய வீரர்களும் தத்தமது மனைவியர்களிடத்து ஆயிரத்தெண்ணூற்றுத் தொண்ணூற்றெட்டு ஆண்மகவையும், பல பெண்மகவையும் பெற்றார். இம் மக்கள் பலரோடும் இலக்கத் தொன்மதின்மரும் மனுகுலந் தழைக்க வாழ்ந்திருந்து பின்பவர்களெல்லோரும் தங்கள் அரசனாகிய முசுகுந்த வேந்தனோடு கூடித் திக்குவிஜயம் செய்து பூமண்டலத்திலுள்ள அரசர்களை யெல்லாம் புறங்கண்டு அம் முசுகுந்த மன்னனுக்குச் 'சக்கரவர்த்தி' என்னும் சிறப்புப் பெயரையும் தாங்கள் அவனுக்குப் 'படைத்துணைவர்' என்னும் பெரும் புகழையும் எங்கும் நிலைபெறச் செய்தனர் என்பது.

"மறைந்தனன் குமர னேக மன்னவன் மகிழ்ச்சி கொண்டு
சிறந்திடு கருவூ ரென்னுந் திருநக ரரசின் மேவி
அறந்தரு மாட வீதி யளப்பில புரிவித் தாங்கே
நிரைந்திடு வீரர் தம்மை நிலைபெற விருத்தி னானே.

ஆயவர் தங்கட் கெல்லா மருபெற லாக்க முள்ள
தேயமுங் கரிதேர் வாசித் திரள்களும் வரிசை முற்றும்
தூயபல் சனங்க ளாகுந் தொகுதியு முதவித் தண்ட
நாயக முதல்வ ராக நல்கினன் ஞால மன்னன்.

அன்னதோர் காலந் தன்னி லரம்பைய ரவனி யாளும்
மன்னவர் தம்பாற் றோன்றி வளர்தலும் வாகை மொய்ம்பின்
முன்னவன் முதலோர்க் கெல்லா முசுகுந்த வேந்த னந்தக்
கன்னியர் தம்மைக் கூவிக் கடிமண மியற்று வித்தான்.

அந்தமில் வன்மை சான்ற வாடலம் புயத்தோன் புட்ப
கந்தியென் னுரைபெற் றுள்ள கன்னிகை தன்னை வேட்டுச்

சிந்தையின் மகிழ்வாற் சேர்ந்து சித்திர வல்லி யென்னும்
பைந்தொடி தன்னை யன்பாற் பயந்தனன் பதும மின்போல்.

அத்தகு பொழுது பின்னே யனகனே சனக னென்னும்
புத்திரர் தம்மை நல்கிப் புவனியாண் முசுகுந் தற்குச்
சித்திர வல்லி யென்னுஞ் சீர்கெழு புதல்வி தன்னை
மெய்த்தகு வதுவை நீரால் விதிமுறை வழாம லீந்தான்.

ஏனைய வீரர் தாமு மியல்புளி வழாமல் வேட்ட
தேனிவர் குழலா ளோடுஞ் சிறந்தவில் வாழ்க்கை போற்றிப்
பானலங் குதலைச் செவ்வாய்ப் பாலரை நீல வேற்கண்
மானனை யாரை நல்கி மனுகுலத் தொன்றி யுற்றார்.

பின்பொரு நாளின் மன்னன் பேசரும் வாகு தன்னால்
தன்பெருஞ் சேனை கூட்டித் தராதிபர் தம்மை வென்று
பொன்புகழ் சக்ர வர்த்திப் புதுப்பெயர் தாங்கி யொல்லை
தன்பெரும் கோயில் புக்கான் சான்றவ ராசி கூற.''

என்பதையும் உணர்த்துகின்றது. ௩௦

## தியாகரைப் பூமியிற்கொணர்ந்த சிறப்பு

### கொச்சகக்கலிப்பா

விண்மோர்பத் திடையிருத்தி வேலைக்கௌரி பணிமாறப்
பண்டூசித் திடுங்காலை யாகண்டலன்போய்ப் பாற்கடலின்
வண்டோய்மா யனைவணங்கி வானிற்பழிச்சுந் தியாகரைமேற்
கொண்டுபோந்து பாரின்முசு குந்தற்குதவுஞ் செங்குந்தம்.

இ - ள். பூர்வத்தில் திருமாலானவர் தியாகராயரைத் தமது மார்பின்கண் எழுந்தருளச்செய்து பாற்சமுத்திரத்திற் பிறந்த இலக்குமி பணிசெப்பும்படி பூசித்திருக்கும் காலத்தில், இந்திரன் வாற்கலி அசுரனால் துன்பமடைந்து திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் வளப்பம் பொருந்திய துளப மாலையை யுடைய அவ் விண்டுவை வணங்கி அவரால் அத் துன்பத்தை நீக்கிக்கொண்டது மன்றி அத்

தியாகரையும் பெற்றுச் சுவர்க்கத்திற் கொண்டுபோய்த் தான் பூசித்துவருங் காலத்து வலன் என்னும் அவுணனோடு நெடுநாளாக யுத்தஞ்செய்தும் அவனைப் புறங்காணக் கூடாமையாற் பூமியின்கண் முசுகுந்தச் சக்கரவர்த்திக் கறிவிக்க, அவர் வீராவாகுதேவர் முதலிய தனது சதுர்வித சேனைகளாலும் அவனை யழித்த காலத்து இந்திரன் மகிழ்ந்து நவ வீரர்களைப்பார்த்து நீங்கள் செய்த நன்றிக்கு என்பாலுள்ள பொருள்களில் வேண்டுவனவற்றைக் கேளுங்கள் கொடுப்பேனென, அவர்கள் அழிந்துபோகும் மற்றைய பொருள்களை விட்டு அழியாததாய் அவனுன்மார்த்தமாகப் பூசிக்குந் தியாகரைக் கேட்க, அதை அவன் கொடுக்க மனமில்லாமையால் விசுவ கர்மாவினால் ஆறு தியாகரைச் சிருட்டி செய்வித்து ஒவ்வொன்றாகக் கொடுக்க, அஃதல்ல அஃது அல்லவென்று அவர்கள் மறுத்து மூல விக்கிரகத்தைக் கேட்க, அப்போது மறுக்கக்கூடாமையால் அவன் ஆன்மார்த்தத்தையும் கொடுக்கப்பெற்று அரசனாகிய முசுகுந்தச் சக்கரவர்த்திக்குக் கொடுத்துத் திருவாரூர் முதலிய சத்தத் தலங்களிலுந் தாபித்துவைத்தது அவர்கள் கையிற்றாங்கிய செங்குந்தம் எ - ம்.

தியாகராயப் பெருமான் 'விண்டு மார்பத்திடை' எழுந்தருளியிருதார் என்பது,

"நிற்பமற் றித்திற நேமியான் முன்னைநாள்
அற்புடன் வழிபடு மமலையைக் குமரனைத்
தற்பரக் கடவுளைத் தனதுமார் பிற்கொடே
பற்பகற் பணியின்மேற் பாற்கடற் றுஞ்சினான்"

என்பதையும்,

அத் தியாகராயப் பெருமானை 'ஆகண்டலன் வானில்' கொண்டுபோனான் என்பது,

"பார்த்தியா லெனதெனும் பைம்பொன்மார் பத்திடை
முர்த்தியாய் வைகிய முதல்வியைக் குமரனைத்
தீர்த்தனைப் பூசனை செய்துநின் றீவினை
யார்த்திநீங் குதியெனு வாதரத் தருளினன்"

என்பதையும்,

பிறகு முசுகுந்தன் அவ் விடங்கமூர்த்தியை பூமியில் கொண்டுவந்தான் என்பது,

"நன்றெனவே விடைகொண்டு நானிலத்தி னிடையிழிந்து
தென்றிசையா ரூர்தன்னிற் சிவனுறைபூங் கோயில்புக்கு
மன்றல்கமழ் தண்டுளவோன் வழிபடவீற் றிருந்தோரை
வென்றியரி யணைமீதில் விதிமுறையாற் றாபித்தான்."

என்பதையும் உணர்த்துகின்றது. ௯௧

## இயமனுக்குத் திருமுகமளித்தச் சிறப்பு

கலிநிலைத்துறை

பிள்ளை யாருயிர்க் குறுந்துணை யாத்தனிப் பேறெய்துங்
கிள்ளை யாரிவண் கோடுவரு கென்றுட லங்கீறிக்
கொள்ளை யாருயிரேரி நரகுறவடுங் கூற்றுயிர் நனிசோர
வள்ளியாவரு நடுக்கத்தந் திருமுக மேசெலுத் தோண்குந்தம்.

இ - ள். முசுகுந்தச் சக்கரவர்த்தியின் மனைவியும் வீரவாகு தேவருடைய பெண்ணுமாகிய சித்திரவல்லி அம்மையார் வளர்த்த தன்னுயிர்க்கு மிகுந்த துணையாகும் படியான ஒப்பற்ற தவப்பேறைப் பெற்ற கிளிப்பிள்ளையை உமது தூதர்கள் திருடிப்போயினதாகக் கேட்டோம் அதை இந் நிமிட மிங்கு கொண்டு வரக்கடவாய் என்று இதைக் கருதிய யாவரும் நடுநடுங்கும்படி வீரத்தைச் செலுத்தி, உலகத்திலுள்ள உயிர்களுடைய உடலங்களைக்

கிழித்து மிகுதியாக நிறைந்த உயிர்களை எரிகின்ற நரகத் திற் பொருந்தக் கொல்லுகின்ற யமனுக்கு அவனுயிரும் பதைபதைக்கும்படி தமது திருமுகத்தை அனுப்பியோர் விளக்கமான செங்குந்தத்தலைவர்கள் எ - ம்.

சரித்திர வரலாறு - திருவாரூர்லீலை - முசுகுந்தச்சருக்கம்

பூமண்டலத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தி வீரவாகு தேவர் முதலிய துணைவர்களைக் கொண்டு அரசாண்டு வரும்போது ஓர் பிரளய முண்டாகிச் சராசரங்களை யெல் லாம் அழித்துப்போட்டது. அப்போது சக்கரவர்த்தியார் வீரவாகு தேவர் ஆதிய துணைவர்களோடு தாம் கிளியுருக் கொண்டு சுவர்க்கலோகம்போய்ச் சேர்ந்து பழைய உருவத் தோடு வாழ்ந்திருந்தனர்.

அக்காலத்தில் ஓர் நாள் சக்கரவர்த்தியார் சிவதரிச னார்த்தமாகக் கைலைமலையை யடைந்து நந்திதேவரனுமதி யில் உமாபரமேச்சுரர் திருமுன் சென்று வணங்கி நின்றார். அப்போது சோமாஸ்கந்தப் பெருமான் அச்சக்கரவர்த்தி யைப் பார்த்தருளி, "நீ இங்ஙனம் யாது வேண்டிவந்தனை அதனைக் கூறக்கடவாய் தருதும்" என்று அன்போடு சொற்றனர். உடனே அம்மன்னர் மன்னன் சிவபெரு மான் திருவடியில் மீண்டும் பணிந்து, "தேவதேவனே, எல்லாம் உணர்தற்கிடமாகிய சந்நிதானத்தில் அடியேன் எடுத்துச்சொல்ல வேண்டிய தொன்றில்லை, என்னுல் ஆண்டுவந்த பூமண்டலம் பிரளயத்தால் மூடப்பட்டுப் போயின; நானும் இத்துணைவர்களும் வேறு வழியின்றிச் சுவர்க்கலோக மடைந்து வசித்துவருகின்றோம்." என்று கூறி நின்றான். இம்மொழியைக் கேட்ட பெரிய பெரு மான் அம் முசுகுந்தனைப் பார்த்து, "பிரளயம் இப்போது

நீங்கிவிட்டது. இனி நீ போய் பூமண்டலத்தை ஆளலாம் அழிவெய்திய சராசரங்கள் முழுவதும் முன்னையபடியே நம் சந்நிதான விசேஷத்தால் அமைந்துகிடக்கும்'' என்று திருவாய்மலர்ந்தருளினர். இப்பால் அம்முசுமுகச்சோழன் சிவபெருமானை மறுபடியும் வணங்கி, "எம்பெருமானே, அடியேன் தேவரீர் குமாரர்களாகிய வீரவாகு தேவர் முதலிய துணைவர்களால் உலகின்கண்ணுள்ள பல அரசர்களையும் வென்று ஏகச்சக்கராதிபத்தியம் கொண்டிருக்கின்றேன் ஆனல் இனிப் புதிய பூமண்டலத்தையாளச் சந்தானம் வேண்டி ஒரு பத்தினியை இங்கே விரும்புகின்றேன். அதனைப் பிரசாதித்தருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனன். அப்போது சிவபெருமான் வீரவாகுதேவரைக் கூவி, "உபசுப்பிரமணியனே, இவ்வரசனுக்கு உன் புத்திரியை விதிப்படி பாணிக்கிரகணம் செய்து கொடுத்திடுக'' என்று பணித்தருளிச் சக்கரவர்த்திக்கு விடை கொடுத்தனுப்பினர்.

உடனே வீரவாகுதேவர் சக்கரவர்த்தியுடன் அக் கைலையினின்றும் புறப்பட்டு சுரேந்திர குமாரனும் சுரேந்திர காந்தையினும் சன்மானிக்கப்பட்டுள்ள தமது தம்பியராகிய ஆடவர்க்கும் தாரமாகிய பெண்டீர்க்கும் சிவபெருமானுடைய அருளுப்பாட்டினை யுணர்த்தி, அரிபிரமேந்திராதிய அமரர்கள் முன்னிலையில் வசிட்டராதிய முனிபுங்கவர்களைக்கொண்டு திலீபச்சக்கரவர்த்தி குமாரனாகிய முசுகுந்தச் சக்கரவர்த்திக்கும் தமது குமாரத்தியாகிய சித்திரவல்லி அம்மைக்கும் திருக்கலியாண மகோற்சவத்தை நடாத்தி முடித்தனர். பின்னர் முசுகுந்தச் சக்கரவர்த்தியார் தாம் சிவபெருமான் கட்டளையின்படி பூவுலகம் செல்லுமாறு உத்தேசித்துத் தன் மாதுலனாகிய வீரவாகு தேவருக்கு அறிவித்தார். அது கேட்ட வீரவாகு தேவர்

தமது தம்பியர்க்கும் மனைவி மக்கள் ஆகிய சுற்றத்தினர்க்கும் அதனைத் தெரிவித்து அவர்களோடு சக்கரவர்த்தியை யுடன்கொண்டு பூவுலகிற்குப் பிரயாணமாகுங்கால் இந்திராணி அம்மையார் தாம் அருமையாகப் போற்றி வளர்த்துவந்த கிளிப்பிள்ளை யொன்றைத் தங்களுக்குச் சுவர்க்காதி போகங்களை மீட்டுக்கொடுத்த வீராதி வீரர்களுடைய அருமருந்தன்ன குமாரத்தியும், முசுகுந்தச் சக்கரவர்த்தி மனையாளும் ஆகிய சித்திரவல்லி அம்மையாருக்குப் பரிசாகக் கொடுத்து மங்கல ஆசி கூறி வழி அனுப்பினாள். பிறகு சித்திரவல்லி அம்மையும் மன்னர்மன்னனும் வீரவாகுதேவர் முதலிய வீரரும் ஒன்றுகூடித் திருக்கைலாயமடைந்து சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கிப் பிரியாவிடைகொண்டு பழையபடி பூவுலகில் வந்து சேர்ந்தார்கள். பின்னர் முசுகுந்தச் சக்கரவர்த்தி வீரவாகுதேவர் முதலிய சம்பந்திகள் துணைகொண்டு பிரளயத்தால் அழிந்துபோன அரண்மனையாதிகளை விசுவகர்மாவினற் புதுக்கி மாண்டு பிழைத்த மானுடர் யாவர்க்கும் வருணாச்சிரம தருமங்களை விதித்து நல்லோரையில் இராச்சியப் பட்டாபிஷேகம்செய்துகொண்டு அரசியற்றி வாழ்ந்து வந்தனன் என்பது,

"முன்னமோ ரூழி நாளின் முசுமுக மன்னன் கிள்ளை
தன்னுரு வெடுத்துப் பூமி தணந்தொரு சுவர்க்க மேவி
மன்னிவீற் றிருந்து பன்னாள் வதிந்தன னங்கோர் நாளில்
சென்னியிற் கங்கை வைத்த தேவனை மலையிற் கண்டான்.

கண்டலுங் கடவுள் பார்த்துக் கருணையோ டருளிச் செய்வான்
மாண்டலை மன்ன ரேறே வாழிநீ புவனி தன்னிற்
றீண்டிய வூழி தீர்ந்து திருவொடு மனையும் பெற்று
ஆண்டகை வீர ரொன்பா னழகிய துணைவ ரோடே.

6

என்றநல் வரங்கள் போற்றி யிணையடி தொழுது மன்னன்
மன்றலங் குழலாள் சித்ர வல்லியை வதுவை செய்து
பொன்புக ழிந்தி ராணி புகழ்கிளி கொடுப்ப வாங்கித்
தன்றிரு மனைக்குத் தந்து தாரணி வந்து சேர்ந்தான்.

சேர்ந்துமுன் வளங்க ளெல்லாந் திரும்பவு மடைந்து நாட்டைக்
கூர்ந்திடு மறிவாற் கண்டு குமரவேட் டுணைவ ரோடும்
ஆர்ந்துணை பலவுஞ் சேர்த்தொ ரரியணை யதன்மேற் கொண்டு
வேந்தர்கள் வேந்த னாக வீற்றிருந் தாண்டான் மன்னோ"

என்பதையும்,

இப்பால், சித்திரவல்லி அம்மையார் தாம் வளர்த்து வந்த கிளிப்பிள்ளையை, யமதர்மன்மனையாள் விரும்பிக் கால தூதர் முகமாக அக் கிள்ளையைத் தனதிடம் வருவித்துக் கொண்டாள். அப்பொழுது சித்திரவல்லி அம்மையார் தனக்கு இந்திராணி கொடுத்த கிள்ளையைக் காணாதவளாய் வருத்தமடைந்து தனது நாயகனுக்குத் தெரிவித்தாள். உடனே முசுகுந்தச் சக்கரவர்த்தியார் தூதுவர்களை விட்டுக் கிள்ளை யிருக்குமிடமறிந்து தனது மாதுலராகிய வீரவாகு தேவர்பால் அதனைத் தெரிவித்தனர்.

அது கேட்ட வீரவாகுதேவர் அப்பொழுதே நமனுக் கொரு திருமுக மெழுத ஆரம்பித்து அதில், "சமன வதி நகருக்கதிபனாகிய நமனாருக்கு வீரரில் வீரனாகிய வீரவாகுதேவன் அறிவிப்பது யாதெனில், முசுகுந்தச் சக்கரவர்த்தி மனைவியும் எனது புத்திரியுமாகிய சித்திர வல்லி அம்மையார் வளர்த்துவந்த தேவலோகக் கிளிப் பிள்ளையை உமது தூதர்கள் அவளுத்தரவின்றிப் பிடித்துப் போனதாகத் தெரியவருகின்றது. அதனை யிக்கணமே கொண்டுவந்து சேர்த்திடுக" என்றெழுதி ஒரு தூதனிடங் கொடுத்து யமலோகம் அனுப்பினர்.

அத் தூதன் அத் திருமுகம் கையிற்கொண்டு பிரயாண மாய்ச் சமனுவதி சேர்ந்து யமதருமராஜன் கையிற் கொடு தான். திருமுகம் பெற்ற யமதருமராஜன் குறிப்பறிந்து தனது மனைவியிடம்போய் அதைப் படித்துக்காட்டி, "அடி யென்காதலீ! இத் திருமுகம் அனுப்பிய வீரவாகுதேவனை யும் அவர் துணைவர்களையும் இலேசாய் நினையற்க; அவர் களை வெல்லுவது அயனுதி மூவருக்கும் அரிதாகும்; நீ கிளிப்பிள்ளையைக் கொடு. நானே அதை நேரிற்கொண்டு போய்க்கொடுத்து அவர்களைச் சினேகஞ்செய்து இங்கே வருகிறேன்" என்று இதமாகப் பல கூறினன். இதனைக் கேட்ட அத் தருமன்தேவியார் யாதொன்றும் பதில் சொல் லாமலும் கிளிப்பிள்ளையைக் கொடாமலும் மௌனமா யிருந்தாள். அதனைக் கண்ட யமதருமன் தனக்குள்ளே மிக்க வருத்தமுடையனுய் ஒன்றுந் தோன்றுமல் திரு முகம் கொண்டுவந்த தூதனை வறிதேயனுப்பி நின்று விட்டான். அவ் விளைவினை வீரவாகுதேவர் தாம் அனுப்பிய தூதனுலறிந்து அப்போதே தமது சகோதரர்களோடு சது ரங்க சேனைகளும் தம்மைப் புடைசூழ்ந்து வரச் சமனு வதிப்பட்டினம் அடைந்து அதனை முற்றுகை செய்து யமதருமராஜனேடு பெரும்போர் விளைத்தார். அப் போரிற் புறங்கண்ட தருமன் வீரவாகுதேவரைப் பணிந்து தம்மனை யாளிடமிருந்தசித்திரவல்லி அம்மையாரது கிளிப்பிள்ளையை வாங்கிக்கொடுத்து உபசாரம் பல செய்தனுப்பினுன்.

பிறகு வீரவாகுதேவர் தமது துணைப்படைகளுடன் சமனுவதியைக்கடந்து, கருவூர் வந்து சேர்ந்து, முசுகுந்த மன்னனுடன் அளவளாவி, தாம் செயித்துக் கொண்டுவந்த கிள்ளையை, தனதுமகளாகிய சித்திரவல்லி அம்மையாருக் குக்கொடுத்து, அவளை மகிழ்ந்திருக்கச்செய்தனர் என்பது,

"சித்திர வல்லி யென்னுஞ் சீருடைச் செல்வி யங்கோர்
தத்தையை வளர்த்த லோடுந் தண்டகத் தருமன் றேவி
யத்தனிக் கிளியை வெஃக வாங்கவன் றூதர் போந்து
கைத்தலத் ததனைப் பற்றிக் கடிதினிற் கொடுபோ யீந்தார்.

அவ்வழி கிள்ளை காணு ளாயிழை யயர்த லோடும்
எவ்வழி போயிற் றேவென் றிறையவ னுலகி னுடி
மைவழி கின்ற மேனி மறலிதன் றுணைவி யானுள்
கைவழி யமருந் தன்மை கதுமென வுணர்ந்தா னன்றே.

பூதலம் புரந்த செங்கோற் புரவலன் வீர மொய்ம்பன்
ஆதியர் தம்மைக் கூவி யங்ஙனந் தூண்ட வன்னோர்
ஏதமில் கரிதேர் வாசி யெல்லையின் மறவர் சுற்ற
மேதியங் கடவுண் மூதூர் விரைந்துபோய் வளைந்து கொண்டார்.

தன்னகர் வளைத லோடுந் தருமன்வந் தேற்ற காலை
யன்னவனொடுபோர்செய்தேயடுமுரண்டொலைச்சியம்பொற்
வன்னமென் கிள்ளை தன்னை வாங்கினர் மீண்டு தங்கண்
மின்னுள மகிழ நல்கி வேந்தற்கு விசயம் செய்தார்"
என்பதையும் உணர்த்துகின்றது. ௯௨

பதினெண்மலையாளம் வென்ற சிறப்பு

அறுசீர்விருத்தம்

வடிவே லெடுத்த மனுதுங்க வளவன்
றேவி வேதுப்பாற
முடிவேள் லியிற்சேந் தீத்தருகான் முளைமாங்
கனிக்காக் குடநாட்டைச்
செடிவே ரறுத்துச் சிறையிட்டேச் சேன்னி
வியப்பத் திறைபோலக்
கோடிவாண் முரசு களிறுபரி யிரதங்
கோடேக்குஞ் சேங்குந்தம்.

இ - ள். கொல்லனுலையில் வடித்தெடுத்த வேலாயுதத்தைக் கையிற்றாங்கிய மறுநீதி தவறாத பெருமை பொருந்திய முசுகுந்தச்சோழன் மனைவியாகிய சித்திரவல்லி அம்மையார் கேரளதேசத்தரசன் செய்வித்த யாக்காக்கினி தந்த சந்தானமாங்கனி கிடையாததாற் கொண்ட வெப்பம் நீங்க, வீரவாகு தேவராதி தம்பிமார்கள் குடநாட்டிலுள்ள அம் மாமரத்தை வேரோடு பிடுங்கிக்கொண்டு தங்கள் அரசனாகிய சோழராசன் ஆச்சரிய மடையும்படி அக் கேரளராசனைச் சிறையிட்டு அவனது கொடி வாள் பேரிகை யானை குதிரை தேர் இவைகளைத் திறையாகக்கொண்டு வந்து கொடுக்கும்படி செய்தது இச் செங்குந்தம் எ - ம்.

சரித்திரவரலாறு - கந்தபுராணம் - கந்தவிரதப்படலம்

முசுகுந்தச் சக்கரவர்த்தி மனைவியாராகிய சித்திரவல்லி அம்மையார் கருப்பமடைந்து, இனிய காய் கனி கிழங்குகளை யுண்ண விருப்புற்றுத் தன் கணவனுக் கறிவித்தனள். உடனே சக்கரவர்த்தியார் அக் காய் கனி கிழங்குகளைக் கொண்டு வரும்படி சில தூதரைக் கூவி மலையாள தேசத்துக் கனுப்பினர். சென்ற தூதர்களை மலையாளத் தேயத்தவர்கள் சிறிதும் மதிக்காமலும் அவர்கள் வந்த காரியத்தை நிறை வேற்றாமலும் வறிதே அனுப்பிவிட்டார்கள். இது கண்ட சக்கரவர்த்தியார் பின்பு வீரவாகுதேவர் முதலிய செங்குந்த வீரர்களை அக் காய் கனி கிழங்குகளை கொண்டு வரும்படி யனுப்பினர். அப்போதே யவர்கள் நால்வகைப் படைகளும் சூழப்போய் ஒருபகலில் பதினெண் மலையாளங்களையும் போரில் வென்று ஆங்காங்குள்ள காய் கனி கிழங்காதி வர்க்கங்களை எல்லாம் தோற்றவர்கள் சிரங்களின் மீது எடுப்பித்துக்கொண்டு வந்து தமது செல்வப் புதல்வியாகிய சித்திரவல்லி அம்மையாருக்குக் கொடுத்து உண்

பித்துச் சக்கரவர்த்தியாருக்கு மேலுமேலும் வெற்றியை உண்டாக்கினர் என்பது,

"சித்திர வல்லி பின்னர்ச் சீர்கெழு சூல்கொண் டுற்று
மெய்த்தகு பலங்காய் வேண்டிவேண்டினள்வினவலோடும்
முத்தணியலங்கற்றிண்டோண் முசுகுந்தனதுகொண்டேக
அத்திரு மலைநன் ஞட்டுக் களப்பிலோர் தம்மையுய்த்தான்.

மஞ்சுசூழ் மலைநா டுள்ளார் மன்னவர் மன்ன ஞணைக்
கஞ்சல ரிகழ்த லோடு மாடலம் புயனு மேனைச்
செஞ்சிலை வீரர் தாமுஞ் செற்றன ரந்நாட் டுள்ள
வெஞ்சுர மீரொன் பானும் வென்றொரு பகலின் மீண்டார்.

பூண்டிடு கழற்கால் வீரர் பொற்புறு புதல்வி யானுள்
வேண்டிய தீய பைங்காய் வியத்தக நல்கிப் பின்னர்
ஈண்டுள தரணி யெல்லா மேகியே திறைகொண் டெங்கு
மாண்டைய மன்னன் கோலு மாணையுநடக்கச்செய்தார்."

என்பதை யுணர்த்துகின்றது. ௩௩

### சுபன் யாழ்பாணதேயம் வென்ற சிறப்பு

ஆழநீள் கடற்கு மாங்கோ ரம்பிமேற் சென்றே யப்பாற்
சூழ்திருச் செந்து ருற்ற சுபனேன்பான் றுணையாய்க் கோண்டு
வாழிரா சாதி ராச மன்னவன் மருவ லான்றன்
ஈழநா டொருநா டன்னிற் றிறைகோண்டீண் டேற்ற குந்தம்.

இ - ள். செங்குந்தர் ஆழமு நீட்சியயு முடைய கடலைத் தாண்டுவதற்கு ஓர் கப்பலின்மேற் சென்று அக்கடலினுற் சூழப்பட்ட திருங்செந்தூர் என்னும் திருப்பதியிற் சென் றிருந்த சுபன் என்னுஞ் செங்குந்தனைத் துணையாகக் கொண்டு, மேலான செல்வத்தோடும் வாழாநின்ற இரா சாதிராசனாகிய தங்களது சோழமகாராசனுக்குச் சத்துரு

வாகிய யாழ்ப்பாண தேசத்துக் கரசனை ஒரு நாளிற் செயங் கொண்டு ஆங்குள்ள பொருள்களையெல்லாம் கப்பமாகக் கைக்கொண்டு திரும்பி வந்தனர் எ - ம்.

ஆங்கு - அசை. குந்தம் - ஆகுபெயர்; அதற்கேற்ப அஃறிணை முடிபு தந்தனர்.

'செந்திற் சுபன் துணையாக்கொண்டு ஈழநாடு ஒரு நாள் தன்னில் திறை கொண்ட குந்தம்' என்பது,

"முன்னமோர் பகலி லீழ முதல்வனை வென்று வாகை
மன்னவர் மன்ன னுன மனுகுல முதலுக் கீந்த
பொன்னவர் போற்ற வாழ்ந்த புகழ்சுபன் வீரத் தன்மை
என்னெனவெடுத்துச்சொல்வேனென்றனன்முனிவர்கோமான்."

என்பதை யுணர்த்துகின்றது. ௬௬

கௌதன் உச்சினி யாதி வென்ற சிறப்பு

மச்சநா டுடைய கோமேல் வங்கநா டாளு மன்னன்
குற்சர வரசற் காகச் சமரமேற் கொண்டு கொற்றக்
கைச்சலி யாமற் கொல்லுங் காலையிற் கௌத னென்பான்
உச்சினி தொடங்கிப் போர்செய் குந்தம்போ லுலகி லுண்டோ.

இ - ள். வங்கநாட்டை யாளுகின்ற அரசனானவன் குச்சரதேசத் தரசனிமித்தம் மச்சதேசத்தரசன்மேல் யுத் தத்தை மேற்கொண்டு வெற்றிபொருந்திய தன்கை சலிப் பின்றிச் சங்கரிக்குங் காலத்துச் சோழதேசத்துச் சக்கர வர்த்தியாகிய கௌதன் என்னுஞ் செங்குந்தத் தலைவன் கோப மீறி, உச்சினி தேசந்தொடங்கி அவர்கள் தேசங்களை யெல்லாம் நாசம்பண்ணி யடங்கச்செய்தான். ஆதலால் இக் குந்தம் போ லுலகிலுண்டோ எ - ம்.

'உச்சினி தொடங்கிப் போர்செய் கௌதன்' என்பது,

"கன்னாட்டு மனத்தவருங் கசிந்துருகக்
கருணையொடு வலனும் பெற்றுப்
பொன்னாட்டுப் புலவர்களும் போற்றிடவே
பூமிதனிற் புகழைப் பூண்டுத்
தென்னாட்டை முழுதாண்ட கௌதப்பேர்ச்
செங்குந்த மன்னன் பின்னர்ப்
பன்னாட்டை யாண்டதனைப் படித்திடுவாம்
கேண்மினெனப் பணியன் சொல்வான்."

முன்னமோர் பகலில் வங்க முடியுடை வேந்தன் பூமேல்
தன்னையே நிகரு மச்சத் தாரதிபன் வேண்டு கோளால்
பன்னருந் தானை கூட்டிப் படைக்கலம் பலவுந் தாங்கி
முன்னைய வினையால் மச்ச தேயனை முனிவிற் கண்டான்.
இவ்வினை வதனை வொற்ற ரெடுத்தனுள் சொல்லக் கேட்ட
கவ்வைசூழ் ஞாலங் காக்குங் கௌதப்பேர் மன்ன னந்த
தெவ்வரைப் போரில் வென்றத் தேயத்தர் திறைகொண் டேத்த
செவ்விய கோலா லன்னோர் சிறப்புறச் செய்தான்மாதோ."

என்பதை யுணர்த்துகின்றது. ௩௫

படைமருதன் சிறக்கையானை வென்ற சிறப்பு

இடைமரு தூரிற் சாப மேந்திய சிறக்கை யானை
புடைமரு தடியின் வீழப் பொருதியே புறங்கோ டாது
விடைமழ வுடையான் பாத மேன்கம லத்திற் சேர்த்த
படைமரு தன்கைக் குந்தம் போலினிப் பாரி லுண்டோ.

இ - ள். திருவிடைமருதூரிலே அரசாட்சி செய்து கொண்டிருந்த படைமருதன் என்னும் செங்குந்தத் தலைவன் கையில் வில்லும் பாணமும் ஏந்தி யுத்தசன்னகமாக வந்த சிறக்கையான் என்னும் பகைவனை அவன் புறங்

கொடுத்தோடாது பருத்த மருதவிருக்கத்தினடியில் வீழும் படி யுத்தஞ்செய்து, இடபவாகனமும் மழுவாயுதமும் உடையானுகிய பரமசிவனது மிருதுவான தாமரை மலர்போன்ற திருவடியிற் சேர்த்தான். ஆதலால் அவன் கையின்கணுள்ள குந்தம்போல இக்காலத்து இவ் வுலகத்திலில்லை எ - ம்.

'சிறக்கையானை மருதடியின் வீழப்பொருதி மழுவுடையான் பாதத்தில் சேர்த்த படைமருதன்' என்பது,

"சிவங்கொண்ட விடைமருதி லிருந்தரசு
சீர்த்தியுடன் செய்து வந்த
தவங்கண்ட படைமருதன் தரணியெலாம்
வாழ்வடையத் தன்னுட் கொண்டே
பவங்கொண்ட சிறக்கையான் றனையட்டுப்
பரசிவத்தின் பதியில் வைத்தான்
நவங்கண்ட வவன்குந்தப் பெருமிதத்தை
நன்கறைய நம்மா லாமோ."

என்பதை யுணர்த்துகின்றது. ௩௬

செங்குந்தர் வங்கதேயம் வென்ற சிறப்பு

கலிவிருத்தம்

கூளிபா றினமிடங் கோண்டு சுற்றவே
காளிசா தகரேலாங் களத்தி லாடவே
வாளிதொட் டெழுமொரு வங்கக் கோவைமுன்
றேளிணை யாற்பொருந் துங்கைக் குந்தமே.

இ - ள். கழுகுகளும் பருந்துகளும் இடமும் வலமுமாக வட்டமிட்டுச் சுற்றிவரவும், காளியும் அவளது பரிவாரங்களும் யுத்தகளத்தில் நடனஞ்செய்யவும், பாணப் பிரயோகங்களைச் செய்தோங்கிய ஒரு வங்கதேசத்தரசனை, ஆதியில் செங்குந்தத் தலைவர்கள் தமது இரண்டு

தோள்களினாலும் பொருது செயங்கொண்டது இப் பெருமை பொருந்திய செங்குந்தம் எ - ம்.

செங்குந்தத் தலைவர்கள் வங்கதேசத்தரசனை வென்று திறை கொண்டனர் என்பது,

"வங்கத் திறையரசை வாட்டுஞ் சிவகுந்தம்
பொங்கு புவியிற் புகழ்குந்தம்—எங்குந்தான்
ஆய முருக னடியிணையி லன்புடைய
தூயகுலக் குந்தமெனச் சொல்."

என்பதை யுணர்த்துகின்றது. ௬௭

செங்குந்தர்க்கெங்குமெதிரின்மைச் சிறப்பு

அறுசீர்விருத்தம்

வானைவென் றுவரி சூழ்ந்த மண்ணைவென் றவுண ரான
கானைவென் றம்பு ராசிக் கடலைவென் றருங்க லிங்கன்
சேனைவென் றலங்கன் மார்பஞ் செறியுமா மடங்கல் வையக்
கோனைவென் றரிய வாகை கொண்டெனத் திரியுங் குந்தம்.

இ - ள். இச் செங்குந்தமானது வானுலகத்திலுள்ள பகைவரை வென்று, கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்திலுள்ள அஞ்சலரை வென்று, அவுணர்கள் என்று சொல்லா நின்ற காட்டை வென்று, அம்புராசி என்னும் கடலை வென்று, சயித்தற்கரிய கலிங்கதேசத்தரசனோடு அவனது நால்வகைச் சேனையை வென்று, மார்பினிடத்து வெற்றி மாலை பொருந்திய பெரிய சிங்கத்தையொத்த வையக்கோன் என்னும் அரசனை வென்று, கிடைத்தற்கரிய அவ்வெற்றி மாலையை மேற்கொண்டதென்று யாவருஞ் சொல்ல உலக மெங்குஞ் சஞ்சரிக்கும் எ - ம்.

கொண்டது என என்பது கொண்டென என்று திரிந்து நின்றது.

வான்-மண்-ஆகுபெயர். அவுணரானகான்-உருவகம்.

செங்குந்தத் தலைவர்க்கு யாண்டும் எதிரில்லை என்பது,

"அறிவுடைப் பெரியீர் விரியுரை கேண்மோ
சூரியன் பகைஞ ருருயி ருண்ட
வீரருள் வீர வீர வாகுவின்
வழிமுறை வந்து கழிபெருந் தவத்துச்
சான்றோர் போற்றத் தாரணி தன்னில்
பகைபல கடிந்து தொகைபடு முயிருக்
கிதம்புரி குணனே வியைந்து நின்ற
அன்னவர் பெருமை யளப்பரி தாகும்
என்ன விடுத்தன னின்னூ றனிலே."

என்பதை யுணர்த்துகின்றது. ௬௮

திறைவாங்கும் சிறப்பு

செங்கோ னடத்தும் வளவனிட்ட சிங்காதனத்தி லினிதிருந்த
நங்கோன் கவியே கவியென்று நாட்டிக் கவிபுன் களைகளைந்து
வங்கோ டீழங் கன்னட மாராட் டிரங்குச் சரஞ்சீனங் [தம்.
கோங்கோடேங்குந்தரத்திறையேகோள்ளுமின்னூர்செங்குந்

இ - ள். இவர்கள் கையிற்றாங்கிய செங்குந்தமானது மநுநீதி வழாது செங்கோல்நடத்திய சோழராசனால் இடப்பட்ட சிங்காதனத்தில் இனியவாக வீற்றிருந்த நமது கவிராசனாகிய அம்பலக் கூத்தனாற் சொல்லப்பட்ட பிரபந்தமே பிரபந்தம் என்று உலகில் நிலைபெறவைத்து மற்றைப் புன்கவிகளாகிய களைகளை அறவே நீக்கி, வங்கம் - ஈழம் - கன்னடம்-மாராட்டிரம் - குச்சரம் - சீனம் - கொங்கம் முதலிய ஐம்பத்தாறு தேசங்களும் திறை கொடுக்கப் பெற்று அரசாட்சி செய்தது எ - ம்.

வங்கு - அம் - கடைக்குறை.

'நங்கோன் கவியே கவி' என்பது,

"கூத்தன் றவக்கவியைக் கொண்டவீர பத்திரனுர்
ஏத்துசங்க மற்குயிரை யீந்தளித்தார்—பார்த்திபா
கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னுற்ற றலைப்பட் டவர்க்கு."

என்பதையும்,

"ஆற்றங் கரையி லரசிருந்தாள் வாழியெனப்
போற்றும் புலவர்பிரான் பொன்பாடல்—ஏற்றமே
காட்சிபல காட்டிப்பின் கந்தழியைக் கூட்டுங்காண்
வேட்டவர்க்கு நன்ருக வே."

என்பதையும் உணர்த்துகின்றது. ருகூ

### மரபிரண்டின் புலிக்கொடிச் சிறப்பு

#### கலிவிருத்தம்

கலிக்குறும் படுவேள வனுக்குங் காதுசூர்
வலிக்குறும் படுதேனி வாகைக் குந்தர்க்கும்
பலிக்குநற் புகழெலாம் பாதி யாதலாற்
புலிக்கோடி மரபிரண் டினுக்கும் போந்ததால்.

இ - ள். இவ் வுலகத்தில் தரித்திரம் என்னும் பொல்லாங்கை நிலைபெருது அழிக்கின்ற சோழனுக்கும், போர்செய்கின்ற சூரபதுமனது வல்லமை நிலைபெருது அழித்த செங்குந்தர்க்கும், கிடைத்திருக்கின்ற நல்ல புகழெல்லாம், இருவருங் குறும்படுதலினுல் சமமாக விருத்தலின் புலிக்கொடியும் இவ்விருமரபினுள்ளார்க்கும்:கிடைத்ததாம் எ-ம்.

ஆல் - அசை.

'மரபிரண்டினுக்கும் புலிக்கொடி போந்தது' என்பது,

"சோழன் மரபினுக்குச் சொல்லத் தகுந்தகுமே
வாழும் புலிக்கொடியை வையகத்தில்—சூழுறவால்
குந்தன் மரபினுக்குங் கூறத் தகுந்தகுமே
அந்தக் கொடியினையே யாம்."

என்பதை யுணர்த்துகின்றது. சுo

செங்குந்தர் சோழனுக்குரிமையாம் சிறப்பு

தென்னனைச் சேரனைச் சிறுமை சொல்லவும்
மன்னனை வளவனை மகிழ்ந்து பாடவும்
பன்னருஞ் சாரதி படைத்த பான்மைபோல்
ஒன்னலர்க் குள்ளினத் துற்ற குந்தமே.

இ - ள். பாண்டியனையுஞ் சேரனையும் பழித்து அவர்களைச் சிறுமையாகச் சொல்லவும், இராசாதிராசன் என்னும் சோழனாகிய தன்னை மகிழ்ச்சியோடு புகழ்ந்து பாடவும், சொல்லுதற்கரிய சீர்த்தியினையுடைய ஒட்டக்கூத்தன் என்னும் புலவனாகிய என்னைத் தன்னினத்திற் படைத்த தன்மைபோல, பகைவர்களை செயம் பண்ணுதற்குத் தன்னினத்துள்ளே பொருந்திய செங்குந்தர்களைப் படைத்தான் எ - ம்.

ஒன்னலர்க்கு - பகைவரை வெல்லும்பொருட்டு. ஒன்னலர்க்கு என்புழி, நான்கனுருபு பொருட்டுப் பொருளது.

'பன்னரும் சாரதி' என்பது,

"ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெங்கும்
நீடுங் குடையைத் தரித்த பிரானிந்த நீணிலத்தில்
பாடும் புலவர் பணியொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெனைச் சொல்லுவரே."

என்பதையும்,

'உள் இனத்து உற்ற குந்தம்' என்பது,

"மனுகுலக் குந்தன் முன்னாள் மாப்பெருந் தவத்தைதள்ளித்
தனுவொடு வேலும் வைத்த தம்பிரா னருளா லொன்பான்
வனமுறு வீரற் பெற்று வண்டிரு வாரூர் வந்து
முனமவற் கிருக்கை தந்து முண்டகக் கோயில் புக்கான்."

ஆங்கவர் வழியில் வந்த வாயிரத் தொள்ளா யிரத்தரை
யோங்கிய கருவூ ராரூ ருறந்தைமா வடியின் காஞ்சி
யாங்கட லுலகில் வைத்தே யாட்சியுங் கொடுத்தான் சுற்றந்
தாங்கெனு முரிமை யாலே தண்ணருள் குந்தச் சோழன்."

என்பதையும் உணர்த்துகின்றது. ௬௧

## வேலும் குந்தமும் வேறின்மைச் சிறப்பு

*அறுசீர்விருத்தம்*

சேல்வேறு புலிவே ருகுஞ் சேதுவி னளவாய்ச் சென்னி
கோல்வே றில்லாம லோச்சிக் கன்னியே கோள்வ னென்றே
மால்வேறு சிவன்வே றென்ன வழுத்திடா வண்மை போல
வேல்வேறு குந்தம்வேறென் றிருபொருள் விளம்பார்மேலோர்.

இ-ள். மீனக்கொடியும் புலிக்கொடியுங் கொண்டு பாண்டியனுஞ் சோழனும் அரசாண்ட இமயமுதல் சேதுவினளவும் செங்கோல் வேறொன்றுண்டென்று சொல்லாமல் முசுகுந்தச்சக்கரவர்த்திதான் தனியே செலுத்திக் கன்னியாகுமரியளவுங் கைக்கொண்டான் என்று அறிந்த பெரியோர் திருமால் வேறு சிவன் வேறு என்று கருதிப் பிரித்துத் துதியாத தன்மை போல, முருகக்கடவுள் கையிற்றாங்கிய வேலாயுதம் வேறுஎன்றும் நவவீரர்கள் கையிற்றாங்கிய குந்தம் வேறுஎன்றும் இரண்டு பொருள்படச் சொல்ல மாட்டார் எ-ம்.

என்று என்னும் எச்சத்திற்கு அறிந்த என்னும் முடிபு வருவிக்கப்பட்டது.

'வெல்வேறு குந்தம் வேறு என்று இருபொருள் விளம் பார்' என்பது,

"கௌரி யம்மை கற்பித் தளித்த
ஞான சத்தியை நம்பெருந் தெய்வம்
கரத்திற் கொண்டு காட்சிபல தந்து
வரத்தைக் கொடுக்கும் வண்மை போலவே
குந்தர் கையிற் கொடுத்த குந்தமும்
சந்தத் தொழிலைத் தடையறச் செயலால்
அந்தப் படைக்கு மிந்தப் படைக்கும்
அறிவுளா ரன்னிய மறையா ரறையார்
புவியிடை யென்றும் புகழ்கொண் டோரே."

என்பதை யுணர்த்துகின்றது. சஉ

## குந்தப்பெருமைச் சிறப்பு

பூமாலை கடப்பந் தாமம் பூண்மணித் தெரியல் செய்ய
பாமாலை தன்னைக் கைக்கோள் முதலியர் பங்க தாக்கி
மாமாலை யோல்லார் காலில் வழிதுழிக் குடரின் மாலை
தேமாலை யாகச் சூடேஞ் செங்குந்தம் போலு முண்டோ.

இ-ள். வெற்றிமாலை கடப்பமாலை சந்திராரங்கள் இரத்தினாரங்கள் புலவராலியற்றிய குற்றம் நீங்கிச் செவ்விதாகிய பாமாலைகள் இவைகளை யெல்லாம் தன்னைக் கையிற்கொண்ட முதலியார்கள் பட்சமாக்கி மிகுந்த மயக்கத்தை யுடைய சத்துருக்களினது சந்ததியின் வழி வழி யாக வருபவரது குடர்மாலைகளை தேன் பொருந்திய மலர்மாலையாகத் தான் தரித்துக் கொள்ளாநின்ற செவ்விய குந்தம்போலும் உலகத்தில் உண்டோ எ-ம்.

'குடர்மாலை சூடும் குந்தம்' என்பது,
"சூர னவைக்குத் தூதாகச் சென்றகுந்தம்
பேரிற் பிரதாபம் பெற்றகுந்தம்—சீருடைய
சோணாட்டை யாண்ட சுரன்குடரை யீர்ந்தவனைக்
காணமற் கண்டகுந்தங் காண்"
என்பதை யுணர்த்துகின்றது. ௬௩

குந்தக் குதூகலச் சிறப்பு

பற்றினும் பற்றுஞ் சென்னி பறிக்கினும் பறிக்கும் பாசம்
எற்றினு மேற்றுங் கூற்றை யீரினு மீரும் வாரிச்
சுற்றினுஞ் சுற்று மண்டங் துகளெழச் செயினுஞ் செய்யும்
மற்றினுங் குந்தம் போற்று திருப்பவ ருளரோ மண்மேல்.

இ - ள் நவவீரர்கள் கையின்கணுள்ள குந்தமானது யமதருமனை அவன் வலியையொடுக்கிப் பிடிக்கவேண்டுமானா லும் பிடிக்கும்; அவன் தலையைப்பறிக்கவேண்டுமானாலும்பறிக் கும்; அவன் பாசத்தைப் பிடுங்கி யெறியவேண்டுமானாலு மெறியும்; அவனைப் பிளக்கவேண்டுமானாலும் பிளக்கும்; அவனை யெடுத்துக் கரகரவென்று சுழற்றவேண்டுமானாலும் சுழற்றும்; இதுவுமன்றி அண்டங்களைத் துகளெழச்செய்ய வேண்டுமானாலும் செய்யும். இக் குந்தம் இத்தன்மைய தென்றறிந்தும் இவ் வுலகத்தில் இதனைப் போற்றுதிருப் பவரும் உண்டாயிருப்பரோ எ - ம்.

சித்திரவல்லி அம்மையாரின் கிளிக்காக நவவீரர் 'கூற்றை' போரிற் புறங்கண்டார் என்பது,

"பன்னலமுஞ் சூழும் பதிசமனைப் போரில்வென்று
கின்னரத்தைப் பெற்றுவந்த கேழ்குந்தம்—ஒன்னலரை
வாட்டி வழிசெய்து வான்கதியி லேயென்றும்
காட்டுகுந்த மாமெனவே காண்."

என்பதை யுணர்த்துகின்றது. ௬௪

குந்தத்தின் வீரச் சிறப்பு

போற்றியோ போற்றி யென்று புதுமலர் தூவிச் சீற்ற
மாற்றியே வந்தி யாம லடையலர் வாழ்ந்தி ருந்தால்
காற்றென வூழித் தீயிற் கடலெனக் கொடிய கோபக்
கூற்றெனத் திரிந்து சோரிக் குளித்துடன் களிக்குங் குந்தம்.

இ - ள். சத்துருக்கள் தமது உக்கிரகோபங்களை மாற்றிப் புதிய மலர்களால் அருச்சித்துப் போற்றியோ போற்றி என்று வணங்காதவர்களாய் உயிரோடுவாழ்ந்து அரசாட்சி செலுத்துவாராயின், குந்தப்படையானது உகாந்தகாலமாருதத்தைப்போலவும், தீயைப்போலவும், கடலைப்போலவும், மிகுந்த கோபத்தையுடைய இயமனைப் போலவும் கோபங்கொண்டு எங்குளரென்று உலகமெங்கும் சக்கராகாரமாகத் திரிந்து, அச் சத்துருக்களைக் குத்தி அவருடலினின்றும் பெருகியோடாநின்ற இரத்தவெள்ளத்தில் மூழ்கிப் பின்பு சந்தோஷத்தை அடையும் எ - ம்.

புதுமலர் என்றது அன்றலர்ந்த புட்பத்தை. எனவே, வாரம், பட்சம், மாதம் என்னும் கணக்கில் வைத்து அழகு செய்யும் புட்பங்களை வேறு பிரித்துக்காட்டுதற்கு, 'புது மலர்' என்றார். போற்றி - இகரவீற்று வியங்கோள்.

போற்றுதல் செய்யாத 'அடையலர் சோரி குளித்து களிக்கும் குந்தம்' என்பது,

"தெவ்வர்களைப் பாசறையிற் சீறுஞ் சிவகுந்தம்
பவ்வஞ்சூழ் பூவரசர் பாடுகுந்தம்—திவ்வியமாம்
காட்சிக் கெளியகுந்தங் கச்சியிலே நின்றுவர
சாட்சிசெயுங் குந்தமது தான்."

என்பதை யுணர்த்துகின்றது. சரு

### பழுவூர் வீரன் சிறப்பு

சூட்டும் வீர வாகுவெனச் சொல்லும் பழுவூர் வீரனமர்
மூட்டுங் கால மூழி வெள்ள மூடுங் கால மாகாதோ
வேட்டங் காலில் வீழாதார் மேலு முளரோ வீதி யுலா
யீட்டுங் காலங் குந்தங்கண் டெழுமே கழுகு பருந்துகளும்.

இ - ள். முடி சூட்டப்படுகின்ற வீரவாகு தேவருக்கு ஒப்பானவனென்று சொல்லாநின்ற பழுவூரில்வாழும் வீரன் என்னும் செங்குந்தத் தலைவன் யுத்தமாகிய நெருப்பை மூளுவிக்குங் காலமானது, ஊழிக்காலத்து வெள்ளத்தினால் மூடப்படுகின்ற சர்வசம்மார காலமாகமாட்டாதோ. அன்றியும் அவனது அழகிய காலில் விரும்பிவந்து வணங்காதார் பின்னும் உயிரோடு வாழ்வரோ. வீதியிற் பவனிவருங் காலத்தும் அவன் கையிற்றாங்கிய குந்தத்தைக் கண்டு கழுகினங்களும் பருந்துக் கூட்டங்களும் ஆகாயத்தில் எழுந்து வட்டமிடும் எ - ம்.

பழுவூர் என்றது அட்டவீரட்டத் தலத்தில் ஒன்றாகிய திருப்பழுவூரை. அதனை,

"பூமன் சிரங்கண்டி யந்தகன் கோயிற் புரமதிகை
மாமன் பரியல் சலந்தரன் விற்குடி மாப்பழுவூர்
காமன் கொறுக்கை யமன்கடவூ ரிந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுங் திங்களுஞ் சூடிதன் சேவகமே."

எனவரும் கட்டளைக் கலித்துறையாற் காண்க. சசு

### பழுவை நாராயணன் சிறப்பு

காராமுருவ மொழிந்துபொன்னின் கவினார்பழுவை வளம்பதி
நாரா யணனே விக்கிரம நாரா யணனு மென்னுதார் [யில்
வாரா வழிவந் தோமென்றே வாயிற் புல்லைக் கவ்விவந்தச்
சேரார் சேரா நின்றுதொழச் செய்யு மன்னன் சேங்குந்தம்.

இ - ள். சூலேக்கொண்ட மேகம் போலும் உருவத்தை விட்டுப் பொன்போன்ற அழகிய உருவத்தைக் கொண்டு வளமை பொருந்திய பழுவை என்னும் நகரத்தில் வாழா நின்ற நாராயணன் என்னும் செங்குந்தத்தலைவனே திருவிக்கிரம அவதாரஞ்செய்த அந்த நாராயணனும் என்று கருதாதாராகிய அந்தச் சத்துருக்கள், போர்க்கு வரத் தகாத விடத்து வந்தோமென்று வாயிற் புல்லைக் கவ்விக்கொண்டு எதிராகவந்து தளர்ந்து தொழும்படி அவன் கையிற்றாங்கிய சிவந்த குந்தமானது செய்யும் எ - ம்.

பழுவூர் என்பதின் மரூஉ பழுவை.

'நாராயணனே விக்கிரம நாராயணன்' என்பது,

திருக்குறள் இறைமாட்சி என்னும் அதிகாரத்தொடக்கத்தில் பரிமேலழகர் "உலகபாலருருவாய் நின்று உலகங் காத்தலின் இறையென்றார்; 'திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்' என்று பெரியாரும் பணித்தார்." என்று கூறினார்.

என்பதை யுணர்த்துகின்றது.

## சூ ச னம்

முன் பாட்டிற் கூறிய வீரன் என்பவனும், இப்பாட்டிற் கூறிய நாராயணன் என்பவனும், சோழ நாட்டிலே திருப்பழுவூரில் அரசுசெய்துவந்த, சோமதி என்னும் மன்னவனுக்கு, ஒரே முகூர்த்தத்தில் இரட்டைப் பிள்ளைகளாக அவதாரஞ்செய்தவர். இவர்களை 'இராமலட்சுமணர்' 'சூரபன்மன்' 'சம்பாதி' என்பதைப்போல, 'வீரநாராயணர்' என்றுலகம் அழைப்பது வழக்கம். இவர்கள் காலத்திருந்த 'பராந்தகச்சோழன்' 'வல்லான்' என்னும் இரட்டனை, இவ் வீரநாராயணர் கூட்டத்தவரால் வென்று, தன்

அரசாட்சியை சோழ நாட்டில் நிலைபெறச் செய்தான் என்பது வல்லான்காவியம், வீரநாராயணச்சருக்கம். சஎ

கச்சித் தனியன் சிறப்பு

இனிமாநிலத்திற்கண்டதில்லைகேட்டேயிருத்தலன்றிப்பெரும்
பனிமால் வரையு மைநாக முன்பின் படைதா னெடுத்தாலு
முனிமாறுண்டோநடுநின்றுமுடிப்பான்கச்சித்தனியன்வட்டத்
தனிமா நிழற்கீழ்ச் செங்குந்தஞ் சரணு கதிக்கு வைகுந்தம்.

இ - ள். இயாதொரு நியாயங்களையும் நடுவுநிலைமை யாகநின்று முடிவுசெய்யும் பொருட்டுக் காஞ்சிபுரத்தில் ஒப்பற்ற மாமரத்தினது வட்டமான நீழலின்கண் இருந்து நடத்தாநின்ற தெய்வசிம்மாசன கர்த்தராகிய செங்குந்தத் தலைவர் ஆயிரத்துத் தொளாயிரவரில் ஒருவனுகிய கச்சித் தனியன் என்பவன் சத்துருக்களெல்லாங் கண்டவுடன் சரணுகதி யடையும்படி செய்வித்தற்குக் காரணமாகத் தன் கையில் கூரிய குந்தம் இருத்தலினுல் குளிர்ச்சியைத் தராநின்ற பெரிய பர்வதராசனும் மைநாகமும் முன்னும் பின்னுமாகப் படையெடுத்து வந்தாலுங் கோபிப்பது உண்டோ. ஆதலால் இச் செங்குந்தனது பெரும் புகழைக் கேட்டிருத்தலே அன்றி இப் பொழுது இவ் வுலகத்தில் வேறெருவரிடத்துங் கண்டதில்லை எ - ம்.

காஞ்சிபுரம் என்கிற ஒப்பற்ற மகாநாட்டில் இருந்தரசு செய்துவரும் 'கச்சித் தனியன்' என்பவன் செங்குந்தத் தலைவர் ஆயிரத்துத் தொளாயிரவரில் ஒருவன் என்பது,

"ஒரா யிரத்துத்தொள் ளாயிரரென் றூழிமுதற்
போராருங் குந்தப் பெருமையரென்—றோரார்
புலவ ருலாவிடையிற் போற்ற வருபவருள்
தலைவன் றனியனெனச் சாற்று."

என்பதை யுணர்த்துகின்றது.

## சூசனம்

இப் பாட்டிற் கண்ட கச்சித் தனியன் என்பவன், காஞ்சிபுரத்தை அரசாண்டுவந்த பதுமவண்ணன் என்னும் மன்னனுக்கு ஒரே புத்திரனாக வந்தவன். இவன் இளவரசா யிருக்கும்போதே பதுமவண்ணன் தேகவியோகமானன். அதுகண்ட மறுபுலத்தரசர், இவன்மேற் படைகொண்டுவர அவர்களையெல்லாம் போரிற் புறங்கண்டு வெற்றிமாலை சூடி, காஞ்சிமாவடியின்கீழ், தேவ சிங்காதனத்திருந்து, நீண்டநாள் அரசாண்டு வந்தான் என்பது வல்லான்காவி யம், தேவசாட்சிச்சருக்கம். சஅ

### ஒற்றியூரன் சிறப்பு

உடலமண்மேலுயிர்விண்மேலோல்லாரோடேங்கவுதிரமோடு
குடருங்கொழுவுங்கழுகோடேங்கொள்ளை கொள்ளப்பரிந்தூட்டு
மடல்வெண் டாழை முகமலர வாரிவாரித் திரைக்கரத்தால்
கடல்வெண் டரள மேயெறியு மொற்றி யூரன் கைக்குந்தம்.

இ - ள். மடலையுடைய தாழையினது வெண்மலரின் முகமானது மலரும்படி கடலானது அலைகளாகிய கைகளி னல் வெள்ளிய முத்தங்களையே வாரிவாரி வீசாநின்ற வளப் பம் பொருந்திய ஒற்றியூரனது கையின்கண் உள்ள குந்த மானது சத்துருக்கள் தங்கள் உடலத்தை மண்ணின்மீதும் உயிரை விண்ணின்மீதும் விட்டுத் தாமின்றாகிப்போக அவர் கள் உதிரத்தையும் குடரையும் கொழுப்பையும் கழுகும் பருந்தும் காக்கையும் கொள்ளையாகக் கொண்டுண்ண ஆசையோடும் உண்பிக்கும். எ - ம்.

இத் திருவொற்றியூரன், ஆதிபுரியில் எழுந்தருளிய விநாயகருக்கு ஆலயம் சமைப்பித்துத் தம் குலப்பெயரால் அம் மூர்த்தியை நாளும் வழிபட்டு வந்தவன் என்பது,

"கந்தப்பன் முன்வந்த காமர்கண நாதனுக்குச்
சந்தத் திருத்தளியைத் தான்கண்டு—குந்தத்
திருப்பெயரைச் சேர்த்தழைத்தான் தேர்ந்தவர்கள் போற்றத்
திருவொற்றி யூரவனுந் தேர்."

என்பதை யுணர்த்துகின்றது.

## சூசனம்

இப் பாட்டிற் கிடந்த ஒற்றியூரன் என்பவன், திருவொற்றியூரை அரசாண்டு வந்த சுதனகன் என்னும் வேந்தனுக்குப் புத்திரனுகப் பிறந்தவன். இவன் மாணிக்கத் தியாகருக்குத் தனியாக ஒரு நந்தவனம் வைத்து, அதில் உற்பத்தியாகும் புட்பங்களை ஆய்ந்தெடுத்து, காலை உச்சி மாலை வேளைகளில், அப்பெருமானை அருச்சித்து வந்தான். அந்நாளில், 'அனலன்' என்னும் ஓர் அசுரன், அந்த நந்தவனத்தில் வந்து சேர்ந்து, பல உயிருக்குத் துன்பத்தை விளைத்துகொண்டிருந்தான். அது கண்ட ஒற்றியூரன், அவ்வனலனை தன்கைக் குந்தத்தினுற் கொன்று, உலகத்திற்கு க்ஷேமத்தை உண்டாக்கினுன் என்பது வல்லான்காவியம், தேவசாட்சிச்சருக்கம். ௬௯

### களந்தை யரசன் சிறப்பு

தளர்ந்தவருக்குத் திருவுருவந் தன்னையடையார்க்கோருசிங்கம்
இளந்தையவர்க்குச்சிலைவேணல்லிசையாற்போற்பூதரமேயாம்
வளர்ந்தசாலிவரம்பினில்வால்வளைகண்முத்தந்தரும்வளங்கூர்
களந்தை யாதி நகரரசன் கைக்குந் தம்போற் காணுமே.

இ - ள். தளர்ந்துவந்து தன்னை யடைந்தவர்களுக்கு முகமலர்ச்சியை யுடைய அழகிய உருவத்தை யுடையவன்; தன்னைவந்து வணங்காத சத்துருக்களுக்கு ஒப்பற்ற சிங்கம் போன்றவன்; இளமைப் பருவத்தை யுடைய பெண்களுக்

குக் கருப்புவில்லை யுடைய மன்மதனை யொப்பான்; அழகிய நிறைந்த புகழ்க்குப் பொன்மலையை யொப்பானாகிய நெற் பயிர் வளர்ந்த வயலினது வரம்பில் வெள்ளிய சங்கினங்கள் முத்தத்தை யீனுநின்ற வளப்ப மிகுந்த களந்தை முதலிய நகரத்திற்கு அரசன்; அவனது கையின்கண் உள்ள குந்தத் தினதுபுகழைப்போல ஒருவரிடத்துங்கண்டோமில்லை எ-ம்.

களந்தை என்றது தொண்டை நாட்டிலுள்ள பொன் விளைந்தகளத்தூரை. இவ் வூருக்கிப்பெயர்வந்தகாரணத்தை,

"சான்றோருடைத்தென்றுசாற்றுதொண்டைமண்டலத்துள்
வான்றோயும் பொற்கதிர்கள் வாய்ந்தவயல்—தான்பார்த்து
பொற்களந்தை யென்றதனைப் போற்றிப் புகழ்ந்திட்டார்
நற்றவத்தில் மேற்போனார் நன்கு."

எனவரும் வெண்பாவினாற் காண்க.

## சூசனம்

இப் பாட்டிற் குறித்த களந்தை யரசன் என்பவன், பொன்விளைந்த களத்தூரை யாண்டுவந்த மதிமான் என் னும் மன்னனுக்குப் புத்திரனாக உதயஞ்செய்தவன். இவன், எக்காலத்தும் ஆபரணமாயுள்ளது உருத்திராக்கமணியே யென்று தெளிந்துள்ளவன்; நடராஜப் பெருமான் திருவடி களை முடியாகப் பெற்றவன். இவன் பிதா மதிமான், இவ னுக்கு மகுடாபிஷேகம் செய்விக்க நினைந்து, அங்கங்கே திருமுகம் அனுப்பினான். திருமுகம் பெற்ற மன்னருள், குறுநில வேந்தனாகிய 'காட்டூரான்' மட்டும் அத் திருமுகப் படி வாராமல் நின்று விட்டான். அது கண்ட மதிமான், அக் காட்டூரான் மேல் படைகொண்டு சென்று, போரில் அவனைப் புறங்கண்டு வெற்றிமாலை சூடினான். பிறகு களந் தையான் என்னும் தன் குமாரனுக்கு மதிமான் மகுடாபி

ஷேகம் செய்வித்து, செங்கோலைக் கையிற்கொடுத்தான் என்பது வல்லான்காவியம், தேவசாட்சிச்சருக்கம்.

இக் களத்தூர் அதிபர், திருத்தொண்டர் அறுபத்து மூவருள் ஒருவரான, கூற்றுவநாயனர் சந்ததியார் எனப் பெரியோர் கூறுப. இதனை,

" ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைகோ னடியேன்.''
என்னும் ஆளுடையநம்பிகள் அருட்பனுவலானும்,

" நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல் லாமொரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள ருகிய கூற்றுவனே.''

என்னும் நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்த திருவிருத்தத்தானும் தெளிக. ௫0

## புற்றிடங் கொண்டான் சிறப்பு

### கலிவிருத்தம்

கற்றிடங் கொண்டவர் கவின்சொற் கொள்ளுமே
யுற்றிடங் கொண்டபேர்க் குலகை நல்குமே
வெற்றிடங் கொண்டமே வலரை வீட்டுமே
புற்றிடங் கொண்டவன் பொலிகைக் குந்தமே.

இ - ள். புற்றிடங்கொண்டான் என்னும் செங்குந்தத் தலைவனது கையிற்றுங்கிய பொலிவு பெற்ற செங்குந்தமானது, பல நூல்களையுங் கற்று விசாலமான கல்வி யுணர்ச்சியையுடைய புலவர்களாற் சொல்லிய அழகுபெற்ற பிரபந்தங்களைச் சூட்டிக் கொள்ளும்; தாம் இருக்குமிடத்தில் வரப்பெற்றுத் தன்னைச் சரணுகதியாயடைந்த மித்துருக்களுக்கு இவ் வுலகத்தைத்தரும்; தன்னோடு மாறுபட்டுப்

போர்க்களத்து யுத்தசன்னுகமாய் வந்து நின்ற சத்துருக் களை வென்று நாசம் பண்ணும் எ - ம்.

இப் 'புற்றிடங்கொண்டான்' திருவாரூர்ப் பூங்கோயில் தியாகராஜப் பெருமான் வழிவழி அடிமை என்பது,

"நற்றவர்கள் போற்றுமொரு நல்லதிரு வாரூரில்
புற்றை யிடங்கொண்ட பூங்கோயில்—பற்றையே
பாடிப் படித்துப் பரனடிக்கே பன்மாலை
சூடித் திருத்தொண்டு தூய்மையுடன்—நீடியநாள்
செய்துபெற்ற பேற்ருல் திருவோடு மெய்ப்புகழும்
எய்தியர சேய்ந்திருந்தா னென்பர்காண்—உய்திசெயும்
பற்றற்ருன் பற்றைப் பற்றுகவென் ருன்குறள்கொள்
புற்றிடங்கொண் டானே புகல்."

என்பதை யுணர்த்துகின்றது.

## சூசனம்

இப் பாட்டிற் கண்ட புற்றிடங்கொண்டான் என்பவன், திருவாரூரில் அரச செல்வத்துடன் வாழ்ந்து வந்தவன். இவன் பிதாவின்பெயரும் புற்றிடங்கொண்டான் என்பதே. இம் மன்னன், தமிழ் மொழியிலே மிக்க விருப்பமுடைய வன்; பல புலவர்களால் பாடப்பெற்றவன்; வீதி விடங்கப் பெருமான் திருவடியில் மேம்பட்ட பத்தியுடையவன்; நீதி வழியில் செங்கோல் செலுத்துபவன்; இவன் புகழைக் கேட்டறிந்த அங்கதேசத் தரசன், திருவாரூர் வந்து சேர்ந்து, தான் கலிங்கதேசத் தரசனுல் படும் துன்பங்களை எடுத்து, அப் புற்றிடங்கொண்டானிடத்து விண்ணப்பித் துக் கொண்டான். அதுகேட்ட மன்னன் கலிங்கதேசத் தரசனை சமாதானமுறையில் வரும்படி கேட்டுவிட்டான். அவனதற் கிசையாமையால், பிறகு புற்றிடங்கொண்டான்

அவன்மேல் யுத்தப்படைகொண்டு, போரில் அக் கலிங்கனை வென்று, அவன் தேயம் முழுதையும், தன்னை யடைந்த அங்கதேசத் தரசனுக்கே கொடுத்துதவினன் என்பது வல்லான்காவியம், தேவசாட்சிச்சருக்கம். ௫க

## கோளாந்தகன் சிறப்பு

*அறுசீர்விருத்தம்*

மூளா வடவைச் சிகரகிரி முடிகம் பிக்கு மாறுதஞ்சேந்
தாளான்மடங்கவோருகூற்றந்தனிமும்மதில்காய்ச்சிறுமூரல் [ர்
வேளாருயிரைப்போக்கவனற் கண்ணும்விளங்குமுருத்திரனே
கோளாந்தகனேண்டோளான்கைக்குந்தம்வாகைக்குந்தமே.

இ - ள். சதாகாலமும் மூண்டுகொண்டிராநின்ற வடவாமுகாக்கினியும், அட்டகுலபர்வதங்களும் தலைகள் நடுங்கும்படி, ஒப்பற்ற யமன் மடங்க உதைத்த தனது சிவந்த பாதமும், ஒப்பில்லாத மூன்று மதில்களை யுடைய திரிபுரத்தை யெரித்த புன்முறுவலும், மன்மதனுயிரை நீக்கிய அக்கினிக் கண்ணும் விளங்கா நின்ற உருத்திரனுக் கொப்பாகிய வயிரம் போன்ற தோள்களையுடைய கோளாந்தகன் என்னும் செங்குந்தத் தலைவன் கையிலிராநின்ற குந்தமே வெற்றி பொருந்திய குந்தமாகும் எ - ம்.

வடவாமுகாக்கினி - பெண்குதிரை முகம் போலுள்ள அக்கினி. இது கடலின் நடுவிலுள்ளது.

இயமன் உதையுண்டது,

"மாற்கண்டர்க் காக மறலி தனையுதைத்த
வேற்கொண்ட தேவனையே வேண்டு."

என்பதையும், திரிபுரம் எரியுண்டது,

"புன்முறுவல் செய்து புரமூன்றை யட்டசிவன்
தன்னடியே தஞ்சமெனச் சார்."

என்பதையும், மாரன் உயிருண்டது,

"நாரந் தலைவைத்த நம்பரமன் தீக்கண்ணால்
மாரனுயி ருண்டான் மகிழ்ந்து."

என்பதையும் உணர்த்துகின்றது.

## ரூசனம்

இப்பாவிற் கூறிய கோளாந்தகன் என்னும் செங்குந்த மன்னவன், கொடுங்குன்றம் என்னும் க்ஷேத்திரத்தை யாண்டுவந்த மதிநாதன் என்பவனுக்குப் புத்திரன். வேத சிவாகமங்களைப் பல முறை நன்றாக வோதி அதனுள் கூறப் படும் சிவபெருமானே தெய்வமென்றுணர்ந்தவன். உலகத் தைக் காப்பாற்று நிமித்தம் தனுர் வேதத்தில் கூறப்படும் வில்வித்தையைச் செவ்வையாக ஆராய்ந்து கற்றுத் தேர்ந்த வன். இவனோடு மல்லுத்தம் செய்து வெற்றி யடையு மாறு வடநாட்டு 'உணங்கன்' என்பவன் படைகொண்டு வந் தான். அப்போது அவனைக் கோளாந்தகன் மல்லுத்தத்தில் புறங்கண்டு ஓட்டெடுக்கச் செய்து வெற்றி மாலையை மார்பிலேசூடி, பலநாள் வாழ்ந்திருந்தான் என்பது வல்லான் காவியம், தேவசாட்சிச்சருக்கம். ருஉ

## புலியூர்ப் பள்ளிகொண்டான் சிறப்பு

### கலிநிலைத்துறை

புண்ட ரீகமே குவளையே தளவமே பூமாவே
பிண்டி யேபெறும் சித்தசன் றன்குணம் பிழையாவேன்
கண்ட வீரகண் டன்புலி யூர்த்தனி காத்தேசீர்
கொண்டபள்ளிகொண்டான் கரதலத்திடைக்கொளுங்குந்தம்.

இ - ள். சத்துருக்களைப் புறங்கண்ட வீரகண்டா மணியை யுடையோனாகிய சிதம்பரம் என்னும் நகரத்தைத்

தான் தனியரசாட்சி செய்து காத்துப் பல சிறப்புகளையு மேற்கொண்ட பள்ளிகொண்டான் என்னுஞ் செங்குந்தத் தலைவன் கையிற் கொள்ளுங் குந்தமானது, மன்மதன் கையிற்கொள்ளாநின்ற தாமரையும் நீலோற்பலமும் முல்லையும் மாம்பூவும் அசோகும் ஆகிய ஐந்து பாணங்களும், பெற்றிருக்கின்ற, நினைப்பூட்டல் பசலைச்செய்தல் உணவை நீக்கல் கிடக்கச்செய்தல் கொல்லல் ஆகிய ஐந்து குணங்கள் போலவே, சத்துருக்களுக்குப் போர் நினைப்பூட்டல் தோள் தினவுறுத்தல் துன்புறுவித்தல் மூர்ச்சை யுறுவித்தல் கொல்லல் ஆகிய இவ் வைந்து குணங்களையுஞ் செய்வித் தலினின்றுந் தப்பிப்போதலில்லை எ - ம்.

மன்மதனுக்கு உரிய பாணமும் அதன் செயலும் இன்னதென்பது,

"நினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ
அனைத்துணவு நீக்கு மசோகு—வனத்திலுறு
முல்லைக் கிடைகாட்டு மாதே முழுநீலம்
கொல்லுமத னம்பின் குணம்."

என்பதையும்,

புலியூர்ப்பள்ளிகொண்டான் கையிற்கொண்ட செங்குந் தப்படை செய்யுஞ் செயல் இது என்பது,

"போரைநினைப் பூட்டுமாம் பூந்தோட் டினவுறுமாம்
சீரைவிழை யாதவரைச் சீறுமாம்—பார்தனிலே
மூர்ச்சையுறு விக்குமாம் மூள்கலியிற் கொல்லுமாம்
தேர்ச்சிகொண்ட செங்குந்தம் தேர்."

என்பதையும் உணர்த்துகின்றது.

## சூசனம்

இத் திருவிருத்தத்திற் கூறிய புலியூர்ப் பள்ளிகொண் டான் என்னும் செங்குந்த மன்னவன், சிதம்பரம்

என்னும் க்ஷேத்திரத்தை யாண்டுவந்த விடங்கன் என்பவனுக்கு ஏகபுத்திரன். சதா காலமும் வேலும் மயிலும் துணை என்று ஜபஞ் செய்துகொண்டிருக்கும் திவ்விய மங்கள நாவை யுடையவன். தில்லை நடராஜப் பெருமான் திருவனந்தல் காலைச்சந்தி முதலிய கட்டளைகளைச் செவ்வையாக நடைபெறச் செய்து வருபவன். இவன் நித்திரையில் நடராஜ மூர்த்தி, அவன் தரிசிக்கும்படி எழுந்தருளி "அன்பனே, நம் நகரத்தின் எல்லையிலே ஆந்திரதேயச் 'சிரத்தாமன்' பகைகொண்டு படையுடன் நகரத்தின் மதிலைச் சுற்றிக் கொண்டான், நீ விரைந்துபோய் அவனை வெல்லக் கடவாய்" என்று திருவாய் மலர்ந்து கரந்தருளினர். அப்போதே அவன் துயிலுணர்ந்தெழுந்து சிவபிரான் திருவருளைத் துதித்து வெட்சிமாலையைத் தாங்கினவனாய்த் தனது சைனியங்களுடன் யுத்த களத்திற்குப் போனான். அப்போது அங்கிருந்த பகைவனாகிய ஆந்திரன் யுத்த களத்தையும் பள்ளிகொண்டான் பராக்கிரமத்தையும் பார்த்து அச்சமுற்றுப் பதுங்கி ஓட்டெடுத்தான். அது கண்ட புலியூர் மன்னன் அவன் மார்பிலே பல அம்புகளைச் செலுத்தி அவனுயிரைச் சுவர்க்கலோகம் அடையச் செய்து தன்னரசாட்சியை வளம்பெற நடத்தி வந்தான் என்பது வல்லான் காவியம், தேவசாட்சிச்சருக்கம். ருரு

பிணவன் சிறப்பு

அறுசீர்விருத்தம்

குணமார் தருமத் தெவ்வேந்தர் குலக்கோளரியே குலத்தருவே
தணவாவண்மைச் சகம்பேசச் சகமே தாங்கும் பூதரமே
பிணவா வென்று பகரார்வாய் பிளந்து சோரிப் பெரும்பூதக்
கணம்வாய்நிரப்புங்குந்தன்போற் கர்னேங்கேளோங்கற்றேரே.

இ - ள். சக்கரவியூகம் முதலாகிய யூகங்களைச் சதுர்விதச்சேனைகளால் வகுத்துச்சாமர்த்தியரா யுத்தஞ்செய்யத்

தக்க குணங்கள் பொருந்திய சத்துருக்களாகிய இராச யானைகளுக்குச் சிங்கமே! கொடுத்தலில் அரிச்சந்தன முதலிய பஞ்சதாருவுக் கொப்பானவனே! எக்காலும் நீங்காத வளப்பத்தை யுலகத்திலுள்ளார் புகழ இவ் வுலகத்தைத் தாங்காநின்ற குணக்குன்றே! பிணவன் என்னுமரசனே! என்று சொல்லித் துதியாதவர் வாயைப்பிளந்து அவைகளினின்றும் பெருகி யோடாநின்ற இரத்தத்தைப் பெரிய பூதகணங்களின் வாயில் நிரப்பாநின்ற செங்குந்தத் தலைவனைப்போல இவ் வுலகத்தில் புலவர்களே நாங் கண்ணுற் கண்டோமில்லை; காதாற் கேட்டோமில்லை எ - ம்.

செங்குந்தன் என்பது இனமில் அடையாதலின் 'குந்தன்' என நின்றது. இதனை, "இனச்சுட் டில்லாப் பண்பு கொள் பெயர்க்கொடை—வழக்கா றல்ல செய்யு ளாறே." என்பதனானுணர்க.

## சூசனம்

இப் பாடலிற் சொல்லிய பிணவன் என்னும் செங்குந்த மன்னன், கடம்பூர் என்னும் நகரத்தை யாண்டுவந்த கதம்பன் என்பவனுடைய தவப்புத்திரன். எல்லாம் வல்ல இறைவன் சிவபெருமானே என்று படித்துணர்ந்தவன். தன்னுயிர்போல உலகத்திலுள்ள மன்னுயிர்களைப் பார்க்கும் சிந்தை யுடையவன். வேதாகமப்பொருளை ஓதியுணர்ந்த அறிவினால், ஐம்பெரு ஞானவேள்வியைச் செய்பவன். இவன் ஓர்நாள் பூஞ்சோலையின் வளப்பங்களைக் காணக் குதிரைமேற்கொண்டு நெடுந்தூரஞ்சென்று, பல விருட்சங்களடர்ந்த ஒரு சோலையை யடைந்திருந்தான். அப்போது, அச்சோலைக்குச் சமீபமாயுள்ள மலையில் வசித்துவந்த 'வேடராஜன்' வேட்டையில் ஓடிய ஒரு முயலைப் பிடிக்கும் நிமித்தமாக அச் சோலையை வந்து சேர்ந்தான். அது

கண்ட ஜீவகாருணிய மூர்த்தியாகிய பிணவன், அம்முயலை ஓட்டிப் பிடிக்காமல் விட்டுவிடும்படி வேடராஜனைக் கேட்டான். அவன் அதற்கிணங்காமையினால் மன்னவன் கோபங்கொண்டு, வேடராஜன்மேல் போர்செய்து வெற்றியடைந்திருப்பிற்போய் வாழ்ந்திருந்தான். என்பது வல்லான்காவியம், தேவசாட்சிச்சருக்கம். ருச

## கண்டியூரன் சிறப்பு

### சந்தக்கலிவிருத்தம்

மிண்டிடாமன் மேவலீர் விளம்பிடாம லோருமின்
றேண்டிடாமல் வாழ்வதெங்ஙன் சூரபன்மன் பட்டிடக்
கண்டவீர வாகுதேவர் கால்வருங் குலத்துமன்
வண்டுலாவு கண்டியூரன் வயிரவாகு குந்தமே.

இ - ள். சத்துருக்களே! சூரபதுமன் முதலிய அவுணர்களெல்லாம் நாசமடைய யுத்தஞ்செய்த வீரவாகு தேவரது சந்ததியின் வழியாகவந்த குலத்திற் சிறந்த அரசனாகிய வண்டுகளுலாவிக் கீதங்களைப் பாடாநின்ற கடப்பமாலையையுடைய கண்டியூரன் என்னும் செங்குந்தத்தலைவன் கையின்கணுள்ள வச்சிராயுதத்தை யொத்த அழகிய குந்தத்தோடு எதிர்க்காமலும் வீணான வம்பு வார்த்தைகள் பேசாமலும் ஆராய்ந்தறியுங்கோள். அச் செங்குந்தத்தலைவனுக்கு நீவீர் அடிமைத்தொழில் செய்யாமல் வாழ்ந்திருப்பதெங்ஙனம் ஆகையால் வணங்கிப் பிழையுங்கோள் எ - ம்.

'வீரவாகுதேவர் கால்வருங் குலத்து மன்' எனவே, வீரவாகுதேவருக்குச் சித்திரவல்லி என்னும் ஒரு குமாரியும், அனகன் சனகன் என்னும் இரண்டு குமாரரும் உண்டென்றும், அம் மூவரில் பிள்ளைகளின் வழியாக வந்தவர் இச் செங்குந்தத் தலைவர் என்றுங் கூறியவாறாயிற்று.

*சரித்திரவரலாறு - கந்தபுராணம் - கந்தவிரதப்படலம்*

ஒரு நாள் பூமண்டலத்தை யாண்டுவந்த முசுகுந்தச் சக்கரவர்த்தியை வீரவாகுதேவர் பார்த்து, "நாமிந்தச் சூரிய குலத்தில் வந்து பல வருடங்களாக இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தோம்; இப்போது நமக்கு விதித்த காலம் முடிபெய்தியது; இனி நாம் சண்முகப் பெருமாள் திருவடித்துணையை யடைய வேண்டும்" என்று கூறினர். அது கேட்ட மன்னர் மன்னன் சற்றுலோசித்து, "வீரவாகு தெவே, நீர் கூறியது சரதமே. இம் மண்ணுலகத்தில் நாம் எத்தனைநாள் ஏகசக்ராதிபத்தியம் கொண்டிருந்தாலும் சிவபெருமானது சங்கார கிருத்தியத்துக்கு நாம் இலக்காகவே இருக்கின்றோம்; அது வந்துவிடுமுன் நமது கந்த வேளுடைய திருவடிகளை யடைவதற்கான வழிகளில் இனி முயறல் வேண்டும்; இதன் நடுவில் நமக்குப்பின் இவ்வரசாட்சியைக் கைக்கொள்பவரான நங் குமாரர்களுக்கு இராஜ நீதியை யுபதேசித்து மகுடாபிஷேகஞ் செய்து முடிக்க வேண்டி யிருப்பதால், அவர்களை இங்கே அழைப்பிக்கக் கடவீர்" என்று கேட்டுக் கொண்டனன். உடனே வீரவாகுதேவர் மகிழ்ந்து, தமது சகோதரர்களால் சக்கரவர்த்திக்குப் புத்திரனும் தமக்குப் பௌத்திரனுமாகிய அங்கிவன்மனையும், அதுகாறுந் தமக்குந் தமது தம்பியர்க்கும் உற்பவித்து ஆயிரத்துத் தொளாயிரவரா யுள்ள அனகனாதிய புத்திரர்களையும் இளவரசுக்குரிய அலங்காரத்துடன் சபாமண்டபத்துள் வருவித்தனர்.

இப்பால், முசுகுந்தச் சக்கரவர்த்தியார் சோதிஷ சாஸ்திரிகளைக் கூவி, "எனது குமாரனாகிய அங்கிவன்மனை இக் கருவூரின்கண்ணும், வீரவாகுதேவர் குமாரனாகிய அனகனைக் காஞ்சிநகரின் கண்ணும் இருத்தி அரசாளச் செய்விக்கவேண்டும் ஆதலால், இவர்களுக்கு மகுடாபிஷே

கம் செய்யத்தக்க நாட்களை ஆராய்ந்துரைப்பீர்கள்'' என்று கட்டளை யிட்டனர். அவர்கள் அப்பொழுதே அவ்விராச குமாரர்களுக்கேற்ற, திதி வார நக்ஷத்திர யோக கரண கிரகயோரை முதலான நிலைகளை நன்ருகச் சோதித் துணர்ந்து இரண்டு சுபதினங்களை நியமித்து, ''இவையே நன் முகூர்த்தங்கள்' என்று சக்கரவர்த்திக் கறிக்கையிட்டு விடைபெற்றுச் சென்ருர்கள்.

அது கேட்ட சக்கரவர்த்தியார், தமக்குள்ளே 'நமக் குக் கந்தவேளுடைய அனுக்கிரகத்தினுல், துணைவராகவும், மந்திரத் தலைவராகவும் வந்து, இந்த ஏகச்சக்கராதிபத்தி யத்தைக் கொடுத்து நம் மனுகுலந் தழைக்கச்செய்த, நவ வீரர்களது வழித்தோன்றலாகிய அனகன் ஆதிய இராஜ குமாரர்களுக்கு முன்னதாக மகுடாபிஷேகம் செய்துமுடித் துப் பின்னர் நமது குமாரனுக்கு மகுடாபிஷேகம்செய்வது மரபு' என்று தீர்மானித்தவராய், உடனே தமது குலகுரு வாகிய வசிட்ட முனிவரோடும், வீரவாகுதேவர் முதலிய சுற்றத்தினரோடும், அந் நகரவாசிகளும், நால்வகைச் சேனை களும் புடைசூழ வெளிக்கொண்டு காஞ்சி நகரையடைந்து, அந் நகரத்தின் உள்ளெல்லையிலுள்ள தொண்டைமான் நத்தத்தை இடமாகக்கொண்டிருந்தனர்.

அப்பால், முசுகுந்தச் சக்கரவர்த்தியார் அக் காஞ்சித் தொண்டைமான் நத்தத்தை அங்கமாகவுடைய திருவேகம் பக் கோயிலினுள் சிறந்த சிற்பிகளால் சாத்திர விதிப் படி மகுடாபிஷேக மண்டபம் சமைப்பித்து, முன்னர்க் கணித சாஸ்திரிகள் நியமித்துக்கூறிய நாளில், வசிட்டமுனி வரால் ஓமமாதிய சடங்குகளையும், கும்பபூஜா விதிகளையும் விதிப்படி நிறைவேற்றுவித்து, பலவகையான வாத்தியங் கள் முழங்கவும், பாவையர் மங்கலவாழ்த்துக்கூறவும், முனி

## ங. மேற்கே விரிஞ்சிபுரம் நாடு

### இதன் கிளைநாடு - கஎ

1. ஆமூர், குடியேற்றம்
2. வாணியம்பாடி
3. கொறட்டை
4. தருமபுரி
5. பவானி
6. தாரமங்கலம்
7. எழுகரைநாடு
8. புகழாறை
9. பூரத்திரை
10. திருச்செங்கோடு
11. வையாபுரி, பழனி
12. அவிநாசி
13. நஞ்சுண்டகுடி
14. காவல்பாளையம்
15. கருவூர், நத்தம்
16. கருகூர், காங்கேயம்,சிவன் மலை, சென்னிமலை
17. நாமக்கல்

## ச. வடக்கே சோழசிங்கபுரம் நாடு

### இதன் கிளைநாடு - கஎ

1. திருத்தணிகை
2. தெளிநாடு
3. நெறிநாடு
4. திருவடிநாடு
5. திருமேழிசை
6. கொந்தம்பாக்கம்
7. திருக்காளத்தி
8. தொண்டைமாஞடு
9. வரைநாடு
10. வேங்கடகிரி
11. திருப்பதி
12. ஜெகநாதம்
13. சீட்டம்பள்ளி
14. செம்புரம்
15. வரதபுரி
16. சந்திரகிரி
17. காசி, கயா, அயோத்தி, இமயநாடு

ஆக நாடு எஉ. இந் நாட்டில், இரண்டொன்றை, காலபேதத்தினுலும், ஆராய்ச்சிக் குறைவினுலும், கட்சி யாவேசத்தினுலும் மாறுபடக் கூறித் திரிவாரும் உண்டு.

(முன் சரித்திரத் தொடர்ச்சி)

அதன் பின்பு, முசுகுந்தச்சக்கரவர்த்தியார், வீரவாகுதேவரோடு தமது நால்வகைப் படைகள் சூழக் காஞ்சியினின்றும் பிரயாணமாய்க் கருவூரை யடைந்து, முன்னர்

கணிதசாஸ்திரிகளால் குறிப்பிட்டுள்ள மற்றொரு சுபதினத்தில் வசிட்டமுனிவரைக் கொண்டு, அங்கிவன்மனுக்குச் சகலாடம்பரங்களுடனேயும் மகுடாபிஷேகம் செய்வித்து முகூர்த்தப்படியே திருமுடிதரித்து, செங்குந்த வீரர் ஆயிரத்துத் தொளாயிரவரில், ஆங்காங்கு அரசராகவும், குறுநில மன்னராகவும், அமைச்சராகவும், சேனாதிபதியராகவும், படைவீரராகவும் நியமிக்கப்பட்டவர்கள் போக, மற்றையவர்களுட் சிலரை அங்கிவன்மனுக்கு அமைச்சர் முதலிய பரிசனங்களாக்கி வைத்தனர்.

இப்படி யாவும் முடிந்தபின்பு, முசுகுந்தச்சக்கரவர்த்தியார், தனது மனைவி மக்கள் சுற்றத்தினராகிய சகலரிடத்தினும் செலவு பெற்றுக்கொண்டு, இல்லறத்தைத் துறந்து தவவேடம் பூண்டு கானகத்திற்போய், அரிய தவங்களைச் செய்து பெறுதற்கரிய சிவபதவியைச்சேர்ந்து, யதாப்பிரகாரம் ஞானநாயகனாகிய சிவபெருமானை எத்தேசகாலமும் தரிசித்து வணங்கிப் போற்றிச் சுகாதீதசெல்வத்தை யனுபவித்து வாழ்ந்திருந்தான்.

இப்பால் வீரவாகுதேவர், அனகன் ஆதிய ஆயிரத்துத் தொளாயிரவரையும், தாம் வசிக்கும் கருவூரின்கண் வரவழைத்து அவர்களைப் பார்த்து,

1. "நம் மனுகுல வேந்தனாகிய முசுகுந்தச் சக்கரவர்த்தி செய்த தவப்பேற்றினால், நம்முடைய சேஷ்ட பிராதிருவும் இஷ்டதெய்வமும் ஆகிய கந்தவேள் கொடுத்த உத்திரவைக்கொண்டு நாம் அச் சக்கரவர்த்திக்குப் படைத்துணைவராய், கொள்ளல் கொடுத்தலாதிய சம்பந்தங்களைப் பெற்று வாழ்ந்திருந்ததுபோல, நீங்களும் இனி அங்கிவன்மச் சக்கரவர்த்திக்கு அருந்துணைவராயிருந்து அரசாட்சியைச் செலுத்துவதல்லாமல், இனிவரும் அச் சூரியகுல

வம்ஸ அரசர்களுக்கு, நீங்கள் புத்திரபௌத்திர பாரம் பரியமாய்ச் சுற்றத்தினராயிருந்து, யாதொரு குறைவும் வாராதபடி காத்து வாழக்கடவீர்கள்.''

2. ''நீங்கள் சிவாலய குகாலயங்கட்குத் தரும கர்த் தர்களாகிப் பூர்வம் நாம் சண்முகக் கடவுளுடனிருந்து சூரசம்மாரம் செய்ததுபோல ஒவ்வொரு வருடமும் ஒரு மகோத்ஸவம் நடாத்தி, இவ்வுலகத்தினர் 'கைலாய பரம்பரையார்' என்றும், 'கைக்கோளர்' என்றும், 'செங் குந்தர்' என்றும், 'வேளாளர்' என்றும், 'சேனைத் தலைவர்' என்றும், 'சோழமண்டல முதலியார்' என்றும், 'சோழகுல சம்பந்தியர்' என்றும், 'உபசுப்பிரமணிய மரபினர்' என் றும் துதித்துக் கொண்டாடும்படியாகப் பல திசையிலும் உங்கள் கீர்த்தியை நாட்டி யிருக்கக்கடவீர்கள்.''

3. ''நாம் சூரபன்மனிடத்தில் தூதுசென்றபோது, அவன் குமாரனாகிய வச்சிரவாகுவைக் கொன்று அவன் முதுகெலும்பை மகேந்திரபுரியின் கோபுரத்தின்மேல் நாட்டி, வீராவேசத்தோடு விளையாடினோம்; ஆதலால் அவ்வண்ணமே நீங்களும், காஞ்சி முதலிய தலங்களிலுள்ள கோபுரத்தின்மேல் ஒரு தம்பம் வேணுவினாற் கொண்டு நாட்டி, அதன்மேல் விளையாடி நம் குலத்து வீரபராக்கிர மத்தை விளக்கிவரக் கடவீர்கள்.''

4. ''நீங்கள் உலகில் வழங்கிவரும் நான்கு வருணமும் தழுவி, அபிஷேகத்தராய் வேதாகமங்களை ஓதியும், செங் குந்தப் படையினால் அரசாட்சி செய்தும், யாதொரு பாவ மற்ற தொழிலால் வைசியச் செயலேற்றும், தேவாலயத் திருப்பணி செய்வோரைக்கொண்டு செய்வித்தும் உஜ்ஜீவிக் கக்கடவீர்கள்.''

என்றிவ்விதமான புத்திமதிகளைக் கூறி' அவ்வவர்கட்குத் தக்க சிறப்புகளைச் செய்து வாழ்த்தி மங்கல விடை கொடுத்தனுப்பினர்.

பின்னர், வீரவாகு தேவரோடு மற்ற எண்மர்களும் இலக்கர்களும் சென்று, அருமையாகிய பல தவங்களைச் செய்து, மானுட வடிவத்தினின்று நீங்கிப் பழைய தங்கள் வலிமையைப் பெற்றவர்களாய், கந்தவெற்பினை யடைந்து சண்முகதேவனுடைய திருவடிகளைத் தொழுதேத்தி யதாப் பிரகாரம் தொண்டுசெய்திருந்தார்கள்.

இப்படித் தங்கள் தந்தையார், அவர்கள் ஜேஷ்ட பிரா திருவின் இருக்கையாகிய கந்தவெற்பினை அடைந்த பின்னர், அனகன் முதலிய ஆயிரத்துத் தொளாயிரவரும் தத்தமக்குரிய இடங்களிற்சென்று, ஆங்காங்குத் தங்கள் அரசாட்சியைக் குறைவற நடாத்தியும், சிதம்பரம் முதலிய சிவத்தலங்களிலும், திருப்பரங்குன்றம் முதலிய குகாலயங்களிலும் நித்திய நைமித்திய பூஜைகள் செய்வித்துச் சூர சம்மாராதி மகோத்ஸவங்கள் நடப்பித்தும், வேதாகமங்களை யோதி பவமற்ற தொழில்களிற் பயின்று பரவச்செய்வித்தும் உலகமெங்கும் தங்கள்புகழ் பரவ மேன்மையோடு வாழ்ந்து வந்தார்கள்.

## சூசனம்

இப் பாட்டில் கூறும் கண்டியூரன் என்பவன், அட்ட வீரத் தலத்திலொன்றாகிய திருக்கண்டியூரை அரசாண்டு வந்த விபுலன் என்னும் வேந்தனுக்குப் புத்திரனாகப் பிறந்தவன். இவனை 'மதுகையான்' என்றும் அழைப்பதுண்டு. இம் மதுகையான் காலத்தில், தனது கண்டியூருக்கு வடக்கிலிருந்த ஒரு காட்டில், 'பிரமராக்கதன்' என்னும் ஒரு கொடியவன் இருந்தான். அவன், சதாகாலமும் பல உயிர்களுக்கும் துன்பமே செய்துவந்தான். இதைக் குடி

களாற் கேட்டுணர்ந்த கண்டியூரன், உடனே அப் பிரமராக்கதன் மேல் குந்தப்படை யெடுத்துச் சென்று, அவனோடு பற்பல விதமாகப் போர்செய்து, கடைசியாக அவனைச் செங்குந்தப் படையால் இயமலோகம்போய்ச் சேரும்படி செய்தான். அது கண்ட அவன் குடிகளும் மற்றைய வரும் அவனை வாழ்த்தித் துதிப்ப, மதுகையான் கண்டியூர் சென்று செவ்வையாகத் தனதரசாட்சியை நடாத்திக் கொண்டு வாழ்ந்திருந்தான் என்பது வல்லான்காவியம், தேவசாட்சிச்சருக்கம். ௫௫

## முதுகுன்ற மணியன் சிறப்பு

### அறுசீர்விருத்தம்

மூத்த முதுகுன்றக் குரிசின் முதிரு மணவைப் பாராளன்
பாத்த னேன்னு மணியன் கைக்குந்தங் கொடுத்துப் பகரவே
பூத்த மார்பத் தார்பறித்துப் பூழி படவே வீழ்ந்திறைஞ்சிக்
கோத்துச்செங்கைமலர்கூப்பிக்குறுகார்சிறுகிவரக்கண்டான்.

இ-ள். முதுகுன்றத்தில் வாழ்ந்து அரசாட்சி செய்து கொண்டிருந்த பெரிய அரசனும்,மணவை என்னும் நகரத்தி லிருந்து அரசாண்டுகொண்டிருந்த பெரிய அரசனுமாகிய இவ்விருவரும், சத்துருக்களால் மிகுந்த துன்பமடைந்து முதுமையினுல் வலியில்லாதவர்களாய் அருச்சுனனுக்குச் சமானமான வலியை யுடையவன் என்று சொல்லாநின்ற மணியன் என்னும் பிள்ளைகையில் தங்கள் கைக்குந்தத்தைக் கொடுத்துப் பட்டங்கட்டிச் சத்துருக்களைச் செயம்பண் ணென்று சொன்னமாத்திரத்தில், முன்னெதிர்த்து யுத்தஞ் செய்த சத்துருக்களெல்லாம் தங்கள் பரந்தமார்பிற் றரித் திருந்த வெற்றிமாலைகளைக் கழற்றியெறிந்து புழுதி யுடலிற் படும்படியாக மண்ணில்வீழ்ந்து வணங்கித் தாமரைமலர் போன்ற தமது இரண்டு கைகளையுங் கோத்துக் குவித்து அடங்கிவரத் தனது வீரத்தைச் செலுத்தினுன் எ-ம்.

## சூசனம்

இப் பாட்டிற் கூறிய முதுகுன்ற மணியன் என்பவன், பழமலை என்னும் விருத்தாசலத்தை யாண்டுவந்த பாராயணன் என்பவனுடைய தபோவலிமையினால் அவனுக்குப் புத்திரனாக அவதரித்தவன். பழமலைநாதன் திருப்பணிகள் பதிந்துள்ள மனமுடையவன். வரலாற்று முறையில் பல நூல்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்தவன். யானையேற்றம், குதிரையேற்றம், வில்வித்தை முதலியவைகளில் மிகத் தேர்ந்தவன். பருவகாலத்தில் பாராயணன் என்னும் தன் பிதாவினால் முடி சூட்டப்பெற்றவன். மணவூர் என்னும் நகரத்திற் கதிபதியாகிய மந்தகாசன் வேண்டுகோட்படி, 'மாளவதேயத்தரசன்' மேற் படை கொண்டு சென்றவன். யுத்தகாலத்தில் அம் மாளவதேயத்தரசனை புறங்கண்டோடச் செய்தவன். பின்பு அம் மன்னவன் சரணாகதியடைய, அவனுக்கே அம் மாளவதேசத்தைத் தானமாக வழங்கினவன். அதன்பின்பு தன் பதியாகிய பழமலை அடைந்து, நீதி வழியில் செவ்வையாகச் செங்கோல் பிடித்துக் குடிகளையோம்பி, அரசாட்சி செய்துவந்தவன் என்பது வல்லான் காவியம், தேவசாட்சிச்சருக்கம். ருகூ

### தஞ்சை வேம்பன் சிறப்பு

பஞ்சம் வெம்பத் தரும்பனையே நாவான் மிகவே பாடாது
தஞ்சை வேம்பனைப் புகழ்ந்தே மதுமுன் செய்த தவமேயாம்
எஞ்சவெளிதோவூழியுருத்திரன்கைக்கோளுமூவிலைவேலே
வஞ்ச மாயை யவதரித்த திவன்கைக் குந்த வரவாமால்.

இ - ள். ஏழைகளது வறுமை வெம்பிநீங்கக் கொடுக்கின்ற பனைமாலையையுடைய சேரநாடனையே எமது நாவால் அதிகமாகப்பாடாது, தஞ்சைமாநகரில் வாழ்ந்திருக்கின்ற

வேம்பன் என்னும் செங்குந்தத் தலைவனைப் புகழ்ந்தோம்; அது யாம் முன்செய்த தவத்தன்மையேயாம். அத் தவத்தைக் குறைவுபடச் சொல்ல வெளிதோ? இவன் கையிலிருக்கின்ற வஞ்சமே யுருவமாகிய மாயையே அவதாரஞ் செய்துவந்த குந்தத்தினது வரவானது, உகாந்த காலத்து விளங்காநின்ற உருத்திர மூர்த்திகையிற் கொள்ளாநின்ற மூன்றிலையைப்போலும் வடிவினையுடைய முத்தலைச் சூலாயுதமேயாம் எ - ம்.

ஊழிகால வுருத்திரன் இலக்கணம் இது என்பது,

மாலெங்கே வேதனெங்கே மற்றையவா னேருமெங்கே
ஆலமுண்ட கண்ட னவனூழிக்—காலமதில்
என்றுமறை யாகமங்கள் யேத்தித் தொழுதிடுமே
வென்றபொறி யைந்தையுடை யீர்.

என்பதை யுணர்த்துகின்றது.

## சூசனம்

இத் திருவிருத்தத்திற் சொல்லிய தஞ்சை வேம்பன் என்பவன், தஞ்சாவூர் தலைமையாகக் கொண்டு பஞ்சநதம் என்னும் திருவையாற்றில் பெரும்பாலும் வசித்துவந்த குமரன் என்பவனுடைய பெருந்தவத்திற் றோன்றியவன். ஐயாற்றப்பரின் தரும பரிபாலன கூட்டத்திற் றலைமை வகித்தவன். வேதாகமங்களை நன்றாக ஓதியுணர்ந்தவன். கொடுத்தலில் முதல் வள்ளலையே ஒப்பானவன். இராஜ்ய பரிபாலனம் செய்யும் துறையில் தேர்ந்த ஆராய்ச்சியுடையவன். பாராந்தகச்சோழன் நீதிமன்றத்தில் முதல் மந்திரியானவன். சோழ மன்னருக்கு இராஜதானியாய கருவூரில் பலபகல் வீற்றிருந்தவன். வல்லான் என்னும் இரட்டனை வென்று வாகை சூடிய பன்னிருவருள் ஒருவன் என்பது வல்லான்காவியம், வீரநாராயணச்சருக்கம். ௫ள

### மங்கலியப் பிட்சையிட்ட சிறப்பு

வல்லான்றன் றிருத்தேவி மங்கலியம்
பிழையாமன் மடிதா னேற்றிங்
கெல்லோரு மங்கலியப் பிட்சையிடு
மெனத்தாள்வீழ்ந் திரப்ப வேண்டிக்
கொல்லாமல் விடுதல்புக ழெனக்கருதி
யோகற்பின் கொண்ட வாய்மை
நல்லார்க ளிருந்தவையின் புகழ்கைக்கோ
காத்ததுகோ னஞ்செங் குந்தம்.

இ - ள். சோழராசனோடு மாறுபட்டு வீரன் நாராயணன் முதலிய செங்குந்தத்தலைவர்கள் பன்னிருவரால் தோல்வியடைந்து, அவர்கள் கையிலகப்பட்டுத் தன் பிராணனைக் கொடுக்கவிருந்த வல்லான் என்னும் அரசனது அழகிய மனைவியாகிய அனங்கவல்லி என்பவள் அச் சமயத்தில் முந்தானையேற்று 'நான் அமங்கலியாகாமல் நீவீரெல்லோரும் மங்கலியப்பிட்சை கொடுக்கவேண்டும்' என்று அவர்கள் பாதத்தில் வீழ்ந்து தோத்திரஞ்செய்து யாசிக்க, நமது செங்குந்தத் தலைவர்கள் அவ் வல்லானுக் குயிர்கொடுத்து இரட்சித்தது அவனைக் கொல்லாமல் விடுதல் புகழெனக்கருதியோ அல்லது கற்பினது உண்மையையே மேற்கொண்டொழுகிய மாதர்களிருந்த சபையின்கண் தம்மைத் துதிப்பதற்கோ அறியேன் எ - ம்.

வல்லான் மனைவி மாங்கலியப் பிட்சை ஏற்றாள் என்பது,

"கண்ணகன் ஞால மேத்துங் கந்தவே ளென்ன வந்த
அண்ணான்மீ ரபய மென்ற னன்பனைக் கொலற்க யானோர்
பெண்ணென வளியா ளீக மங்கலப் பிச்சை யென்றாள்
பண்ணமர் மொழியாள் சாலப் பங்கய விழிநீர் சோர.

என்னுடன் பிறந்தார் நீரே யானும திளைய ளென்றாள்
மன்னுமங் கலநா ணற்றால் வசையுறு மதுவெற் கீயப்
பின்னுமுங் கடனு மென்றே பேதையா ளிரக்கக் கண்டான்
தன்னைவந் தடைந்தோர் தம்மைக் காத்திடுஞ் சமர வீரன்.

பத்தியாற் கணவற் காக்கப் பணிந்தன ளெனவி ரங்கி
யுத்தமோத் தமனும் வீர னோங்கிய கரமே நிற்க
மற்றொரத் தந்தா னீட்டி மங்கலப் பிச்சை தந்தோஞ்
சொற்றபன் மொழியா னெஞ்சந் துயரலை யேழையென்றான்."

என்பதை யுணர்த்துகின்றது. ருஎ

இரட்டன் மரபார் இன்றைக்கும் தங்கள் கலியாண காலத்தில் இச்சரித்திரம் விளங்கப் பன்னிரு குடுவைப் பொங்கல் வைத்து வழிபடுதலை,

"இன்னணம் வீர ரிரட் டர்கோக் காவி
யீந்தவன் மனைக்குமாங் கலிய
மன்னுறச் செய்த மாண்பையம் மரபோர்
மணவினைப் பந்தரு ளின்று
முன்னியீ ராறு கலயத்துட் பொங்கன்
முறையினுற் பூசித்துத் தாலி
மின்னுறு கூறை வைத்தெடுத் தணியும்
விதிவழா தியற்றன்மே வுவரால்."

என வரும் செய்யுளாற் காண்க. ருஅ

## உயிர்க் கொடைச் சிறப்பு

### கொச்சகக்கலிப்பா

எல்லாக்கா லத்தினுமோன் றேற்பவருக் கில்லையெனுஞ்
சொல்லான துகற்றுஞ் சொல்லறியா ரேந்துகுந்தம்
வல்லானைக் கொல்லாமன் மனைவிக்கு மங்கலியம்
உல்லாசத் துடனளிக்கு முதவியதோன் றறிந்தேமால்.

இ - ள். செங்குந்தத்தலைவர் கொடை கொடுக்கத்தக்க காலத்தும் தகாத காலத்தும் தம்மிடத்து ஓர் பொருளை யாசிப்பவருக்கு மகிழ்ந்து கொடுத்தலேயன்றி இல்லையென்னும் சொல்லைக்கற்றுஞ் சொல்லவறியாத நாவினையுடையார் என்பது எதனாலறிந்தோமெனில், அவர் கையின்கண் தாங்கிய குந்தமானது வல்லான் என்னுங் கொடியதுட்டன் பிடிபட்டபோது அவன் மனைவியாகிய அனங்கவல்லி என்பவள் இரந்து மாங்கலியப்பிட்சை கேட்க இரக்கமுற்று அவனைக் கொல்லாமல் மகிழ்ச்சியோடும் உயிர்ப்பிட்சை கொடுத்ததோருதவியினாலே தெரிந்துகொண்டோம் எ - ம்.

'எல்லாக் காலத்திலும் ஏற்பவருக்கு இல்லையெனுஞ் சொல் சொல அறியார்' என்பது,

"அந்தநாள் வந்திலை யருங்கவிப் புலவோய்
இந்தநாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய்
தலைதனைக் கொடுபோய் தம்பிகைக் கொடுத்து
விலைதனை மீட்டுன் வெறுமைநோய் களையே."

என்னும் குமணராஜன் சரிதையாலும் உணர்க. ருங

## மெய்த்தலை கொடுத்தச் சிறப்பு

### கலிவிருத்தம்

முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே
சுத்தவீ ரத்திறந் துலங்கு தற்கொரு
பொய்த்தலை கொடுத்தலிற் புகழ்பெ றுதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே.

இ - ள். சௌரியத்தையுடைய வீரன் நாராயணன் என்னும் செங்குந்தத்தலைவர்கள் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்ல இராசராசேந்திரனாகிய பாராந்தகச்

சோழன்முன்பு தங்கள் சுத்தவீரத்தின் வல்லமை எங்கும் விளங்குதற்கு வல்லான் தலைபோல ஒரு பொய்யான தலையைக் கொடுத்தலினாலே புகழ் பெறுதலில்லையெனக் கருதி தங்களிருவருடைய மெய்த்தலைகளையுங் கொடுத்தனர் எ-ம்.

வல்லான் 'பொய்த்தலை' கொடுத்தான் என்பது,

"பொன்னவ ளென்ன வாழ்ந்த பூங்குழ லனங்கவல்லி
தன்னருங் கற்பாற் பெற்ற தாலியி னுய ஞை
மன்னவன் வீரற் போற்றி மாயைதன் வலியி னாலே
பொன்மணி மௌலிவாய்ந்த பொய்த்தலையொன்று தந்தான்."

என்பதையும்,

வீரர்கள் 'மெய்த்தலை கொடுத்தனர்' என்பது,

"நீபமாலிகா பரணவே ணெஞ்சகத் திருத்திப்
பூபனுக்கு மெய்த்தலை தரவீரர் பொன்றலையைக்
கோபமிக்குள கோளரி யெனவெழுந் தார்த்து
மாபராந்தகா தேறென வறுத்தெதிர் வைத்தார்."

என்பதையும் உணர்த்துகின்றது. கூ0

'மெய்த்தலை கொடுத்தனர்' எனவே வல்லானைச் செயிக்கப் பன்னிருவர் சென்றாரென்பதூஉம், அப் பன்னிருவரில் ஒருவரிறந்து படுவாரெனில் மற்றையரும் இறக்கக்கடவேமென்னும் பிரதிக்கினை செய்து கொண்டாரென்பதூஉம், அப் பிரதிக்கினையால் நின்ற இருவருந் தந்தலைகளை அரசன் முன்னர் அரிந்து வைத்தனரென்பதூஉம், பின்னர்த் தங்கள் குலமுதல்வராகிய முருகப்பெருமானுடைய சடக்கர மந்திர தியானபலத்தால் முன்னர் இறந்துள்ள பதின்மரோடு உயிர் பெற்றெழுந்தார்களென்பதூஉம் பெற்றாம்.

சரித்திரவரலாறு - வல்லான்காவியம்

இங்கே, ருஅ, ருகூ, சூ0 என்னும் எண்ணுள்ள பாட்டு களிற் கண்ட வல்லான் என்பவன், வடநாட்டிலே நல்லூர் என்னும் நகரத்திலிருந்த 'போகன்' என்னும் இரட்டனுக் குப் புத்திரனுகப் பிறந்தவன். சிவபெருமானை நோக்கிப் பெருந்தவம் கிடந்து பல அரிய வரங்களைப்பெற்றவன். ஊரூ ரர்கச்சென்று அங்கங்கே பலநாள் வசித்துக் கடைசியாகத் தென்னுட்டிலே கடம்பூர் வந்து சேர்ந்தவன். ஆழ்ந்து அகன்ற அகழின் மத்தியில் இருப்புத் தம்பம் நாட்டி அதன் மேல் கட்டிய கோட்டையில் வசித்துவந்தவன். அரசர்க ளுக்கும் குடிகளுக்கும் மற்றைய உயிர்களுக்கும் துன்பமே செய்துவந்தவன். தஞ்சை வேம்பனை மந்திரியாகக்கொண்டு சோழ நாட்டை யாண்டுவந்த பாராந்தகச் சோழன் ஆட் சிக்கு அஞ்சாத நெஞ்சமுடையவன். 'அனங்கவல்லி' என் னும் கற்புக்கரசியின் மணவாளன்.

இவன் நாளும் செய்துவரும் அநீதங்களைப் பாராந்த கச் சோழன் கேட்டுணர்ந்தான். உடனே வீரர் வீரனுகிய பழுவை வீரன் முதலிய பன்னிருவர்களால் அவனுடைய இறுமாப்பை அடக்கப் பாராந்தகன் முயன்றுவந்தான். பழுவூர் வீரன் முதலிய பன்னிருவரும் பாராந்தகச்சோழன் விருப்பப்படி ஒன்றுகூடித்தாங்கள் வல்லானை வென்றுவருவ தாக அச் சோழன் சபையில் சபதஞ் செய்துகொடுத்தனர். அப்போதே அவ் வீரர்கள் பன்னிருவரும் படைக்கோலத் துடன் வல்லான் இருக்குமிடஞ்செல்லப் பிரயாணமாயினர். அவர்கள், அப்பொழுது "நமக்குள்ளே யாரேனும் ஒருவர் இறந்துபடின் மற்றையரும் உயிர்வாழ்வதில்லை" என்று கட்டுப்பாடு செய்துகொண்டனர்.

பின்னர், இப் பன்னிருவருள் கச்சித்தனியன் துர்க்கா தேவிக்கும், ஒற்றியூரன் காளி தேவிக்கும் பலியாயினர்.

முதுகுன்றமணியனும் கோளாந்தகனும் தாமே உயிர் நீங்கி அகழியைக்கடக்கும் தெப்பக் கருவியாயினர். புற்றிடங்கொண்டான் செந்நாய்களுக்கும், களந்தையான் புலிக்கூட்டங்களுக்கும்,புலியூர்ப்பள்ளிகொண்டான் சிங்கங்களுக்கும் பசிப்பிணியொழியத் துணிந்து ஆகாரமாயினர். பிணவன் தன்னுயிரைவிட்டு அக்கினியாற்றை மற்றவர் கடந்துசெல்லத் தெப்பமாயினன். கண்டியூரன் ஏரியிலுள்ள முதலைகட்குத் தனது மாமிசம் உணவாயும், அவ்வேரியை மற்றவர் கடந்து செல்லத் தோல் துருத்தியாகவும் உபயோகப்பட உயிர் துறந்தான். தஞ்சை வேம்பன் வழவழப்பான தம்பத்தில் மணலும் இரத்தமும் பூசி மற்றிருவர் ஏறிச்செல்லத் துணிந்துயிரைக் கொடுத்தான். எஞ்சிய பழுவை வீரன் நாராயணன் என்னும் இருவரும் அத் தம்பத்தின்மேலேறி சென்று வல்லான் மார்பை யிடமாகக் கொண்டார். அப்போது அவன் செயலற்றிருந்தான்.

இப்பால், அது கண்ட வல்லான் மனைவியாகிய அனங்கவல்லி அம்மையார், தனது கணவனைக்கொல்லும்படி அவன் மார்பிலே ஏறித் தங்கியிருந்த வீரரைப் பார்த்து, "மாங்கலியப்பிச்சை கொடுத்துதவவேண்டும்" என்று முந்தானையை கையிற்கொண்டு நின்றனள். உடனே வீரநாயனார் இருவரும் அவள் விரும்பியபடியே மாங்கலியப்பிச்சை கொடுத்தருளி, வல்லானுக்கு வேண்டிய நல்லறிவு புகட்டி, அவனை அவன் பிறந்த ஊருக்குப் போகும்படி கட்டளையும் கொடுத்தனர். பிறகு வல்லானும் அவன் மனைவியும் அவ்வீரர்கள் இருவரையும் வாழ்த்தி வணங்கிச் சந்தோஷத்துடன் தங்களூரைப்போய்ச் சேர்ந்திருந்தார்கள். ஜெயங்கொண்ட வீரநாராயணர் இருவரும் வல்லான் கோட்டையை அக்கினிக்கிரையாக்கி அங்கிருந்து புறப்பட்டுப் பாராந்தகச் சோழன் நீதிமன்றம் வந்துசேர்ந்தனர்.

அப்போது பாராந்தகச் சோழன், அவ் வீரநாராயண ரைப் பார்த்து, "என் பகைவனுகிய விக்கலன் தலையை எவ்வாறு கொய்தீர்கள்" என்று கேட்டான். உடனே அவ்வீரர் இருவரும் "இவ்வாறுதான் வெட்டினேம்" என்று தங்கள் தலைகளை வெட்டி வீழ்த்தினர். அதுகண்ட பாராந்தகச்சோழன் 'இப்பழி நம்மையே சாரும். ஆதலால் நாம் உயிரைப் போக்கிக் கொள்ளுவதே நீதியாம்' என்று உடைவாளைக் கையிலே எடுத்தான். அத் தருணத்திலே முருகக்கடவுள் எழுந்தருளிவந்து அவன் கையைப் பிடித்துக்கொண்டு "மன்னவனே உன்னுற் சரீரம் நீங்கி உயிர் விட்டவர்கள் பிழைப்பார்கள்; நீ சிறிதும் அச்சமுருதே" என்று திருவாய் மலர்ந்து பரவெளியில் மறைந்தருளினர் அப்பொழுதே மெய்த்தலை கொடுத்த வீரர்கள் இருவரும், அதற்கு முன்னிறந்த வீரர்கள் பதின்மரும் உயிர்பெற்றெழுந்தார்கள். பின்னர்ப் பாராந்தகச்சோழன் அவ் வீரர்களுக்கெல்லாம் தனித்தனியே வரிசைகள் பல வழங்கி, அவரவர்கள் ஊருக்கெழுந்தருளும்படி செய்வித்துத் தான் தஞ்சையில் வாழ்ந்திருந்தான். வல்லான் என்னும் இரட்டனை வென்ற பன்னிரு வீரர்களும், முருகக்கடவுள் திருவருட்டிறத்தினை வாழ்த்தி வணங்கித் தங்கள் தங்கள் இருப்பிடஞ் சென்றடைந் திருந்தார்கள். சூ0

சாவான்கற் சிறப்பு

பைந்தமிழ்க் காவலர் பகரும் பாடலார்
கந்தவே டான்மகிழ் கைலைக் காவலார்
வந்தவீ ரப்படைத் தலைவர் வந்துழிச்
சிந்தவே கழுத்துடற் செகுத்த குந்தமே.

இ - ள். செந்தமிழ்ப் புலவர்களாற் செய்த பாடலைப் பொருந்திய முருகக்கடவுள் மகிழ்ந்தெழுந்தருளி யிருக்கும்

திருக்கைலாய மலைக்குக் காவலராகிய நவவீரர்கள் சந்ததியில் வந்த வீரம்பொருந்திய செங்குந்தத் தலைவர்கள், சமயம் வந்தபோது தமது உயிரையும் ஒரு பொருளாயெண்ணுமல் கைக்குந்தத்தால் தம்முடலினின்றுங் கழுத்துச் சிந்தும்படி அரிந்தவராவர் எ - ம்.

சங்கப் புலவராகிய நக்கீரர் முதலியோர் பாடிய, பொய்யற்ற பிரபந்தங்களை ஏற்றருளியவர் முருகக்கடவுள் என்பது கொண்டு 'பைந்தமிழ்க் காவலர் பகரும் பாடலார்' என்றும், சிவன் வேறு கந்தன் வேறு என்னும் மக்கள் மயக்கத்தை ஒழிப்பான் புகுந்து, 'கந்தவேள் தான்மகிழ்கயிலை' என்றும் கூறினர். அன்றிக் குறிஞ்சித் தெய்வம் முருகக் கடவுள் என்பது கொண்டு வெள்ளி வெற்பை அவருக்குச் சொந்தமாகக் கூறினுரென்றலும் ஒன்று. முருகனும் சிவனும் ஒன்றென்பதை, பிற்காலத்து வந்த ஆன்றோரும், "அஞ்சுமுகங் காட்டாமல் ஆறுமுகம் காட்டவந்த - செஞ்சரணச் சேவடியைச் சேருநாள் எந்நாளோ." என்றும், "வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி-ஐந்து முகத்தோ டதோமுகமுந் - தந்து - திருமுகங்க ளாறுகி" என்றும், "இறுப்ப அரனே யிளையோ னுன வாற்றால்" என்றும் கூறியவாற்றானும் உணர்க.

செங்குந்தத் தலைவருள் ஒரு பகுதியார், வீராவேசங் கொண்டு, ஆங்காங்கே தங்கடங்கள் தலைகளை அறுத்து, 'சாவான்கல்' இட்டிருத்தலை மெய்ப்பிப்பான் புக்கு, "குந்த வீரப்படைத் தலைவர் கழுத்துடல் செகுக்கும்" என்று கூறினர். இதனை,

"தங்குழுவுக் கேதந் தருங்கால மோட்டெடுப்பச்
செங்குந்தம் தந்தலையைச் சேதிக்கும் - பொங்குபுகழ்

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.''

எனவரும் வெண்பாவினானும் உணர்க. சூகூ

புலிக்கொடி நிலையிட்ட சிறப்பு

தில்லைமூ தூர்நடஞ் செய்யு மாலயத்
தோல்லையிற் பொறித்திடு முழுவை முத்திரை
யெல்லையி னுவலோன் பதின்மர்க் காக்கியோர்
வல்லயிற் றுணையோடு மருவுங் குந்தமே.

இ - ள். சபாபதி நடனஞ்செய்யாநின்ற ஆலயத்தை யுடைய சிதம்பரம் என்னும் நகரத்தில் பழமையாக அரசாட்சி செய்துவந்த நவவீரர்களது கொடியிற்றீட்டிய புலியாகிய முத்திரையானது, அளவுபடாத விரிவையுடைய நாவலந் தீவு முழுமையுஞ் செல்லும்படி செய்வித்தது; ஒப்பற்ற வல்லமையை யுடைய வேலாயுதத்தைத் துணையாகக் கொண்டிருக்குஞ் செங்குந்தம் எ - ம்.

இத் திருவிருத்தத்தில் வரும் 'தில்லை மூதூர்' என்பதற்கு, "தில்லை மூதூர் ஆடிய திருவடி'' எனவும், "மாடமொடு மாளிகைகண் மல்குதில்லை மணிதிகழு மம்பலத்தே மன்னிக் கூத்தை-யாடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே.'' எனவும் வரும் தமிழ் வேதப்படி, மிகப் பழமையான பட்டினம் என்று பொருள் கூறலும் ஒன்று.

நவவீரருள் ஒருவர், சிதம்பரம் கோயிற் றருமபரிபாலனம் காரணமாக அவ்வூரை ஆண்டு வந்தனர் என்பதை,

"கோயிற் றருமங் குறைவறவே வந்தகுந்தம்
பாயும் புலிக்கொடியைப் பாடாரைக்—காய்குந்தம்

செய்யதிருக் காமாட்சி செஞ்சிலம்பி லேவந்த
கய்யர்திருக் குந்தமது காண்."
எனவரும் வெண்பாவினுனும், உணர்க. ௬உ

## பரணி கொண்ட சிறப்பு

அறுசீர்விருத்தம்

எந்தையா மம்மை பாகத் திறைவனை வணங்கி யாமே
பைந்தமிழ்ப் பரணி செய்தப் பாடலோ டந்த மாக
வந்தமா மடவா ராட வரியணை யிருந்த வீரர்
குந்தமே குந்தம் வேறு குந்தமு முளதோ கூற.

இ - ள். உமாதேவியை யொருபக்கத்திலே யுடைய என் தந்தையாகிய கடவுளை வணங்கி யானே பசிய தமிழாற் கூறிய 'பரணி' என்னும் பிரபந்தத்தின் பாடலை அபினய இலக்கணத்தோடு அழகியமாதர்கள் நர்த்தனஞ்செய்யச் சிங் காதனத்தில் எழுந்தருளியிருந்து கேட்டு மகிழ்ந்த செங்குந் தத்தலைவர்கள் கையின்கண் தாங்கியகுந்தமேகுந்தம். உலகத் தார்துதிக்க வேறு குந்தம் உண்டாயிருக்கின்றதோ எ - ம்.

ஒட்டக்கூத்தர், செங்குந்தர்மீது 'பரணி' பாடியிருப்பதை,

" கூத்தன் பரணியுலா கொண்டுமகிழ் பூத்தகுந்தம்
வேத்தரசைச் சோணாட்டில் வேர்களைந்து—பார்த்திபனும்
செய்ய குலோத்துங்கன் செங்கோல் வழிநடப்பச்
செய்தகுந்தம் செங்குந்தர் தேர்."
என வரும் வெண்பாவினுனும் உணர்க. ௬௩

## சிரச் சிங்காதனச் சிறப்பு

கலிவிருத்தம்

வரச்சிங் காதன வளவர் தம்பிரான்
தரச்சிங் காதனந் தன்னி லேறியே
துரைச்சிங் காதனந் தொழுங்க விக்கிடுஞ்
சிரச்சிங் காதனச் சீர்செங் குந்தமே.

இ - ள். பூர்வத்தில் முசுகுந்தமன்னன் பெருந் தவஞ் செய்து வரமாகப் பெற்ற சிங்காதனத்தை யுடைய அவர் குலத்துள்ள சோழ ராசர்களுக்கெல்லாம் தம்பிரானாகிய குலோத்துங்கச் சோழனாற் கொடுக்கப்பெற்று சிங்காதனத் துரைகளெல்லாம் வணங்க வீற்றிருந்த கவியாகிய எனக்கு ஆயிரத்தெட்டுத் தலைகளாகிய சிங்காதனமிட்ட சிறப்பினை யுடையோர் செங்குந்தத்தலைவர் எ-ம்.

குலோத்துங்கச் சோழன் முன்னோனாகிய முசுகுந்தச் சோழன், பெருந்தவஞ் செய்து அத் தவத்தின் பயனாக அவன் பெற்ற சிங்காதனம் என்பது தோன்ற, 'வரச்சிங் காதனம்' என்றார். இதனை,

"முந்தை நாடனில் முசுமுகக் குந்தவேள்
கந்த நாயனார் கழல்பர விப்பெறும்
சந்த வாதனந் தனிலிருந் தரசினை
எந்த வேளையு மியற்றின னென்பவே."

எனவரும் விருத்தத்தானும் உணர்க.

ஒட்டக்கூத்தர், குலோத்துங்கச் சோழனுக்குப் பிரதி பிதாவாயிருந்த போது, அச் சோழராஜன் அவருக்குச் செய்துவந்த பற்பல வரிசைகளுள் சிங்காதன வரிசையும் ஒன்றென்பது தோன்ற, 'வளவர் தம்பிரான் தரச் சிங் காதனம்' என்றார். இதனை,

"சோழ னவைப்புலவன் சொல்லா தனப்புலவன்
வேழ முடைப்புலவன் மேதினியில்—ஆழமுடைக்
கல்வி கரைகண்ட காம ருடைப்புலவன்
நல்லவொட்டக் கூத்தனெனும் நாடு."

எனவரும் வெண்பாவினானும் உணர்க.

### சிரச் சிங்காதனக் காரணச் சிறப்பு

வேட்டுமோ னடரி தாய வேணியர்
சூட்டுதோள் வாரிசத் துணைக ளேத்தியே
யாட்டுக சென்னியை யலர்த்தி யேயெனக்
காட்டுதற் கேயரி கவின்கைக் குந்தமே.

இ - ள். திருமாலானவர் திருவடிகளைக் காணவேண்டி வராகவதாரஞ்செய்து பூமியைப் பிளந்து தேடியுங் காணு தற்கரிதாக விருந்த சடாமகுடத்தையுடைய பரமசிவனது, யாவராலும் அருச்சிக்கப்படுகின்ற தாமரைமலர் போன்ற இரண்டு திருவடிகளையுந்தோத்திரஞ்செய்து, உலகத்தாரைப் பார்த்து நீங்கள் முகமலர்ந்து சிரக்கம்பனம் பண்ணுங்க ளென்று தங்கள் வீரத்தைக் காட்டுதற்கே தலையரிந்து சிங் காதனமிட்டனர்; கையின்கண் அழகிய குந்தத்தையுடைய இச் செங்குந்தத்தலைவர் எ - ம்.

சிவபெருமான் விஸ்வரூபம் கொண்டருளிய காலத்தே, அவர் திருவடியைத் தேடிக்காணும்படி, திருமால் வராக ரூபங்கொண்டு பலபகல் துருவிச் சென்றலுத்தார் என்பது தோன்ற, 'வேட்டுமால் நாடரிதாயவேணியர்' என்றார். இது, "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை" எனவரும் ஆளுடையவடிகள் வாக்கானும்உணரப்படும். கூடு

### பிரமகத்தி யொழித்த சிறப்பு

கலிவிலைத்துறை

விண்டு வேதனு நாடரி தாகிய விமலன்
பண்டு தாருகப் பிரமகத் திப்பழி போகக்
கொண்டு தாமெனக் கடுகியே குடிவழித் தொன்மை
கண்டு தாங்கழுத் தரிந்தது கவின்கவின் குந்தம்.

இ - ள். அரிபிரமர்களாலே தேடுதற்கரிய நின்மலனு கிய பரமசிவனுக்குப் பூர்வத்தில் தேவதாருவனத்தில் சம்ப

வித்த பிரமகத்தியாகிய பழியை அழகிய செங்குந்தத் தலைவர்கள் அறிந்து, அதை நீக்குதற்குப் பழைமையான அக் குடிவழி வந்தவர் தாமே யென உள்ளத்திற்கொண்டு விரைந்து தங்கள் கழுத்தை அரிந்தது மிகவும் அற்புதம் எ - ம்.

இங்கே, 'விண்டு வேதனும் நாடரி தாகிய விமலன்' என்றதை, அநாதிமல முத்தராகிய சிவபெருமான் "ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமிலான்" என்ற திருவாசகத்தானும், "மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான் - ஒப்புடைய னல்ல னொருவனல்லன் ஒரூர னல்லனோ ருவம னில்லி - அப்படியு மந்நிறமு மவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக் காணி னல்லால் - இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்தன் இவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே." என்ற தேவாரத்தானும், "அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டேன்- இன்றுந் திருவுருவங் காண்கிலேன் - என்றுந்தான் - எவ்வுருவோ னும்பிரா னென்பார்கட் கென்னுரைக்கேன் - எவ்வுருவோ நின்னுருவ மேது." என்ற அம்மைத் திருவந்தாதியானும், "பலகலையாகமவேத மியாவையினுங் கருத்துப் பதிபசுபாசந் தெரித்தல் பதிபரமே யதுதான் - நிலவு மருவுருவின்றிக் குணங்குறிக ளின்றி நின்மலமாயேகமாய் நித்தமாகி - அலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச் - செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த் திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்துளாரே." என்ற சிவப்பிரகாசத்தானும் காண்க.

இனி, இறைவன் காலாக்கினிருத்திரன் முகமாகக்காட்டிய பிரமகபால விஷயம் அநாதிமல பெத்தராகிய ஆன்மாக்கள் பொருட்டுச் செய்த நாடகமாகும். பிரமன் தலையற்றபோது அவன் உயிர் துறந்தானில்லை. ஆனால் பிரமகத்தி

என்ற சொல்லுக்கு அருத்தம் என்னையெனில், அது உபசார வார்த்தை என்பதாம்.

கபாலத்தை இரத்தத்தால் நிறைத்த கடவுள் வருக்கத்தவருள் நவவீரரும் ஒருவராதலால், 'குடிவழித் தொன்மை கண்டு தாங் கழுத்தரிந்த குந்தம்' என்று கூறினர்.

சரித்திரவரலாறு - சிவரகசியம் - நான்காமம்சம்

பூர்வம் பிரமதேவன் விதிவசத்தால் சிவநிந்தையைச் செய்து பிராயச்சித்தம் யாதுமின்றி அநேககாலம் அல்லற்பட்டுப் பின்னர்ப் பரமசிவனைப் பூசித்து அவனது பிரசாதத்தால் தூய்மை பெற்றனன். 'யாது காரணத்தால் பிரமன் சதாசிவ மூர்த்தியை நிந்தனை செய்தனன்; அதனால் அவன் எவ்விதமான துக்கம் அடைந்தனன்' என்றால், முன்னோர் கற்பகாலத்தில் சகல சராசரங்களும் பிரளயத்தில் மூழ்கி ஒரே சலமயமாயிருக்குந் தருணத்தில் ஐந்து தலை படைத்த பிரமன்றோன்றிச் சகல உலகங்களையும் படைத்துப்பின்னர்த் தான் படைத்தவற்றைத் தானே பார்த்து அதிசயித்துக் கர்வங்கொண்டு "நாமன்றோ இப் பிரபஞ்சத்தை யுண்டாக்கினோம். உண்டாக்கிய நாமன்றி இப் பிரபஞ்சத்துக்குப் பரமகாரண புருஷன் எவனுள்ளான்? 'சிவன் பரமகாரண புருஷன்' என்பது சிறிதும் ஒவ்வாது; நாமே பரம்பொருள்" என்றிறுமாந் திருந்தனன். இவனது இறுமாப்பை யறிந்த பரமேஸ்வரராகிய சிவபெருமான் காலாக்கினிருத்திரரை நோக்கி, "பிரமன், தானே பரமென மயங்கிக் கர்வித்திருக்கின்றான், நீ சென்று அவனது ஐந்தாவது சிரத்தைக் கொய்து வருவாய்" என்று ஏவினர். அப்படியே காலாக்கினி ருத்திரரும் சென்று பிரமனது ஐந்தாந் தலையைக் கொய்யப் பிரமன் தலையிழந்து மிக்க துயரமுற்றுப் புலம்பிக்கொண் டிருந்தான். அப்பொழுது சிவபெருமான் அப்பிரமனெதிரிற்றோன்றி, "எம்மை நிந்தித்ததனாலன்றோ

இவ்வாறு துயரமெய்தப் பெற்றனே" என்று கூறினர். அது கேட்ட பிரமன், அஞ்ஞானம் நீங்கிச் சகலவேதசாரமாகிய பற்பல துதிகளைச் செய்தான். அதனால் பக்தவத்சலப் பெருமான் பிரீதியடைந்து "பிரமனே, நீ இப்பாவம் நீங்கும் பொருட்டுச் சிவலிங்கார்ச்சனை செய்யக்கடவாய்" என்றநுக்கிரகம் செய்து மறைந்தருளினர். அவனும் அப்படியே சிவலிங்கார்ச்சனை செய்து பாவநீங்கிப் பரிசுத்தமெய்தினன்.

இப்பால், இறைவன் காலாக்கினி ருத்திரரை நோக்கி, "நீ லோகானுக்கிரகார்த்தமாய் எனது ஆணையைக் கடவாமல் எல்லாத் தேவர்களிடத்தும் இந்தப் பிரம கபாலத்தில் உதிரபிட்சை யேற்றுப் பன்னிரண்டு வருடம் எங்கும் உலாவிப் பின்னர்க் காசி என்னும் அவிமுக்த க்ஷேத்திரத்துக்குப் போய்ப் பஸ்மருத்திராக்ஷ தாரணனாய் என்னைப் பூசித்துப் பிறகு இக்கபாலத்தை யொழித்து விடுவாயாக" என்று பணித்தருளி அந்தர்த்தானமாய்விட்டனர். உடனே காலாக்கினி ருத்திரர், காசியாகிய ஆனந்த வனத்துக்குப் போய்ச் சிவாக்ஞையின்படி சிவலிங்கார்ச்சனை செய்து பரமானந்தமுற்றிருந்தனர். ௬௯

குந்தப் பூசைச் சிறப்பு

கலிவிருத்தம்

தவந்தனிச் செய்வதென் றலைச்சிங் காதனம்
உவந்துபா வாடையிட் டோடுஞ் சோரிமேல்
நவந்தனிற் பாடிய நங்க வித்திறஞ்
சிவந்திடச் செய்தது திருச்செங் குந்தமே.

இ - ள். செங்குந்தத்தலைவர்கள் உவப்போடு ஆயிரத்தெட்டுத் தலைகளை வெட்டிச் சிங்காதனமாகச்செய்து இரத்தப் பாவாடையிட்டு, அதினின்றும் ஓடாநின்ற இரத்த வெள்ளத்தின்மேலிருந்து, புதுமையாகப் பாடிய நமது கவியி

னது மகத்துவம் பிரபலிக்கச் செய்தது அழகிய இச் செங்குந்தம். ஆதலால், உலகத்துள்ளீர்! இச் செங்குத்தத்தைப் பூசியாது பாசபந்த முதலிய துறந்து வனத்தில் தனியாக இருந்து தவஞ்செய்ய வேண்டுவதென்னே? எ - ம்.

'கவித்திறஞ் சிவந்திடச் செய்தது' எனவே, ஆயிரத் தெண்மரும் இப் பிரபந்தமுற்றியபோது உயிர்பெற்றெழுந் தனர் என்பதும், அதனல் இப்பிரபந்தம் தெய்வீகமுடைய தென்பதும் பெற்றும்.

வேண்டுவார் வேண்டுவதே வெறுப்பக் கொடுக்கும் வேலினை வைத்துப் பூசியாது, வேறு பல தவங்களைச் செய் வது பயனில்லை என்பது தோன்ற, 'தவந்தனிச் செய்வ தென்' என்றார். இதனை,

"வேண்டுநர் வேண்டிய வெறுப்பக் கொடுக்கும்
தாண்டவ முதலியர் தாள்வழி வந்த
ஒன்பான் வீர ருரிமையிற் றிகழும்
அன்பார் குந்தத் தயிலினைப் பரவுதும்
இன்புடைப் போக மெய்துதற் பொருட்டே."

எனவரும் ஆசிரியப்பாவினுனும் உணர்க. கூஎ

குந்தத் திறச் சிறப்பு

அறுசீர்விருத்தம்

வீணுக்கே ருத வாய்மை விளம்பிடா வெற்றி யாளர்
ஆணுக்கே ருய்ப்பி றந்தோ ரடுபுலிப் பதாகை மன்னர்
நாணுக்கே ருத சாப நாட்டியே யிறுத்த மாறன்
மாணுக்கே ருத மாற்ரு ரடைந்திட மருவுங் குந்தம்.

இ - ள். பிரயோசனத்துக்குப் பொருந்தாத வல்ல மையைத் தம் வாயாற் சொல்லாத வெற்றிப்பாட்டினை யுடை

யவரும், ஆண்பிள்ளைகளுக்குள்ளே சிங்கம்போலும் வலியின ராய்ப் பிறந்து ஒப்பற்ற கொல்லுந் தொழிலையுடைய புலிக் கொடியைத் தாங்கினவரும் ஆகிய செங்குந்தவரசர்கள் கையின்கண், நாணியேறிடுதற்கு வளையாத வில்லை நிறுத்தி ஒடித்த சீராமபிரானது பெருமைக்கு மேற்பட்ட சிங்கம் போலும் வல்லமை யுடைய சத்துருக்கள் சரணுகதியாகத் தம்மை யடையக் குந்தமருவியிருக்கும் எ - ம்.

செங்குந்தத் தலைவர்கள், "பொருடீர்ந்த பொய்ச்சாந் துஞ் சொல்லார் மருடீர்ந்த - மாசறு காட்சியவர்." என்னும் திருவள்ளுவர்க் கிலக்கணம் என்பார், 'வீணுக் கேருத வாய்மை விளம்பிடார்' என்று கூறினர்.

இப் பாட்டில் வரும், 'நாணுக்கேருத சாப நாட்டியே யிறுத்த மால்' என்பதற்கு, நாணி ஏறிடுவதற்கு வளையாத வில்லை நிறுத்தி ஒடித்த சீராமன் என்றுரை வரைந்ததை,

"மாராமர மிவையென வலிய தோளினன்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன்.

பூணியன் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையி னடைந்தவில் லதனை யாண்டகை
நாணினி தேற்றினு னெடுங்கிற் றும்பரே.

மாத்திரை யளவிற்றான் மடுத்து முன்பயில்
சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினன்
ஏத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே."

எனவரும் திருவிருத்தங்களாற் கண்டு தெளிக. கூ௫

## உலகம் புகழ்ந்த சிறப்பு

### கலிவிருத்தம்

வட்டமா ரவையுழை வந்த மேலவர்
இட்டபா வாடைகண் டிசைபே ருதுமண்
முட்டவந் துயிர்பெறீஇ மொய்த்து ளேமெனக்
கட்டளே குந்தர்சீர் கழறி யேத்தினர்.

இ - ள். வட்டமான இச் சபையின்கண் வந்த மேலவர் இச் செங்குந்தத்தலைவர் பிரபந்தம் கேட்க அம்பலக்கூத்தனாகிய நமக்குச் செய்வித்த சிரச்சிங்காதனத்தோடு இரத்தப் பாவாடையைக்கண்டு, நாம் இவ்வுலகமுழுவதும் பல் குலங்களிற் பிறந்துவந்தும் இத்தகைய புகழைப் பெற்றுக் கொள்ளாது உயிர்பெற்று நெருங்கி இருக்கின்றோம் இத் என்னையென்று தம்மை யிகழ்ந்து, கட்டுப்பாட்டினை யுடைய செங்குந்தத் தலைவரது சிறப்புக்களை எடுத்துச் சொல்லித் துதித்தனர் எ - ம்.

இத் திருவிருத்தத்துள், 'மேலவர் இரத்தப் பாவாடை கண்டு கட்டுள குந்தர்சீர் கழறி ஏத்தினர்' என்று வருதலை,

"ஆலால முண்ட வரனடியி லன்புடைய
மேலான யோகியரும் வேந்தர்களும்—மாலாகிப்
பின்றொளிந்து போற்றினரால் பீதப்பா வாடையரை
என்புருக நின்றுகளித் தே."

எனவரும் வெண்பாவினானும் உணர்க. சூகூ

## குந்தத் தலைவர் சிறப்பு

### அறுசீர்விருத்தம்.

செந்தமிழ்க் காகப் போந்து சிவந்தபா வாடை யாக
நந்தமக் கிடுங்கா லெந்த நகரமு மளம்வி யந்த
அந்தரத் தமரர் வாழ்த்தி யணிமலர் மாரி பெய்தார்
இந்தச்செங் குந்தர் பெற்ற விசையெவர் பெற்று ரம்ம.

இ - ள். குற்றம் நீங்கிச் செவ்விதாகிய ஈட்டியெழுபது என்னுந் தமிழைப்பெறும்பொருட்டு வந்து அம்பலக் கூத்தனுகிய நமக்குச் சிரச்சிங்காதனத்தோடு இரத்தப்பாவாடையிட்ட காலத்தறிந்த எந்த நகரத்திலுள்ளாரும் உள்ளத்தில் ஆச்சரியத்தை யடைந்தவராய்ச் சந்தோஷித்தனர். தேவருலகத்திலுள்ள அமரர்கள் இவர்களை நீடூழி வாழியென வாழ்த்தி அழகிய மலர்மாரிசொரிந்தனர். ஆதலால், இத்தன்மையினை யுடைய செங்குந்தத் தலைவர் பெற்ற புகழைப் போல உலகத்தில் எக் குலத்தார் பெற்றனர் எ - ம்.

இரத்தப் பாவாடை விரித்து அதன்மேல் அடுக்கிக் கிடந்த சிரச்சிங்காதனத்தைப் பார்த்து, 'அந்தரத் தமரர் வாழ்த்தி யணிமலர் மாரி பெய்தார்' என்பதை,

" அம்பலக் கூத்தர்க் கிட்ட வாதனச் சிரங்கள் பார்த்து
வம்பலர் மாரி தூர்த்தார் வானநாட் டவர்க ளிந்த
இம்பரின் மாக்கள் பல்லோ ரேத்தெடுத் திட்டார் வாழ்த்தி
செம்பியர் கோனுங் குந்தர் செயலினை வியந்து நின்றான்."

எனவரும் விருத்தத்தானும் உணர்க. எ௦

குந்தப்பெருமை கூறற்பாலார் சிறப்பு

அம்பர்நாட் டமர்ந்த குந்த மயனரி யரன்மூன் றென்னும்
உம்பர்தா மறிய வேண்டு முயர்ந்தமுத் தமிழி னாலே
கும்பசம் பவனே தேர்ந்து கூறவே வேண்டு மல்லால்
இம்பர்யாங் கூற வேண்டு மேவர்மற் றுங் கூறு வாரே.

இ - ள். திருக்கைலாய மென்னும் அந்தவுலகில் எழுந்தருளியிருந்த நவவீரர்கள் கையின்கணிருந்த குந்தத்தினது பெருமையை அயன் அரி அரன் என்னுந் திரிமூர்த்திகளாகிய தேவர்கள் அறியவேண்டும். அன்றி அகத்தியனே

ஆராய்ந்து மேலான இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழினுலுஞ் சொல்லவேண்டும்; அன்றி இவ்வுலகத்தில் அம்பலக் கூத்தனாகிய யான் கூறவேண்டும். இஃதன்றி மற்றியாவர் கூறவல்லார் எ - ம்.

கைலைமலைக் காவலராகிய ஒன்பான் வீரர் கையிலுள்ள குந்தம், பார்ப்பதி அம்மை கொடுத்தருளிய தெய்வப்படையாதலால், அக் குந்தப் பெருமையை, அந்த உலகத்தில் தேவரும், இந்தவுலகத்தில் மகரிஷிகளும், தெய்வீகம்பெற்ற பெரும்புலவர்களும் தான் புகழவேண்டும் என்பது தோன்ற, 'உம்பர்தாம் அறியவேண்டும்' என்றும், 'கும்ப சம்பவன் கூறவேண்டும்' என்றும், அல்லது 'யாம் கூறவேண்டும்' என்றும் கூறினர். இதனை,

"சத்தியுஞ் சிவமு மான தம்பிரான் வழியில் வந்த
வித்தக வீர ரொன்பான் விரைமலர்க் கரத்தில் வைத்த
சத்தியின் வன்மை தன்னைத் தரியலர்ப் போரிற் காண்பார்
நித்தமு மற்றை யோர்கள் நிகழ்த்துவர் பூசை தானே."

எனவரும் விருத்தத்தானும் உணர்க. எக

ஈட்டியெழுபது முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப்படையோன் திருவடிவாழ்க



காஞ்சி நாகலிங்க முனிவர் பதிப்பு

# ஏழுப்பெழுபது

ஒட்டக்கூத்தர்

கற்பனையெ லாங்கடந்து காணெஞ்சே யத்துவித
உற்பலவெற் பானையே யுன்னி.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# எழுப்பெழுபது

## காப்பு

நேரிசைவெண்பா

தங்கச் சிலையேட்டிற் றந்தவெழுத் தாணிகொடு
துங்கப் பெருநூலைத் தூய்மையுடன்—சங்கையற
வேதமுனி சொல்ல விளக்கினான் பாதமலர்
போதமெனப் போற்றுவாம் புக்கு.

## வேண்டுகோள்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங்
கல்வியுணர் கவிவல் லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில்
வாழ்வதுவு நிசமே யன்றோ
சிலைவாணா ளிருந்தா யிரம்புயங்க
ணிந்துமுயர் சீவ னுற்றான்
தலையாவி கொடுத்திடுஞ்செங் குந்தருயிர்
பெற்றிடவுந் தயைசெய் வாயே. க

நினைத்த வடிவினன்

அறுசீர்விருத்தம்

பலபல மதங்க டோறும் பற்பல வடிவ மாகி
அலகிலா விளையாட் டென்று மாடிடு முருக வேட்கு
நலமுறு மனுச ரான நங்குல முதலி தங்கள்
தலைதனை யுடலிற் கூட்டித் தந்தருள் வாணித் தாயே. உ

ஆதியந்தமிலான்

தோற்றமு மீறு மற்ற தோமிலா வுருவங் கொண்டு
மாற்றலர் சூர ஞதி மன்னரை மதித்துக் காய்ந்த
நாற்றிசை போற்று மெங்க ளுமவேற் குமரன் பின்னே
சாற்றருங் குலர்க்கு ளாவி தந்தருள் வாணித் தாயே. ௩

வேதப் பொருளான்

உரைசெயும் வேத கோடி யுட்பொரு ளாகி நின்ற
பரசிவ னிவனே யென்று பன்முறை யேத்த நிற்கும்
ஒருபொரு ளான கந்த னுடன்வரு மாபா ரின்று
தருதலை யாவி கொள்ளத் தந்தருள் வாணித் தாயே. ச

விச்சுவ ரூபன்

பண்டொரு நாளில் மேரு பருப்பத முடியி னின்றே
அண்டங்க ளெல்லாந் தம்மி லடக்கியே காட்சி தந்த
முண்டக முளரித் தாளான் முருகவேட் டுணைவர் தந்த
தண்டலை யாவி சேரத் தந்தருள் வாணித் தாயே. ரு

பிதாமகன் பகைஞன்

ஒருவனே டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்
தருபவ ணுகி யன்று தாமரைக் கிழவோன் றன்னைப் [லாம்
பெரும்பகல் சிறையில் வைத்த பீடுசேர் முருகன் பின்னே
வருங்குல ராவி கொள்ள வைத்தருள் வாணித் தாயே. சா

### தெய்வயானை மணாளன்

தேவரும் போற்ற மேனாட் டெய்வத யானைத் தோளை
மேவியே விந்தி ரற்கு வேண்டிய வரங்க ளீந்த
தேவர்க டேவ னான செய்யவேட் கனுச ரீந்த
தாவருந் தலைக்கு ளாவி தந்தருள் வாணித் தாயே. எ

### வள்ளி மணாளன்

தெள்ளிய சீர்த்தி கொண்ட சிவமுனி வரனாற் கண்ட
வள்ளியைத்தொண்டை நாட்டு வரைதனில் வதுவைசெய்த
எள்ளிலை வடிவேற் கைய னிடத்தவ ரெனக்குத் தந்த
தள்ளருந் தலைக்கு ளாவி தந்தருள் வாணித் தாயே. அ

### வரையாது கொடுப்போன்

வேண்டிய போக மெல்லாம் விருப்புட னுலகுக் காக்கும்
ஆண்டியாம் பழனி மேய யாண்டிதன் வழியில் வந்த
காண்டகு குந்த ரின்னே காட்டிய தலைக ளெல்லாம்
ஈண்டவர் பெற்று வாழ விழைந்தருள் வாணித் தாயே. கூ

### ஞானசத்திதரன்

மோனமா முனிவர் தேற முப்பொருள் கையாற் காட்டி
ஞானமாஞ் சத்தி தன்னை நற்கரத் தமைத்தே யெங்கள்
கானமான் குறத்தி மாதைக் கடிமண விழவிற் கண்ட
வானவே ளனுசர்க் காவி வழங்கருள் வாணித் தாயே. க0

### தேவதேவன்

முன்றொரு பகலிற் றேவர் முனைப்பினை யொழிப்பான் புக்குச்
சந்திர சூட னாகித் தனிப்பெரு வெளியில் வந்தோர்
மந்திரத் துரும்பை நாட்டி வலிகெடச் செய்த வெங்கள்
கந்தனுக் கிளையர்க் காவி கண்டருள் வாணித் தாயே. கக

சாமிநாதன்

பிள்ளைகன் வேண்டி நிற்கப் பிரணவப் பொருளைக் கூறிக்
கஞ்சனைத் தளையி னீக்கிக் காளைரும் கோலங் கொண்ட
மஞ்ஞையி லிவர்ந்து கந்த மாதனத் திருந்தான் பின்னர்
உஞ்சிட வாவி சேர வுவந்தருள் வாணித் தாயே. கஉ

குந்தர் குணமாட்சி

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

நிலைதந்தார் புவியினுக்கு யாவருக்கு
மபிமான நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய்
திடவென்றே கையில் யாண்டும்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்த
ரென்கவிக்கு விலையா கத்தான்
தலைதந்தா ரெனக்கொட்டக் கூத்தனெனும்
பெயரினையுந் தாங்தங் தாரே. கா

எழுப்பெழுபது முற்றும் கிடைக்கவில்லை

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க



அணியாகு மென்னெஞ்சே யன்பர் தலைக்குத்
தணியா சலக்கடவுள் தாள்.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# களிப்பொருபது

### அசரீரி

இந்தக்கைக் கோள ரிசைக்கெண் கணன்படைத்த
வெந்தக்கைக் கோளரிணை யாவாரே—யந்திப்
பிறையணிகைக் கோள னுருப் பெற்றவன்பால் வைகும்
நிறையணிகைக் கோளரே நேர். க

### ஔவையார்

மூவுலகை யுங்கடந்து மூதண்டப் பித்திகையை
மேவியதற் கப்பா லு மின்னியதே—பூவிலென்றும்
மங்காத நூல்வேண்டி மாண்கூத்தற் கிட்டசிரச்
சிங்கா தனத்தலைவர் சீர். உ

### கம்பர்

கந்தழியென் றுன்றோர்கள் கண்டு நிதம்பரவும்
எந்தை முருக னிளையவராம்—சந்ததியில்
வந்துமகிழ் செங்குந்தர் வாய்மைதனை யென்சொல்கேன்
செந்திருமாற் செல்வர்களே தேர்ந்து. ௩

### புகழேந்தி

விண்முகத்தோர் பூமாரி வீசியது மோர்வியப்போ·
மண்முகத்தே செங்குந்தர் மாய்சிரங்கள்—எண்முகத்தும்
சிந்தியதத் தம்முடலைச் சேர்ந்தொட்டிக் கொண்டொலித்து
வந்தவித மெண்ணவருங் கால். ச

### அம்பிகாபதி

குந்தர் பெருமிதத்தைக் கூறுவதென் பார்த்திபர்காள்
சந்தத் தமிழ்க்கடலார் தாம்போற்ற—விந்தையுடன்
தலைதந்தார் பாடலுக்குத் தாமென்றும் பூவினுயர்
கலைதந்தார் மாக்களுக்குக் காண். ரு

சோழன்

ஏதென் றெடுத்துரைக்கே னென்ஞசான் றன்கவியைப்
போது ளிருந்துவளர் பொன்மாதே—யீதலவா
சாகாத கல்வியென்று சான்றோர்கள் சாற்றிவைத்த
ஏகாந்த சொல்லாகு மெண். ௬

பாண்டியன்

அன்றுங் கவிநலத்தை யாய்ந்தறிந்தேன் பாண்டியிலே
இன்றுங் கவிநலத்தை யீங்கறிந்தேன்—என்றுந்தான்
கூத்தற் கெதிருண்டோ கூறு மவனிதனிற்
பார்த்திபரே காண்மின் படித்து. ௭

சேரன்

விண்கண்ட தேவரெலாம் வீற்றிருந்தா ரீங்கென்று
கண்கண்ட மாமுனிவர் காட்டினர்—பண்கொண்ட
கூத்தன் கவிக்குக் குவிந்ததலை யாசனத்தைப்
பார்த்திடவே நன்றுய்ப் பதிந்து. ௮

அஞ்சஞகூஷி

வாழிசக்ர வர்த்திப்பேர் வாய்ந்தவொட்டக் கூத்தன்புவி
ஏழினெடு மேழுமதன் மேலுநிலை—சூழச்செய்
ஈட்டி யெழுபதெனு மிந்நூற்கொப் பின்மைகண்டீர்
நாட்டிலுயர் வாணர்களே நன்கு. ௯

சைவாசாரியர்

வாழியொட்டக் கூத்தன் வகைவந்தார் தாம்வாழி
வாழி மன்ன னெந்நாளும் வையகத்தில்—வாழியவே
கொலைகளவு கட்காமங் கோள்விலகி மாக்கள்
உலைவில்லா வின்ப முகந்து. ௧௦

## களிப்பொருபது முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க

சேவித் திடநெஞ்சே சென்ம வினையகலும்
காவித் தடவரையான் கால்.

உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை

# திருக்கைவழக்கம்

## காப்பு

நேரிசைவெண்பா

சோணாடுந் தொண்டைவளத் தொன்னாடு மாணுடைச்செவ்
வேணாடுந் தம்பியர்கை வீறுரைப்பச் - சேணாடு
காப்பான் பதம்புரப்பான் கைம்மா முகம்படைத்துக்
காப்பான் பதம்புரப்பான் காப்பு.

---

கலிவெண்பா

திருமான்முன் னாயபல தேவரவுண் சூரால்
உருமாறிக் கைலைவரை யுற்றே - பெருமாரிப்
பெய்யலென வோலமிடப் பெம்மா னிரங்கிநுதற்
செய்யவிழி யாறுந் திறந்தருளி - வெய்ய
அனற்பொறியா லாறு னனைத் தரவக்
கற்பொறிக்கஞ் சுற்றெழுந்த கௌரி - புனைச்சிலம்பின்
ஒன்பான் மணிசிதற வொன்பா னுமையுருக்கள்
அன்பா யவற்றா டவதரித்தே-யின்பாயவ்
வண்ண லருள்பெறனு மவ்வவர்பா னந்திகணப்
பண்ணவர்சூ லாகவுமை பார்த்துருக்கி - நண்ணுறுசூல்
தோற்றா வகைசபிக்கத் தோமினவ சத்திகணா
மேற்றாராய் வேர்ப்பவதி லேயிலக்க - ராற்றலொடு

பொன்னுடையும் வாளுமுறப் போந்தமலற் போற்றியவன்
மன்னுடைய தொண்டில் வயங்கமினுர் - துன்னுறுசூல்
பன்னளு மாற்றுராய்ப் பாண்டரங்க ஞற்பரைதன்
இன்ன ரருள்பெறலும் யோகுவிடுத் - தன்னர்
நிறங்கொடுபொன் னுடையொடு நீளாயுண் மீசைத்
திறங்கொடொருங் கேயொன்ப தின்ம - ரறங்குலவப்
10 பண்டுமா லுந்திப் பதுமத் தவதரித்த
எண்டிருக்க ணன்போ வினிதுதித்துத் - தண்டைபுனை
அம்மையப்பர் தாடொழலு மாங்கவர்மற் றீங்கிவர்தஞ்
செம்மையறி வாற்றலிசை சேர்மானக் - கொம்மையினைக்
கண்டிவரே கைக்கோட் கலனுடையா ரென்றமலைக்
கண்டர்பிரா னேதவவ ளக்கணத்தே - மண்டு
நெடும்போர் களைகுந்த நீட்ட வவனுங்
கடும்போர் களைவாள் கைதந்து - தொடும்பணியுஞ்
சாற்றவிலக் கத்தவர்பாற் சார்ந்தவரோ டண்டரெலாம்
போற்றப் பரமனுறாஉம் பொறபதியி - லாற்றன்மிகு
15 மெய்க்காவல் கொண்டுசெவ்வேள் வீறுகந்த வெற்பணுகிக்
கைக்கா வலராய்ச்சீர் காட்டுங்கை - யெய்க்காச்சீர்
வித்தகனும் யாழ்முனிசெய் வேள்வி வருந்தகரைப்
பற்றிமுனேற் கூர்தியெனப் பண்ணுங்கை - யிற்றென்
றரும்பிரண வப்பொருளை யாயா வயற்குப்
பெருந்தளைச்சிக் கஞ்செய் பெருமைக்கை - யிருங்கபட
அன்றிற் பெயரோ னகம்பிளப்பத் தாரகன்பால்
வென்றிகொடு வீட்டுவித்த வீரக்கை - துன்றியவன்
விட்டடையும் பாசுபத வெம்படையைக் கந்தவேள்
தொட்டடையு மாறளித்த தூய்மைக்கை - மட்டில்பல
20 வோதனங்க ளாலறவோர்க் குற்றதுணை யாங்கந்த
மாதனத்திற் றேடட்டி மாண்செறிகை-யோதரும்பன்

மானோங் குததியின்மேன் மாருதிபோ லேவிரைந்து
சேனோங்கித் தாவுபெருந் தீரக்கை - யேனோங்கு
நாரசிங்கன் போன்றெண்ணி னாகரைவெங் கண்டடக்கும்
வீரசிங்க னாருயிரை வீட்டுங்கை - கோரசிங்கம்
பல்லாக வாழிலங்கைப் பாதவத்தைப் பாதலத்திற்
செல்லாநிற் பச்சினந்த சேவகக்கை - யெல்லாகுஞ்
சூரன் றனைநேர் சுடர்முடியோ னென்னுமதி
வீரன் றனைவதைத்த வென்றிக்கை - தீரமுறு
காவலரா மெண்ணிற் கனவசுர வீரருயிர்
மேவலற மாயேந்த்ர மீதமர்கை - தாவல்
தசமுகமுங் கொண்டமரர் தம்மையெலா மோட்டுங்
கசமுகனைத் தேய்த்துவிறல் காண்கை - நிசமுனிவர்
ஆனோர்க்கு மெட்டா வருஞ்சிறையி னூடுபடூஉம்
வானோர்க் கபயம் வழங்கியகை - கானோர்க்கும்
எண்ணிழியக் கோலோச்சு மேந்தல்சூ ரன்சபையில்
விண்ணிழிச்சிங் காதனத்தில் வீறுங்கை - யண்ணலன்கோன்
முந்தெதிர்ந்தோர் நீதி மொழிந்தவணின் றேயகல
வந்தெதிர்ந்தோர் தம்மையெலாம் வாட்டியகை - சிந்து
கதமுகனென் றென்னார் கவன்றுபுறங் காட்டுஞ்
சதமுகனைச் சாய்த்தவடல் சால்கை - யிதமனுவுங்
காணாத சூரன்பற் காவலரைக் கட்டழித்துச்
சேணாட விட்டெறிந்த திப்பியக்கை - கோணாய்த்
துடித்துயிர்கள் மாளச்சீர் தின்னுநகர் யாவும்
இடித்ததர்க ளாக்குமிடி யெய்கை - பிடித்தல்விடாச்
சோகுகளைப் பல்விதித்த தோற்றுமெனச் சார்சகத்ர
வாகுகளை யோர்நொடியுண் மாய்த்திடுகை - யூகன்
கடைக்கால்வெந் நென்பைமேற் காண்சிகரி நாட்டி
நடைக்கா லனினடிக்கு நன்கை - படைக்கால்வெவ்

35 வாளிமுகம் பல்கோடி வந்துறினு மஞ்சாத
ஆளிமுக னைச்செற்ற வாட்சிக்கை - பாளியுறு
பந்தரிற்சிங் கானனற்கும் பாகடுதோ லானனற்கு
மைந்தரிரு வோரை மடிக்குங்கை - சிந்துவினில்
வாகா ரிரணியனை வாட்டித் தூரத்தியுக்ர
மாகாளி யைத்தொண்டில் வைத்திடுகை - தீகான்
முகனனுப்ப வந்தவையை முன்னேத்தி நிற்ப
இகலவனை வாட்டிவைத்த வேண்கை - துகளிற்
புகலுடைய தம்பியரைப் பொன்றுவித்த கூற்றன்
விகலமுற வோலை விடுகை - பகலவர்பல்
40 லாயிரவர் போலமரேற் றூடுஞ்சூர் மைந்தர்கண்மூ
வாயிரவர் தம்முயிரு ணுற்றற்கை - மாவிரவு
கொண்டரிகண் டர்க்குமறக் கோபனைக்கொன் றிட்டவன்பாற்
புண்டரிகந் தன்னைக்கா புண்ணியக்கை - யண்டரிய
பாபனைவாட் கொண்டழிக்கும் பான்மையென வேபானு
கோபனைவாட் போரிலொழி கொற்றக்கை - சோபமுறு
நாட்கு விருந்தாயசிங்க னன்மகார் நூற்றுவரை
வாட்குவிருந் தாக்குவித்த வாகைக்கை - கோட்குரிய
சூரன் பதுமன் றுதிமயிலுஞ் சேவலுமாச்
சாரவேட் கூர்திதுவ சம்புரிகை - கோரஞ்செய்
45 தீங்கைப் பறித்தலெனத் திண்சூர் விமானமிசை
வேங்கைக் கொடிபறித்து வேயுங்கை - மூங்கையரின்
மன்னு சிறையிருந்த வானவரைப் பெண்டிரொடும்
பொன்னுலகி லேற்று புனிதக்கை - தன்னிகரின்
மாமனுவின் றன்குலத்து வண்டமிழு நல்லறமுஞ்
சேமமுற வந்துலகாள் செம்பொற்கை - யேமவுல
காயிழையா ராதித்த ஞர்குடியிற் றோன்றிடவச்
சேயிழையா ரைமணந்த செல்வக்கை - நேரிழையார்ச்

சீரோ டுலகாள் சிரைமுகற்குத் தம்படைகொள்
பேரோடு பெண்கொடுத்துப் பேணுங்கை - போரோடு
கொள்ளையினுற் காலன் குடும்பினிகொண் டுற்றிருந்த
கிள்ளையினை மீட்டபெருங் கீர்த்திக்கை - பிள்ளையினைத்
தந்தான கம்போற் றழையுங் குடநாட்டுச்
சந்தான மாமகட்குத் தந்திடுகை - யுந்து
சிலையாற் கனிகாய்க டேடிப் பதினெண்
மலையாளம் வென்றுகொணர் மாண்கை - தலைநின்
றுலாசுரர்கோன் றுன்பை யொழித்தவற்கு வெற்றி
வலாசுரனை வென்றளித்த வன்கை - யெலாசுரரும்
வீசனமாட் டிப்பணியின் மேவவிணு வீயமுதப்
போசனமாட் டுற்றருந்தும் பொற்புக்கை - மாசனங்கள்
ஒத்தவிட மென்றறவோ ரோதுமா ரூர்முதலாஞ்
சத்தவிடங் கங்கள் சமைத்திடுகை - யித்தரையில்
எண்ணில் சிவாலயங்க ளெண்ணில் குகாலயங்கள்
எண்ணில் சுராலயங்க ளேற்றமைகை - விண்ணினலார்
தம்பாலோர் நூறு தவிருமீ ராயிரவர்
பம்பாநிற் பப்பயந்த பாக்கியக்கை - சம்பாவார்
தோன்றி வதிதருஞ்சீர்த் தொண்டைநா டாதியபல்
லான்றபெரு நாடனைத்து மாளுங்கை - சான்றவராற்
போற்றப் படுங்காஞ்சிப் பொன்னகர்முன் னுப்பலவாச்
சாற்றப் படும்புரங்க டாங்கியகை - யாற்றலொடு
மூவேந்த ரும்புகழ மொய்யேழெண் டேயம்வென்று
வேவேவி யேதிறைகொள் வீமக்கை - தூவேறு
வேதண்ட மாதியவெண் வெற்பிற்றங் கீர்த்தியினை
மூதண்ட மெட்டவிடு மொய்ம்புக்கை - தீதண்டா
வாறு புவிமுழுதும் வாழ்விப்பா னெண்டிக்கும்
மாறுபடாச் செங்கோலை வாங்குங்கை - வீறுறுநாற்

சேனைத் தலைமை திகழ்மந்தி ரத்தலைமை
யேனைத் தலைமைபல வெய்தியகை - வானை
வசாங்க மெனவாக்கி மனுகுலத்து மோங்கித்
தசாங்க மிருவகையுஞ் சார்கை - நிசாங்கர்
65 பரவும் வடவனத்தெம் பண்ணவனோ டாடும்
உரவையைப் பொற் றாளுரி யொண்கை - விரவுகொடு
மாலு மயனு மருவறியான் பாற்பழிக்குச்
சாலச் சிரமளித்த சால்புறுகை - வேலன்
கழல்பரவு மோர்முனியைக் கைதவஞ்செய் வேதற்
றொழுலுரியா ரைக்கடிந்த தொல்கை - யுழலகிலா
நேர்முறு சம்பாதி நீண்முத்தி வீடுபெற
ஆரமுத மீந்தளித்த வாரருட்கை - யீரமுறு
சோழரா சேந்திரன்றன் றொல்பகையாய்நின்றமர்செய்
ஈழாரா சன்றனைவென் றின்புறுகை - வேழம்
70 தரணியிற்பல் சூழ்கலிங்கஞ் சார்ந்தமரேற் றன்றோர்
பரணிசொலச் செற்றொழித்தல் பண்கை-யிரணியநேர்
செய்யக்கோ மாடங்கள் சேர்தேய மாளுடைய
வையக்கோன் றன்னை வதைக்குங்கை - துய்யர்செறி
குச்சரனை மச்சமுறு கோனைவெங்கண் டாங்கவர்தம்
உச்சினிமுன் றும்பதிக ளூற்றிடுகை - நச்சரவக்
கையானி லோங்கிப்பல் காதுசெயும் வெய்யசிறைக்
கையா னுயிர்தொலைத்த கங்கணக்கை - நெய்யாடிக்
கங்க முமிழ்கணைகள் கைக்கொண் டமரில்வரும்
வங்க வரையனுயிர் வாட்டுங்கை - யெங்குநிகர்
75 இல்லா வுரங்கொண் டிறுமாந் தடல்கொளுமோர்
வல்லானை வென்றின்பால் வைத்தருள்கை-யெல்லார்ந்த
வம்பரநே ரம்பலமா டார்தில்லை மாகாளிச்
செம்பலநேர் தேரோடச் செய்திடுகை - யும்பர்தொழு

நாவலூர் நம்பியெனு நாரையூர் நம்பியெனு
மேவுமிரு நம்பியரான் மெச்சுங்கை - சேவினன்றன்
ஆதிரைநா ளெண்ணி லடியவர்க்குப் பொன்னூறு
தீதிரிய வேயளிக்குந் தேசிகக்கை - கோதிறமிழ்க்
கோவைபல தம்பெயராற் கூறிமூ வேந்தரிடந்
தேவைபொருள் கொண்டுபணி தேடுங்கை - பூவைகர
வன்றொண்டன் வேதண்ட மன்னுமூனே யோகாற்ற
மன்றொண்டை யாங்குகைத்த மாண்புறுகை-யொன்றான்
பொரவிளைத்து வஞ்சவாட் புத்தகம்போ திப்பான்
வரவிளைக்கா தாருயிரீ வண்கை - யிரவிகுல
மன்னு யுலகோம்பி மாநிதியச் சாலைதிறந்
தென்னுதன் றொண்டர்கொளக் கிட்டிடுகை-மின்னார்பொன்
அம்பலவன் றாட்டுணையை யாயுமணி முடியாய்
நம்பியணிந் தேயுலகா ளுயகக்கை - யம்புவியில்
வெள்விடையோற் காமலரை வீழ்த்தியதும் பிக்கையறக்
கொள்விடைகூ றும்பாசாற் கொய்திடுகை-யெள்ளிடைநெய்
வாக்கி விளக்கெரிக்கும் வான்பணிமுட் டச்சிகையைத்
தேக்கி விளக்கெரித்த திண்மைக்கை - நோக்கில்
குறையை யமணர்கொளக் குண்ட மெடுத்து
நிறைபுனல்செய் திட்ட நிமலக்கை - மறைநெறியின்
மூவா யிரமறுவை முல்லையா னுக்கைபுக்கு
நாவா லினிதுரைத்த நன்னயக்கை - யோவாமல்
உய்தொழிலே தென்ன வுயர்குறள்சொல் வள்ளுவற்குச்
செய்தொழில்கற் பித்தமைத்த சேட்டக்கை-மெய்தொழிற்சீர்
எய்த்தலையாச் செம்மைகொளு மேலேல சிங்கற்கோர்
மெய்த்தலைதந் தாதரித்த மேன்மைக்கை-பொய்த்தலிலார்
எத்தலைச்செய் பாண்டி யெழினாட்டுச் சங்கமுறாஉஞ்
சீத்தலைச்சாத் தற்குதவு செம்மைக்கை-நாத்திகஞ்சொல்

திக்கார் வெருளச் சினவாளை யேந்தியொற்றிச்
செக்காருக் குற்றபழி தீர்க்குங்கை - பொய்க்காவல்
கொண்டறங்கை விட்டவயன் கூருறுப்பி லுற்பனஞ்செய்
அண்டர்முனோர் போலா தமைந்துறுகை - கண்டம்
இருளனையான் வாண்முகத்தோ ரேய்ப்பவவ னுள்ளப்
பொருளனையா ரெண்புகழ்கொள் பொற்கை - தெருள்பெருகு
விண்டலமு மண்டலமு மேனாட்செய் திட்டதவப்
பிண்ட மெனவுலகு பேசுங்கை - பண்டனத்தும்
ஈகையறு மூவேந்த ரேத்தப் பனையிற்கோல்
ஓலையொடு கட்டிநட்டோ டோங்குங்கை - சாகை
உருமாறிப் பொய்யாத வொண்காஞ்சி யூடே
கருமாறிப் பாய்கற்ப கக்கை - திருமாறிப்
போவான் குலவழக்கிற் பொய்ப்பாரா ரேனுமன்றே
சாவானு யாவிவிடுந் தாட்டிகக்கை - நோவான்
மிகத்தூண்டத் தங்குலச்சீர் விட்டவரை யுந்திண்
நுகத்தூண்பாய்ச் சிக்கொல்லு நோன்கை - யகத்தூடு
வற்பழியாப் பெண்டீர் வயதா மளவுந்தங்
கற்பழியாச் சீரில் வைக்குங் கண்ணியக்கை-யிற்பழிக்கும்
நாண்பண்ணா லன்றியெம நம்பன் றிருத்தொண்டை
யாண்பெண் ணடங்கலுஞ்செ யம்பொற்கை - மாண்பண்ணு
சோதிக் கறுமுகற்குத் தோன்று லயத்தரும
ஆதிக்கம் பெற்றே யமையுங்கை - வீதிக்குட்
சார்பாதா ரக்காட்சி தந்தருளும் போழ்தெல்லாஞ்
சீர்பாதந் தாங்கு சிரேட்டக்கை - நேர்பாத
தாடனத்தா லெம்மான் றனையவன்றன் சின்னத்தைத்
தூடனத்தாற் காய்வாற்காய் துங்கக்கை - பீடனமொன்
றில்லாச் சிவாலயச்சார் பெங்கேயங் கேமடமென்
சொல்லார் வளாகமதிற் றுன்னுங்கை - யொல்லை

105 யிருவகையி னூடு மிழிவருணர் போலா
தொருவகையி னூடு முயர்கை - தருவகையிற்
றேவரில னென்றெடுத்துச் செப்புமுற்பா வைம்பொருளுந்
தாவநெறி யாற்றரூஉந் தங்கக்கை - மேவு
பிறவியினா டேகுலச்சீர் பேணி யிருமைப்
பிறவியினா டொல்காப் பெருங்கை - மறைமுதல
ஓதுவித்த கத்தொழிலை யுற்றுமடைந் தார்க்கவற்றை
ஓதுவித்து மந்தணச்சீ ரொன்றுங்கை-பூதமுனாய்
வேட்டுவித்த கத்தொழிலை வேட்டுமடைந் தார்க்கவற்றை
வேட்டுவித்து நல்லிசைகொள் வேதனக்கை-சேட்டமுறும்
110 உத்தராசை வத்தீக்கை யோடுசம யாதியவாம்
முத்திறத்தீக் கைப்பரவு முத்திரைக்கை-யொத்துவரும்
ஆதுலர்பா லீத லறப்புரிந்து மற்றவர்பால்
ஏதுகொடேற் றேந்தல்கொளு மேகக்கை - போதுகொடு
வாதவூ ரெந்தைமணி வாசகமுன் னாயதமிழ்
வேதபா ராயணஞ்செய் விற்பனக்கை - யோதுபுறச்
சட்சமயம் பாறவெணில் சார்சமயம் வீதலுற
உட்சமய மாறினையு மோம்புங்கை - தட்சணமெண்
பின்னங் களையுமணி பீடுறுநீ ரூதிசிவச்
சின்னங் களைவிருத்தி செய்யுங்கை -மன்னுபாற்
115 போற்று சரியைமுனாம் பொய்தீ ரொழுக்கமெனச்
சாற்றுநெறி நான்கினுளுந் தாழ்விற்கை - தேற்றமுறு
நேமங்க ளாற்றேவர் நேர்தேசிகர் முன்னாம்
நாமங்க ளையணிந்த நான்மறைக்கை - வாமவிருக்
கோதிவேட் டாருலகை யோம்பிப் பகைகளைந்து
நீதி யரசச்சீர் நிறுத்துங்கை - மாதவர்பால்
ஓரொன்பான் புண்ணியங்க ளோயா தியற்றியமர்க்
கீரொன்பா னாயுதங்க ளேந்துறுகை - சாருங்

குடைகொடிதேர் பீலிநரை கொள்தோ ரணமுன்
படையுடையுஞ் செம்மையிற்கொள் பைங்கை-யடையலர்தங்
கோரக் கலிக்களத்திற் கூறுபுலித் தண்டையொடு
வீரக் கழற்கால்கொள் வெற்றிக்கை - நேரும்
அறமாதி நாற்பொருளு மாய்கலனுப் பூண்டு
மறமா தியவொழிக்கு மாக்கை - திறமாக்கோ
பாலெட்டுங் கண்ணோடைப் பார்த்தருளி மன்பதைக்கோர்
நாலெட்டு மாந்தரும நாட்டுங்கை - சால
வெருணாச் சிரமமென மெய்யோம்பி யாண்டும்
வருணாச் சிரமமதி வான்கை - தெருணாடாத்
துட்டசன ரெப்பாலுந் துன்னு தழித்தகற்றிச்
சிட்டசன ரைக்காக்குஞ் சீர்சால்கை - யட்டதிக்கும்
தேருமன்ன ரென்பெயருந் தேர்தலைவ ரென்பெயரும்
கூறுமுறை யாலணிசெங் குந்தக்கை - பேறுதரு
வேதமொடு வேள்வி விழைந்துபொரு ளீட்டியான்
நீதமொடு காத்தித னேருங்கை - பாதகநேர்
வெய்யதொழி லாமுழுதல் வேண்டா தறம்வளர்க்கும்
துய்யதொழி லாநெய்த ரோயுங்கை - யுய்யநிதம்
மூக்காற் பொருநியம முட்டா வகைநிறுத்தி
எக்காலு மெய்ப்பிரேழி லேற்குங்கை - சொக்கை
உரியார்க்கு மேனை யுறுகணா ளர்க்குஞ்
சரியா நெறித்தொழிலுட் டாழ்கை - கரியாய்வீ
ஊனங்காக் கும்முயிரை யோம்புதொழி லுணவபி
மானங்காக் குந்தொழிலே மன்னுங்கை - யினமுறு
திண்டார்த நேயச் செறிவின்றி மெய்யுறவு
பூண்டாரோ டாடுதொழில் பூணுங்கை - சேண்டருதீ
வெய்யின் மழைபனிகால் வீசான் மெலியாமே
துய்ய நிழலுழிரேய்ச் சுத்தக்கை - பையமில்சிர்க்

கல்விபெருங் கேள்வி கனந்தனநற் றனதன்மம்
வில்விஞ்ஞா னஞ்செய்தொழின் மேவுங்கை-புல்சருகால்
அங்கிகொள லன்றியுயிர்க் கண்ணுறிற்கோடெறிந்தூண்
பொங்கியுண லாந்தொழிநீர் புங்கக்கை - துங்கமில்புன்
சூழ்மாந்து வோர்க்குங் குறைவிலாக் கொற்றவர்க்குஞ்
சூழ்மானக் காவறொழிற் சூழுங்கை - தாழ்வின்மிகு
கட்பணத்தி னுஞ்சசியாற் காண்பணமே மிக்கதெனப்
பெட்பினொடு மேற்றதொழில் பெற்றுயுங்கை - நட்பிலுறு
தென்புலத்தா ராதியர்க்குச் செய்மகமோ ரைந்தினைத்தம்
இன்புகொடு செய்தே யிமைக்குங்கை - துன்பில்
தயாவிருத்தி யெட்டாற் றகுபோக மெட்டும்
வியாதமின்றி யோங்கு விமலக்கை - நியாதமுறு
நற்குணமோர் பத்தினையு நாடிமற்றோர் பத்தாகும்
துற்குணத்தை நாடாத தொன்மைக்கை - நிற்கும்
உபகார மீரே ழுயிர்க்குடற்கு மோம்பி
அபகாரம் யாண்டுமெண்ணு வங்கை - சுபகாரம்
மொய்செயற்சீர் மாறாத மொய்ம்பு கொடோர் பத்தாகும்
வைசியர்ச்சீர் மாறாத வண்மைக்கை - மெய்சிரவர்
ஏத்து முதலியரென் றேதலைமை நாமத்தாற்
றேற்றியெணுந்திக்கினுஞ்சொல்சேட்டிமைக்கை - யாற்றலுறு
காந்த மிரண்டிற் கதிரிற் பொலிவுறாஉம்
ஏந்தல்கொடு நின்றோங்கு மேமக்கை - வேந்தனென
எண்ணி லிலக்கணங்க ளெண்ணி லிலக்கியங்கள்
எண்ணில்பிர பந்தங்க ளேய்ந்திசைகை-நண்ணெண்ணில்
ஆசுகவி யேமுதலா யாய்புலவ ரேத்துபுகழ்
வீசுகவி நான்கியற்றும் வித்தகக்கை - மாசின்மனக்
கண்ணெண்ணற் பாலவாங் காரியங்கள் பல்லோதும்
எண்ணெண் கலையனைத்து மேற்றுணர்கை-நண்ணுசுப

மோடுபமா யோங்கிநா லொன்பான் றனிலோதக்
கூடுகதை யைக்கவியுட் கூட்டுங்கை - நீடு
சிவாகமங்க ளுலேழுந் திண்டவரோ தவ்வெண்
நவாகமங்க ளும்பெயர்த்தீ நற்கை - திவாகரரில்
எச்சங்கமு மேத்திடைமுன் கடையெனவாம்
முச்சங்கத் தூடு முளைக்குங்கை - யுச்சமிலா
150 தாக்கீழாச் சீவகசிந் தாமணியை யன்றெருறுத்த
சேக்கிழா னுற்பாவு தெய்வதக்கை - மாக்கீழ்முன்
கச்சியப்ப னுறிருச கத்ரகவி யுட்டமசீர்
மெச்சியொப்பின் றுகச்செய் மேட்டிமைக்கை-யுச்சிதமாம்
காவியத்திற் றீங்குபுரி கம்பன் கொடிகாளம்
ஆவியற்றுப் போகச்செ யாண்மைக்கை - மேவுபல
வன்கவிஞ ராரேனும் வாகோடு வாழுவித்துப்
புன்கவிஞப் பூடுகளை போதக்கை - யென்கவிஞத்
தன்மையிற்றென் றோர்ந்துமருட் டங்கைபோ லுள்ளுவந்து
வன்மைவெளி காட்டியாள் வாஞ்சனைக்கை-யின்மைசொலா
155 தாற்றலொடு மிட்டசிர வாதனத்தி லான்றோர்கள்
போற்றவிருந் தீட்டிபுகழ் பூரணக்கை - வீற்றுசிரம்
யாவுந்தத் தம்முடலோ டாகியுயிர்ப் பான்புரிந்து
கூவுமொட்டக் கூத்தனென்பேர் கொள்ளுங்கை-மேவு
குலோத்துங்க னெங்கோன் கொடுத்தவிரு தெல்லாம்
தலோத்துங்க மாக்கொள் தருமக்கை-கலோத்துங்கம்
கண்டவெனு லின்றக் கவினீட்டிக் கைவளநூல்
கொண்டலர்தூ விச்செயச்சீர் கொட்டுங்கை-விண்டலமேன்
மைக்கோள ரும்வாழி வாழியென வேத்திசைக்கும்
கைக்கோள ரற்புதப்பூங் கை.

திருக்கைவழக்கம் முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க

காஞ்சி நாகலிங்க முனிவர் பதிப்பு

# பிள்ளைத் தமிழ்

ஸ்ரீ ஞானப்பிரகாச முனிவர்

மூதண்ட வெற்பன் முளரியடி நெஞ்சகமே
ஓதத் தகும்பொருளென் றோது.

உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை

# பிள்ளைத் தமிழ்

காப்பு

வேற்றொலி வெண்டுறை

மன்னுதிருக் காஞ்சிநகர் வாழுஞ்செங் குந்தர்மிசைப்
பன்னும்பிள் ளைத்தமிழைப் பாடவே—மின்னிற்
குழலிமைந்தன் புழைநெடுங்கைக் குஞ்சரச்செம் பொன்னவிர்க்கும்
கழலிலென்றன் சென்னிவைப்பன் காண்.

## காப்புப் பருவம்

### திருமால்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சீர்மேவு தெண்டிரைப் பாலாழி மீதினிற்
சேடசய னத்தின்மிசையே
செங்கண் டுயின்றுபதி னுலோ கத்தையுஞ்
சீர்பெற வளர்க்குமுகிலைத்
தார்மேவு பச்சைப் பசுந்துழாய் மாலைபுனை
சங்கேந்து செங்கையரசைச்

சததளக் கோவிலுறை திருமலைக் கிரியில்வளர்
சக்ரமா லைத்துதிப்பாம்
தேர்மேவு திருவீதி யேகம்பர் கச்சியுறை
தேவிகா மாட்சியுமையாள்
செய்யசெந் தாமரைப் பாதச் சிலம்பில்வரு
தீரவீ ரியர்கடம்மைக்
கார்மேவு கைத்தல வசந்தத் தியாகரைக்
கந்தவே ளின்றுணைவரைக்
கனமான செங்குந்த முதலிமா ரைத்தினங்
காத்துரட் சித்தருளவே. க

நடராஜர்

வடிகொண்ட வெண்சுதை பணிந்தகோ புரசிகர
மாடமா ளிகைசிறந்த
வளமருவு தில்லைச் சிதம்பர மகாதேவ
வள்ளலைத் தெள்ளுநறவக்
கடிகொண்ட கொன்றையந் தார்முடிப் பரமனைக்
கமலமல ரடிசிவப்பக்
கனகசபை நடனமிடு சிவகாமி நண்பனைக்
கண்குளிர நின்றுதொழுவாம்
அடிகொண்ட செந்தமிழ்க் கவிஞர்கள் சகாயரை
யடைந்தோரை யிகழாமலே
யன்னதா னஞ்சொர்ன தானநல் கும்பெரிய
வருள்தங்கு சிந்தையோரைத்
துடிகொண்ட புகழ்மருவு செங்குந்த வீரரைச்
சரிகைநா ராயணர்தமைத்
தோகைமயி லேறிநட மாடிவரு கந்தவேள்
துணைவரைக் காக்கவென்றே. உ

அண்ணாமலைநாதர்

மிக்கநற வக்கொன்றை தும்பைகூ விளமறுகு
விரிபுனற் குழவிமதியம்
மேவுகோ டீரப்ப ராபரனை யிறையவனை
வேலைவென் றிடுகண்ணனைத்
தக்கதவ மிக்கவுண் ணாமுலைத் திருமருவு
சங்கரனை யண்ணாமலைச்
சம்புவி னடிக்கமல நம்பிநம் பித்தினந்
தாழ்வுகொடு முடியில்வைப்பாம்
உக்கிரமிகு வாதுங்க வல்லானை வென்றவரை
யுண்மைநெறி வண்மைமாறு
வுள்ளம் படைத்தவரை யெள்ளாமல் வள்ளலடி
யோதித் துதிக்குமவரை
இக்கனைய மொழிமாதர் மதனர்செங் குந்தர்தமை
யிலகுமென் மீசையுடைய
எழில்கொண்ட செஞ்சயரை வீரநா ராயணனை
யீண்டுரட் சித்தருளவே. ஜ

தியாகராஜர்

ஐம்புலப் பற்றொழிக் துட்கரண வாதனை
யடக்கிக் கடக்கவரிதா
மந்தா சுழுத்திதுரி யாதீத வெளியிலே
யானந்த நித்திரைசெயும்
தம்பமிகு மறிவுடைய ரிதையநீள் செய்யசெந்
தாமரைக் கோயில்புக்க
தையல்கம லாலயத் தேவியா ரூரிற்
றனிக்கடவு ளைப்பணிகுவாம்
வெம்புபகை யாகவரு சூரசங் காரஞ்செய்
வெற்றிசேர் செங்குந்தரை

மேவுமிகு விருதுடைய வீராதி வீரியரை
வேளனைய வடிவாளரை
நம்பினர்கள் தம்பமென நின்றருள் தியாகரை
நரேந்திரர் மதிக்கவந்த
நாடறிய வேவிலங் கினுநா விலங்காத
நல்லோர்க ளைக்காக்கவே. ௪

சோக்கநாதர்

திரைமருவு கடலுலக மெல்லா மதிக்கவே
சேனமரர் கொண்டாடவே
செய்யசெந் தாமரைப் பாதஞ் சிவந்திடத்
தித்திமித் திமிதியெனவே
வரைமருவு குமரிகவு மாரிமீ னாட்சிமா
மாதங்கி பங்கினுடனே
மாமதுரை யறுபத்து நாலுதிரு விளையாடல்
மகிழ்சொக்க ரைப்பணிகுவாம்
உரைமருவு செந்தமி ழிலக்கிய விலக்கண
முணர்ந்துகரை கண்டோர்களை
ஒடியா டும்புரவி நகுலப்பிர தாபரை
யுத்தமக் குணசுத்தரை
விரைமருவு செங்கடப் பணியும்பு யாசலரை
வெல்சமய முதலியர்தமை
மிக்கான செங்குந்த வீரநா ராயணரை
வேண்டிரட் சித்தருளவே. ௫

திருவேகம்பநாதர்

முத்திக்கு வித்தைச் செழுங்கருணை வள்ளலை
முழுங்குசங் கேந்துகரவன்
முன்னமொரு காலத் தறிந்திடா நின்றதோர்
முதல்வனைக் காசூலனைப்

பத்திக்கு வித்தான காமாட்சி யம்மையுமை
பாகமகலா திருக்கும்
பரமனே கம்பநா தன்றனது விரைமலர்ப்
பாதநா மஞ்சலிப்பாம்
தத்திக் குலாவுமயில் வாகனக் குமரவேள்
தம்பிலட்சத் தொன்பரைத்
தாமரைக் கண்ணனைத் தாமரைப் போதனைத்
தாமரைத் தாளாளரோ
டெத்திக்கு ளுண்டான பாலர்முனி வோர்தம்மை
யிரவுபக லுந்துதிக்கும்
இனியபுகழ் சேர்கின்ற செங்குந்த முதலியர்க
ளெல்லோரை யுங்காக்கவே. ௬

காமாட்சியம்மையார்

ஆரண நான்முகன் மாலவ னிச்சைக்கோர்
வேட்கையைத் தருவாட்கையள்
ஆதி மகேசுரர் பாதபது மத்தினோர்க்
ககமெய்க்க வருள்தேக்குவாள்
காரண காரிய நாதர்பக் கத்திற்சேர்
காட்சியைத் தருசூட்சியாள்
காவெனு மாவடி மாதவக் கச்சி
காமாட்சியைத் தொழுதேத்துவாம்
பூரண மாமுலை மா தரிச் சிக்கவே
பூட்டுமால் விளையாட்டினோர்
போதக மாகிய ஞானவுற் பத்திக்கோர்
போக்குசித மெய்வாக்கினோர்
தாரணி நீபமொய் மார்பர்சுத் தத்தோர்
தாற்குநல் லறமீக்கொள்வோர்
தாருகா சுரனைவன் மார்பிடைக் குத்திப்போர்
தாக்குவீ ரர்க்காக்கவே. ௭

## விகடசக்கர விநாயகர்

பூமேவு நறவம் புனைந்தகோ டீரப்
புராந்தகன் றருபாலனைப்
பொன்னனைப் பொன்னவள் முராரிதிரு மருகனைப்
புங்கவன் கங்கைமகனைக்
காமேவு சேனுடர் தொழுதெய்வ மும்மதக்
கரிமுகனை மறைமுழங்குங்
கச்சியம் பதிவிகட சக்கர விநாயகன்
கமலபா தந்துதிப்பாம்
மாமேவு புனிதத் திருக்கம்பை யாற்றினில்
வருந்தித் தவஞ்செய்கையால்
வந்தருளி யேகம்பர் பாகங் கொடுக்கின்ற
வல்லியபி ராமிகுமரி
தேமேவு பாலுடைய் காமாட்சி பாதத்
திருச்சிலம் பதிலுதிக்குஞ்
செங்குந்தர் பிள்ளைத் தமிழ்க்கவி தழைக்கத்
தினந்தினங் காத்தருளவே. அ

## முருகக்கடவுள்

செஞ்சடைப் பரமனுக் கருள்ஞான மருள்செயுஞ்
சிவஞான குருநாதனைச்
சேவற் பதாகைச் செழுங்கருணை வள்ளலைத்
தெய்வயா னைக்கரசனை
அஞ்சுகக் குறவள்ளி யம்மைமண வாளனை
யடுத்தசுரை வென்றகுகனை
ஆதிவே தாவையுஞ் சிறைகொண்ட சரவணத்
தறுமுகனை யஞ்சலிப்பாம்
பஞ்சவன்ன விருதுபுலிக் கொடிம லரியும்
பார்புகழ வேபடைத்த

பாக்கியசம் பன்னரைத் தேக்குதிறல் வீரரைப்
பரமங்கை யவள்பங்கனும்
கஞ்சமலர் வேதனுங் கண்ணன்வின் ணுடருங்
கண்டுகொண் டாடவந்த
கச்சியம் பதியில்வரு வீரசெங் குந்தரைக்
காத்துரட் சித்தருளவே. கூ

முப்பத்துமுக்கோடிதேவர்

தாரணி மதிக்கவே முப்பத் திரண்டறஞ்
சகலவுயி ருந்தழைக்கச்
சங்கர னளந்துதரு மிருநாழி நெற்கொண்டு
தவிராம லேவளர்த்த
சீரணி பயோதரி கவுமாரி மகமாயி
தேவிபா தச்சிலம்பிற்
செம்மையுட னேவந்து பூமிதனை யாளுமோர்
செங்குந்த ரைப்புரக்க
காரனைய திருமேனி மாயா விநோதனுங்
கஞ்சா சனக்கடவுளும்
கரிமுகக் கணபதியு முருகநற் றேவனுங்
கன்னிமா ரோரெழுவரும்
மூரல்விரி செய்யசெவ் வாய்க்கலை மடந்தையும்
முளரியா லயமங்கையும்
மோதுமலர் சூழ்கற்ப காடவியில் முப்பத்து
முக்கோடி தேவர்களுமே. கo

காப்புப்பருவ முற்றிற்று

## செங்கீரைப்பருவம்

புங்கமிகு தருமனதி கெஞ்சியோ டத்தங்கு
'புனிதைச் சினம்பிறக்கப்
பூவுழக் கியவண்டு காஞெதுங் கிடநின்ற
புள்ளினந் தள்ளியோடச்
சங்கினஞ் சூழ்பழன மள்ளர்தள் ளாடத்
தயங்கிடைக் கடைசியர்குழாம்
தங்கள்செங் கைநெறித் தென்செய்வோ மென்னத்
தனித்தனி கடாக்கள்வெருள
அங்கணவர் தங்களிட வாலைவா யுட்புகுத
வம்புயங் கொய்யுமின்னார்
அஞ்சியோ டக்கமல மிஞ்சியோ டக்கங்கை
யனையகம் பாநதியினில்
செங்கயல்க ளுகள்கச்சி மங்கையுமை வரபுத்திரர்
செங்கீரை யாடியருளே
சேவலங் கொடியாளர் மேவிடுந் தயவாளர்
செங்கீரை யாடியருளே. க

இந்திரன் முதற்றேவர் யாவருங் கயிலைமலை
யிறைவன்முன் னின்றுசூரன்
இகலிற் படும்பா டனைத்தையு மொழிந்திடநம்
மீசனு ருளமிரங்கித்
தந்திடு நுதற்கண்ணி னழலெழுப் புஞ்சுடர்
தனைக்கண்டு பார்வதியுளம்
தனிலஞ்சி யோடவவள் பாதச் சிலம்பிணைகள்
தாக்கநவ மணிகள்சிதறப்
பைந்தொடி மடந்தையர்க ளொன்பதின்ம ராகியே
பரமனைக் கண்டவுடனே

பரிவுகொடு கெர்ப்பமாய் விரவா குலினுடன்
பண்பாக வந்துதோன்றிச்
செந்திரு விளங்கவே வந்தலட் சம்வீரர்
செங்கீரை யாடியருளே
சேவலங் கொடியாளர் மேவிடுந் தயவாளர்
செங்கீரை யாடியருளே. ௨

பாரமா கியநெடுங் கிரவுஞ்ச கிரியிலே
பயில்தாரு காசூரனைப்
பங்கப் படுத்தியவ னைச்சயங் கொண்டபின்
பார்தொழு மயேந்த்ரபுரியில்
கோரமா கியவேம கூடத்தி னிற்சென்று
குழுவினொடு பாதவீரன்
கொக்கரித் தங்கணைசை யாதகம் பந்தனைக்
கொட்டமிட் டுப்பிடுங்கி
ஆரவா ரத்துடன் மீளவந் தக்கணத்
தடர்பூத படைகூட்டியே
அறுமுகக் கடவுள்முன் னேறுமவர் சேனைக
ளடங்கலு மடங்கவென்றே
தீரனு கியசூர சங்கார வீரியர்கள்
செங்கீரை யாடியருளே
சேவலங் கொடியாளர் மேவிடுந் தயவாளர்
செங்கீரை யாடியருளே. ௩

முழுமதித் திருமுகக் கலைவாணி கேள்வனு
முராரிநெடு மாமாயனும்
முட்டவெட் டுத்திக்கி லுண்டான பாலரொடு
முனிவோர்க ளோரெழுவரும்

பழுதிலா இத்தர்பன் னிருவருஞ் சோமனும்
பகர்கருட காந்தருவரும்
பங்கய முதற்றெய்வ மங்கையர்க ளனைவரும்
பன்னுகன் னியரெழுவரும்
தொழுதகை மாறாது சூரனுக் கிவ்வகைத்
தொழில்புரிந் தறமெலிந்தே
துக்கப் பெருங்கடலில் மூழ்கிவெகு காலஞ்
சுழன்றுழன் றயர்வோருடன்
செழுந்தருவி னீழல்வாழ் தேவர்சிறை மீட்டோர்கள்
செங்கீரை யாடியருளே
சேவலங் கொடியாளர் மேவிடுந் தயவாளர்
செங்கீரை யாடியருளே. ௪

வீறான செல்வமுங் கல்வியுங் கேள்வியு
மிக்கபொறை யுந்தருமமும்
விதரணிக வாண்மையும் பெருமையுஞ் சீலமும்
மேவலரை மிகவெல்வதும்
பேறான காரியஞ் செய்வதும் மாதவப்
பெரியோரை நேசிப்பதும்
பேருலகி னுனுகவி வாணர்புகழ் கொள்வதும்
பிரியாத மனவலிமையும்
பாறான வேல்தொட்ட முருகனைப் பரமனைப்
பங்கயன் முதற்றேவரைப்
பல்காலும் வலம்வந்து திரிவதும் பணிவதும்
பல்லுயிர்க் கிதமுறுவதும்
சீறான கருணையும் பெற்றுமிக் கானவர்கள்
செங்கீரை யாடியருளே
சேவலங் கொடியாளர் மேவிடுந் தயவாளர்
செங்கீரை யாடியருளே. ரு

வேறு

கந்தர மேடையி லுந்தலு மாமயில்
கண்டே நின்றாடும்
கஞ்சமு லாவிய நீள்வயல் மேவு
கரும்பொ டிரும்பானல்
கொந்தலர் வாழையு மாவொடு பாகல்
கொளுங்கனி யின்றேறல்
கொண்டு மலர்த்திரி வண்டுகள் பாடிக்
கொம்பா ருஞ்சோலை
அந்தர மேவிய வும்பர்க ளூர்புக
வண்டர்கள் கொண்டாட
அம்புய மேலன நின்று குலாவி
யசைந்தா டுஞ்சீரார்
செந்திரு மேவிய தொண்டைநன் னாடர்கள்
செங்கோ செங்கீரை
சேவக வேலவ னார்துணை யானவர்
செங்கோ செங்கீரை. ௬

உச்சித நாவல ரிச்சைகொள் நீள்பொரு
ளீந்தா வென்றேதான்
ஒப்பொடு நீடிய கைத்தல மேன்மைய
ரோண்கா வின்சீரார்
அச்சமில் மேவலர் கைச்சிலை வாளொடு
மங்கை திண்டாட
அக்கண மேபொரு மிக்கவல் லாண்மைய
ரன்பார் நண்பாளர்
வச்சிர மாமணி யுச்சித தோளினர்
வம்பா ரும்போதார்
மைக்கண்மின் னார்தொழு மிக்கவில் வேளென
வந்தோ ரந்தாதார்

செச்சைகள் மேவிய கச்சிவ ரோதயர்
செங்கோ செங்கீரை
சேவக வேலவ ஞர்துணை யானவர்
செங்கோ செங்கீரை. எ

அயிலைப் பொருவிழி மயிலொப் பணையவ
ரன்பா மின்பூறல்
அதனைப் பருகிய மதனைப் பெனவரு
மஞ்சா வெஞ்சூரர்
எயில்முப் புரமெரி நகையிற் கினியவ
ரென்றே கொண்டாட
எழில்பெற் றிடுபல திறமைத் தயிரிய
ரஞ்சா நெஞ்சாளர்
பயில்வித் தைகள்பல முயல்வித் தகர்மலர்
பண்பா ருந்தாதார்
பழகிப் புனைபுய மழகுற் றவருமை
பங்கார் நண்பானோர்
செயல்பெற் றுயரிய கயிலைக் குரியவர்
செங்கோ செங்கீரை
சேவக வேலவ ஞர்துணை யானவர்
செங்கோ செங்கீரை. அ

மாலா கியமட மானார் விரகினர்
மற்புய சற்காரர்
வாரா நீபமொய் தாரார் மார்பினர்
வச்சிர மணித்தோளர்
மேலா மறிவினர் நாலா கலைவலர்
வித்துவ சனர்க்கானோர்
வீறுய் மருவலர் மார்பா ணியர்நெடு
மிக்கவ னப்பானோர்

பாலா கியகுண மேகூ ரறிவினர்
பத்தி மிகுத்தோர்கள்
பார்மே லரசெதிர் தோலா விருதினர்
பற்குண னெப்பானோர்
சேலார் வயன்மலி பிரமா புரியவர்
செங்கோ செங்கீரை
சேவக வேலவ னார்துணை யானவர்
செங்கோ செங்கீரை. கூ

பாடக மேவிய தாளா னட்டிய
பைம்புய மலையாட
பங்கய மாமுக வெங்கதிர் வேர்வது
பனிமுத் தெனவாட
நாடக மாடிய தாளணி கிண்கிணி
நற்குர லிசையாட
நறுமலர் நீபமொய் தெரியல்பொன் மார்பினி
னறவு பொழிந்தாட
நீடிய குழையணி குண்டல மணியதி
னிகழ்கதி ரொளியாட
நிலைபெறு மழகிய மணிதிக ழரைஞா
ணிலவொளி யெனவாட
ஆடக மாமலை யேநிக ரானவ
ராடுக செங்கீரை
யாவரு மாமென நாவிலங் காதவ
ராடுக செங்கீரை. கo

செங்கீரைப்பருவ முற்றிற்று

## தாலப்பருவம்

பொருநீர் வயலில் வரிவாளை பூக
மடலிற் குதித்தேறிப்
பொற்பார் பழுக்காய் குலையூடே பூமி
மிசையிற் பலகோடிச்
சொரிமா ரிகள்போ லுதிர்படுத்துந் துள்ளி
முகிலைப் பொள்ளெனவே
துளைத்துக் கிழித்து விளையாடிச் சுரர்பொன்
னுலகி லனைவோரும்
வெருவாய் மருளப் பாய்ந்துபின்னும் வேரி
மலர்கற் பகமுழக்கி
மீண்டுங் கழனிப் புனல்மூழ்கி மேவும்
புகழ்சேர் கச்சிநகர்
வருமா மதவே ளெனச்சிறந்த வல்லோர்
தாலோ தாலேலோ
வணங்கா முடிவல் லானைவென்ற வல்லோர்
தாலோ தாலேலோ. க

சிந்துந் திரைநீ ரோடைதொறுந் திரளுங்
கருமே திகள்கோடி
திமிதி யெனச்சென் றடைபோதிற் சிறுகன்
றெனவே வரிவாளை
முந்தி முடுகி மடிதடவி முலைப்பால்
குடிக்கி லம்முலைப்பால்
மோதுங் கடல்போற் பெருகிநறு முளரி
வயலிற் கால்பாயக்
கொந்து மலர்செண் பகவனத்திற் குலாவிப்
பலமா மரத்தேறிக்

கொம்பிற் கனியைக் கவர்ந்திளநீர்க் குலைக
ளுதிரப் பாய்ந்தேறி
மந்தி குதிக்குந் திருக்காஞ்சி வாழ்வோர்
தாலோ தாலேலோ
வணங்கா முடிவல் லானைவென்ற வல்லோர்
தாலோ தாலேலோ. உ

கானக் குயில்சேர் மொழிமாதர் கனக
மணிமா மேடையின்மேல்
கதிர்சூழ் மணிக்கோ புரமுடிமேல் காரா
ரரசர் செச்சைகள்மேல்
மீனத் திரள்போல் முத்துமணி மிளிரும்
புரிசைத் தலையதின்மேல்
விளங்கும் பளிங்கு மண்டபமேல் வீதித்
திருத்தே ருச்சியின்மேல்
தானத் தருமச் சாலைகள்மேல் தங்கு
மறையோர் மாளிகைமேல்
சங்கத் தமிழோர் மாமனைமேல் தரிக்குந்
துகிற்பூங் கொடிகள்சென்று
வானத் தளவும் வளர்காஞ்சி வாழ்வோர்
தாலோ தாலேலோ
மயில்வா கனத்தோன் றுணையாக வந்தோர்
தாலோ தாலேலோ. ௩

வீசுந் திரைத்தெண் ணீர்க்கமலம் விரிக்குங்
கடல்சேர் புதுப்பூவும்
விரைசேர் செந்தா மரைப்பூவு மிகுத்த
வனச்செண் பகப்பூவும்

தேசு வளர்குங் குமப்பூவுஞ் செழிக்குங்
குடமல் லிகைப்பூவும்
தேனூர் சாதி மருப்பூவுஞ் செறிமட்
டவிழ்முல் லையின்பூவும்
காசு மடற்கே தகைப்பூவும் கழுநீர்ப்
பூவும் பலபூவும்
கைக்கொண் டேந்திச் சிறியதென்றல் கனக
மணிமா ளிகைதோறும்
வாசம் பரப்புந் திருக்காஞ்சி வாழ்வோர்
தாலோ தாலேலோ
மயில்வா கனத்தோன் றுணையாக வந்தோர்
தாலோ தாலேலோ. ௪

உளமா தவனப் பெருவகைபோ லொற்றைத்
திகிரித் திருத்தேர்மேல்
ஓட்டி நடத்தி வரும்போதி லோங்கு
திருமே னியின்வெயர்வின்
களங்கு தெளியத் துகிலேந்திக் கையால்
வீசுந் துகிற்கொடிகள்
கமுகு பழுக்காய்க் குலையேந்திக் காணப்
புதிய தெங்கிளநீர்
கொளுதற் கமர ரெதிரேந்திக் கொடுப்பத்
திருப்பூ வனங்களெலாம்
கொய்யு மலர்கள் தினந்தினமுங் குலவிச்
சொரியும் புவியிலிந்த
வளம்பெற் றுயருங் கச்சிநகர் வாழ்வோர்
தாலோ தாலேலோ
மயில்வா கனத்தோன் றுணையாக வந்தோர்
தாலோ தாலேலோ. ரு

வேறு

செங்கம லாலய மங்கை யுலாவிய
தேரூர் சீர்வீதி
செண்பக மேவிய விண்படர் சோலைகள்
சேர்பூ வார்பானல்
குங்கும மாமுலை தங்கிய மாதர்கள்
கூர்வேல் சேர்பார்வை
கொண்டவர் நாடுதல் கண்டடர் சேல்பல
கூடா தேயோடும்
பொங்கிய நீர்மடு வெங்கணு மேவிய
பூநீ ரேபாயும்
பொன்கன மாமணி தண்டிரை யாலெறி
பூமா தேசேருஞ்
சங்கரி பூசைசெய் கம்பைநல் லாறினர்
தாலோ தாலேலோ
தரணியுண் மால்திரு மருக சமேதர்
தாலோ தாலேலோ. ௬

துதிசெயு நாவலர் விதிமுறை பாடல்கொள்
தூயோர் மாயாதார்
துகளறு நீபமென் மலரணி தோளினர்
தோலா மேலாளர்
கதிதரு தாரணை முதிர்சிவ யோகியர்
கார்போ லீவோர்கள்
கனபெரு வாழ்வின ரனகனை நேர்பவர்
காணு மாணுளர்
மதனவ சீகர ரிதமுறு வாசகர்
மாறு வீறுளர்
வலியகை வேலவ ரிலகுச கோதரர்
மாதவ ராஞேர்கள்

சததள மாதுறை நிதிதிகழ் மார்பினர்
தாலோ தாலேலோ
தரணியுண் மால்திரு மருக சமேதர்
தாலோ தாலேலோ. எ

புகலுறு வாய்மைகள் தவறுசெய் யாதவர்
போரே றனோர்கள்
புகர்முக வானையி னுதையம தானவர்
பூமே லாள்மார்பர்
நகைமுக மேவிய சுமுகனை நேர்பவர்
நாணு மாணுளர்
நமனைவெல் தாளினர் தமைமற வாதவர்
நாகார் நாடாள்வோர்
சுகமொழி மாதர்கள் வெருமயல் கூர்பவர்
சூர்மா வேரோடே
சுருள்பட வேல்விடு முருக சகோதரர்
தோலா மாவீரர்
சகலக லாதிபர் முககம லாலயர்
தாலோ தாலேலோ
தரணியுண் மால்திரு மருக சமேதர்
தாலோ தாலேலோ. அ

மருமலர் நீபமொய் திருமணி மார்பினர்
மாறே கூறுதார்
வலதமிழ் வாணர்கள் புகழது மேவிய
மாவீ ரியதீரர்
திருவளர் வேதியர் கலிகெட நீடிய
தீரா வீறுளர்
சிவகண பூசைகள் மனதய வொடுசெய்
சீமா னார்மார்பர்

விருதா சாள்பவர் சமுகவ சீகரர்
வேள்போ லேளுபர்
விகடவொன் ஞர்முடி மகுடம தேறிய
மாமே லூர்தீரர்
தரும தயாபரர் குருவடி நேசிகர்
தாலோ தாலேலோ
தரணியுண் மால்திரு மருக சமேதர்
தாலோ தலேலோ. கூ

தாலப்பருவ முற்றிற்று

## சப்பாணிப்பருவம்

செங்கடம் பணிகுடுமி யுச்சிக்கு நாசிச்
செழுங்குவளை யிருவிழிக்கும்
சீர்கொண்ட மெய்க்குநெய்க் காப்பிட்டு வளரத்
திருத்தாள்கை நீவிவிட்டுக்
குங்குமப் புனலாடி மிருகமத புனலொடுங்
கோதிலா வளகமாட்டிக்
கூறரிய பட்டாடை யாலுடல் புலர்த்திக்
குலாவிமடி மீதிருத்திப்
புங்கவீ திட்டுத் தரைக்காப்பு மிட்டினிய
புழுகுசவ் வாதுமிட்டுப்
போதவெண் சங்கில்நெய் பால்விட்டு ளன்புகொடு
பூரிக்க வேபுகட்டிச்
சங்கரி யெடுத்துமுத் தாடவளர் கெம்பீரர்
சப்பாணி கொட்டியருளே
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. க

விரைமடல்கள் செறிகின்ற தென்னைவன மொருகோடி
மேல்வளர்ந் தேகிவிண்ணின்
மேவியட ருந்தருப் பூமலர் சொரிந்துமணம்
வீசுகொலு வேந்தன்மகிழும்
பிரசமொழி யுறுகச்சி பெண்ணரசி யுடனின்று
பெருமைகொடு நடனஞ்செயும்
பேடைமயில் வானரம் பையரிளைப் பாறவே
பிரியமோ டிளநீர்தர
இரவிரத சாரதி செழுங்கமல கரமது
மிளைப்பாற நற்றுகில்களால்
ஏந்துகொடி வீசியவ னும்பரி நடத்திட
விருக்குந் திருக்காஞ்சியார்
தருவனைய கரசுமுகர் வரகுமரி தருபாலர்
சப்பாணி கொட்டியருளே
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. உ

பகலவ னுதிக்குமொளி கண்டுவிண் டொருகோடி
பங்கய முறுக்கவிழவே
பச்சைப் பசுந்தே னதிற்பெருக் கோடியே
பன்னுசெந் நெற்பணைதொறும்
அகல்கட லெனப்பெருகி யோடவரு கேநிற்கு
மன்னப்பெ ரும்பெடையெலாம்
அழகுபெறு சங்கினைக் குழவியென வேயணைத்
தணிகொள்சிற கால்மூடவும்
புகலரிய கடைசியர்கள் கண்களைக் கண்டுதண்
புனல்வளர்ந் திடுகயலெலாம்
பொருகெண்டை யாமெனவு மொருகோடி திரியும்ப்
புதுமைகண் டதிசயித்துச்

சகமதிக் குங்கச்சி யம்பதிச் செங்குந்தர்
சப்பாணி கொட்டியருளே
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. ரு

வடமறுத் துத்தனது நிழலினைக் கறுவியே
வட்டமிட் டுப்பொருதுவன்
வானப் பிறைக்கோடு கொண்டுதின் டாடநெடு
மாமலை களைத்துளைத்தும்
இடர்முகிற் றிரளைப் பெருந்துதிக் கையினு
லெட்டிப் பிடித்ததிர்க்கும்
இடிப்பெருங் குரல்முழக் கத்தினைப் பிளிறியே
யிடிசத்த மதிலடக்கிப்
படவரும் பகையசுரர் சேனையும் பொடிபடப்
படியடிப் படமிதித்துப்
படர்குருதி வெள்ளப் பெருக்கெடுத் தோடவே
பதறிவெண் கண்சிவக்கும்
தடமும் மதக்களிற் றுலவிவரு விதரணிகர்
சப்பாணி கொட்டியருளே
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. சா

மிக்கவே தியர்பரவு சீகாழி யம்பதியில்
வேதியன் புதல்வனுகி
வேதாக மம்புரா ணங்கற் றுணர்ந் துதவும்
விஞ்சையர் மதிக்குமதுரைச்
சொக்கநா தன்முனஞ் சமணரெண் ணுயிரந்
தொகுதிகூட் டிப்பகைஞராய்ச்
சுந்தர சவுந்தரிய பாண்டியன் சபைதனிற்
சொற்றமிழ்க் கவிதைபாடித்

திக்குள்ள பேரெள்ள வைகையாற் றெதிரேடு
செலவிடுத் தமணைவென்ற
செந்தமிழ்ச் சம்பந்த வடிவமா கியகுமரர்
சேடசய னத்தில்வளருஞ்
சக்கரபா ணிக்குரிசில் மருகருக் கிளையவர்கள்
சப்பாணி கொட்டியருளே
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. ரு

முருகுவிரி செங்காவி மலர்களைக் களைகளையு
மோகனக் கடைசியரெலாம்
முதிரவிளை செந்நெல்வயல் வாய்தொறுங் கூடியே
முத்துமணி களைவாரியே
பருகுமது விலைதனக் கனுதின மளக்குமவர்
பரவியிடு குரவையோசை
படர்கடற் றிரையொலி யடங்கவு மடங்கவிரி
பங்கயப் பொய்கையெல்லாம்
திரிதரும் பவளமென மின்னுகா லன்னங்கள்
சேவலொடு கூடிமருவும்
சிறகா லணைத்துவெண் பணிலங்க ளீத்தனது
சிறுகுழவி யெனவளர்க்கும்
தருதிரு வணுமலையில் வருசைவ முதலியர்கள்
சப்பாணி கொட்டியருளே
சங்குந்து வயல்மேவு செங்குந்த வள்நாடர்
சப்பாணி கொட்டியருளே. சு

தீதொன்று நினையாத சிந்தையது பெற்றோர்கள்
செங்கடப் பந்தாரினோர்
சேவலங் கொடியினோர் நாவிலங் காதவர்கள்
செஞ்சவர மதுபடைத்தோர்

மூதண்ட மளவுமர சாளுமச் சூரன்முன்
முடுகுமுத் தண்டமொழிய
மூவிரு முகத்தவன் றுணையாக வந்தவர்கள்
முச்சக மதிக்குமறிவோர்
தாதொன்று மலரளக பாரமங் கையர்கள்வேள்
தன்னைநிக ரானவடிவோர்
தறுகட் புலித்தண்டை மல்லாரி சேகண்டி
சகலவிரு தும்படைத்தோர்
கோதண்ட மான்மருக ராய்வந்த ரணசூரர்
கொட்டியருள் சப்பாணியே
குருபூசை சிவபூசை மறவாத தயவாளர்
கொட்டியருள் சப்பாணியே. எ

நூபுர முழங்குதிரு வடியரம் பையரெலா
நுண்ணிடை யசைந்துமெலிய
நுவலரிய கற்பகா டவிமலர் சொரிந்தொரு
நொடிப்பொழுது மகலாமலே
மூபுர மெரித்தநகை யேகம்ப வாணர்தம்
முழுவழகு திகழநின்ற
முடுகுதா லப்பெரிய சிவலிங்க மென்னவே
முத்திநெறி யைக்குறித்து
மாபுரங் கொண்டதிரு மேனிமா லயனுமவ்
வானவர் குழாத்தினுடனே
வந்துவந் தனுதின மருச்சனை புரிந்துநல்
வரமுதவு கெனவழுத்தும்
கோபுரம் வானளவும் வளர்கச்சி நகரதிபர்
கொட்டியருள் சப்பாணியே
குருபூசை சிவபூசை மறவாத தயவாளர்
கொட்டியருள் சப்பாணியே. அ

செந்திரு மடந்தையுறை மார்பர்சோ ழேந்திரன்
சீர்கொண்ட சமூகமதனிற்
சென்றுவிடை கொண்டுகண் டோர்கள்கொண் டாடவே
தீரவீ ரியமதாக
வந்துமக மாயிதிரி சூலிமா காளிமுன்
வலியவர மதுவினவியே
வாங்கிக்கொண் டப்பொழுது வீரதத் துவமுடன்
வலியதூண் மிசையேறியே
தந்திரவல் லானுடைய புரிசையுட் சென்றவன்
றலையறுக் கும்பொழுதினில்
தையலவன் மனைவிமங் கியமுத வென்னவே
தந்துபொற் றலைகொணர்ந்தோர்
கொந்தலர் கடம்பணி புயாசலர் மகிபாலர்
கொட்டியருள் சப்பாணியே
கோதற்ற செங்குந்தர் வீரநா ராயணர்கள்
கொட்டியருள் சப்பாணியே. கூ

வேறு

வளர்தா ழிசையுலாநன் னெறிசேர் பரணிகோவை
குற்றமில் நற்றூது
வகைசேர்மடல் கள்சார மியல்சேர் கவிதைமா
லையின்னிசை யிற்கூறும்
ஒளிசே ரகவலாசு கவியோ டினியபாவை
கற்றவர் சொற்றபாடல்
உடனேபு னைசெய்தானை நவமாம ணிபொன்னுடை
பொற்பணி நற்சீர்மை
வளமார் கடையநீடு விரலா ழிகள்மதாணி
முத்தணி நட்போடே
வகையாயு தவுவோர்கள் நயவாசக நன்மேலர்
சற்குண மிக்கோர்கள்

குளிர்சேர் கயிலைகாவ லுடையோர் பரிவினோர்கள்
கொட்டுக சப்பாணி
குருபூசையு மெய்ஞ்ஞான சிவபூசையு முள்ளோர்கள்
கொட்டுக சப்பாணி. கய

சப்பாணிப்பருவ முற்றிற்று

---

## முத்தப்பருவம்

---

விம்மும் கடலிற் பணிலமுத்தும் விரவுங்
கரைசே ரிப்பிமுத்தும்
மேகத் துதிக்கு மணிமுத்தும் வேயி
னிடத்து விளைமுத்தும்
கொம்மை முலையார் களத்தின்முத்துங் குளிர்மா
மதியந் தருமுத்தும்
கோக னகத்தின் மலரின்முத்துங் குரண்டத்
தலையின் விளைமுத்தும்
செம்மை திகழுங் கரும்பின்முத்துஞ் சீதப்
பனிசூழ் செந்நெல்முத்தும்
சிறக்கும் பவள மனையவுங்கள் செவ்வாய்
முத்துக் கிணையாமோ
மும்மண் டலமும் புகழவந்தோர் முத்தந்
தருக முத்தமே
மொழிநா விலகா முதலியர்கள் முத்தந்
தருக முத்தமே. க

படிக்கும் புலவோர் தங்களுக்கும் பழமா
மறையோர் தங்களுக்கும்
பாரி லுயர்ந்த தவத்தினர்க்கும் பசியால்
மெலியும் வறிஞோர்க்கும்

வடித்த புகழ்சே ரரசருக்கு மலரோன்
முதலாந் தேவருக்கும்
மகிமைக் குருவா சிரியருக்கும் வளர்சங்
கீதவிஞ் சையர்க்கும்
கொடிப்பொன் னிடையார் தங்களுக்குங் குலயர்
நிலைமை யுடையார்க்கும்
கொண்ட வறுமை குலைந்தோடக் குளிர்பொன்
கொடுத்தே யவர்விரதம்
முடிக்குந் திறமை யுடையார்கள் முத்தந்
தருக முத்தமே
மொழிநா விலகா முதலியர்கள் முத்தந்
தருக முத்தமே. ௨

கடிகொள் கமலப் பசுந்தேனுங் காமர்
குமுதச் செழுந்தேனும்
கனமூன் றியகொம் பிற்றேனுங் கருதுங்
கொடிமல் லிகைத்தேனும்
வடிகொண் மலர்ச்செண் பகத்தேனும் வாசப்
பசுந்தா ழையின்றேனும்
வண்டு கூடி யுழக்குபுன்னை மலரிற்
சொரியும் பசுந்தேனும்
மடல்விண் டலர்முல் லையிற்றேனும் வாய்த்த
மலர்ச்சா தியின்றேனும்
வழிந்து திரண்டு பெருக்காறாய் வயல்க
டோறும் பாய்ந்துதிரை
முடுகுந் திருக்கச் சியிலரசர் முத்தந்
தருக முத்தமே
மொழிநா விலகா முதலியர்கள் முத்தந்
தருக முத்தமே. ௩

தொல்லை மருவார் போர்க்களத்திற் றுதிக்கை
வலிய மால்யானை
சூரத நடனப் பரித்திரள்கள் சூழு
மிரதங் காலாள்கள்
வில்லும் வாகைக் கணைத்திரளும் வீசுந்
திரள்வாள் வல்லையமும்
வெடியுந் துடிப்பீ ரங்கிகளு மிக்க
முனைக்கட் டாரிகளும்
ஒல்லை யுடன்கை விட்டயர வுடல்கால்
தலைமூளைகள்சிதறி
ஓடி யுதிரம் பெருகவெல்லு முயர்வீ
ரியர்கை ரகுராமர்
முல்லை நகைச்செங் கனிவாயர் முத்தந்
தருக முத்தமே
மொழிநா விலகா முதலியர்கள் முத்தந்
தருக முத்தமே. ௪

இந்துங் கதிருந் திசைமாறி யெழினுங்
கடனீர் சுவறிடினும்
ஈட்ட வளர்ந்த மகமேரு விடிந்து
பெயர்ந்து விழுந்திடினும்
வந்து பொழியு மழைமாரி மறுத்துத்
துளிகள் வறண்டிடினும்
வானத் தமரர்க் கரியதெய்வ மறைமா
மொழிபொய் வழங்கிடினும்
சந்த மிகுந்த திருமாலின் றனதுகமலக்
கரத்தில் வைத்துத்
தரிக்குங் கணைகள் தவறிடினுஞ் சாற்று
மொழிகள் தப்பாது

முந்து புகழ்க்கச் சியிலரசர் முத்தந்
தருக முத்தமே
மொழிநா விலகா முதலியர்கள் முத்தந்
தருக முத்தமே. ரு

வேறு

பத்தி கொடுக்குந் தமிழ்நூலைப் படித்துப்
படரும் பேரறிவைப்
பால்போற் கருதிப் பலகாலும் பழகப்
பழகப் பரிந்தோடச்
சித்தி கொடுக்குந் தவத்தோரைச் சேர்ந்து
மவர்கள் திருவாக்கைச்
செம்மைப் பொருளா மெனக்கருதித் திரியுங்
கரணத் தினையடக்கி
அத்து விதத்தி லொருமைகொண்டங் கசைவற்
றிருக்கு மொருபொருளை
அணுகிப் பெருகு மானந்த வருள்சேர்
கடலி னமிழ்கின்ற
முத்தி கொடுக்குந் திருக்காஞ்சி முதல்வோர்
முத்தந் தருகவே
மோதுங் கரவல் லானைவென்றோர் முத்தந்
தருக முத்தமே ௬

மன்னுங் கிரிகை யோர்தமக்கு மாசற்
றுயர்ந்த தவத்தோர்க்கும்
மணக்கு மறைவே தியர்தமக்கும் வாரி
யுடுத்த புவியோர்க்கும்
பன்னுந் தமிழைப் படித்தோர்க்கும் பசித்த
வர்க்கும் பகையோர்க்கும்

பாரிற் கடன்பட் டடைந்தவர்க்கும் பகருஞ்
சமய வாதியர்க்கும்
மின்னுங் கிரீட வரசருக்கும் வேண்டித்
தமைவந் தடைந்தோர்க்கும்
வேளை யெரித்த முக்கண்ணன் முதலாந்
தேவர் பூசனைக்கும்
முன்னின் றருளுங் கனகமழை முகிலோர்
முத்தந் தருகவே
மோதுங் கரவல் லானைவென்றோர் முத்தந்
தருக முத்தமே. எ

முத்தப்பருவ முற்றிற்று

---

## வருகைப்பருவம்

---

குளமே வியசெந் திலதமின்னார் குவளைக்
களைகள் பலகளைந்து
குரவை யிடும்பூங் கழனிதொறுங் குதித்து
மடைதோய் கயல்வெருள
இளமே திகள்வந் தொருகோடி யிறங்கிப்
படிய வருவாளை
எழுந்து குதித்துக் கமுகவனத் திலகு
மடலின் றிரள்கிழித்துத்
தளமே வியசெங் கழனிவயற் றலைக
டோறும் விளையாடித்
தத்திக் கயல்முக் கனிகளெல்லாந் தானே
யுழக்கித் திரும்பிவரும்
வளமே வியதென் கச்சிநகர் வந்தோர்
வருக வருகவே
மாகாளி யைக்கால் விலங்குதைத்தோர் வருக
வருக வருகவே. க

நலமா கியமல் லிகைவனத்தில் நறும்பூ
வருந்திச் சுரும்பினங்கள்
நயந்து விதஞ்சே ரிசைபாட நத்துங்
கவிகள் தாளமொத்தக்
குலமா மயில்க ளொருகோடிக் குலவி
நடன மதுபுரியக்
கோக னகச்செங் திருவிருந்து கூத்துப்
பார்க்கு முத்துவனம்
பலமா மணிகள் கொடைகொடுப்பப் பசும்பூ
வனங்கள் மலர்சொரியப்
பாரா ளரசர் கண்டுமெச்சும் பான்மை
தவிராப் புகழ்மேவும்
மலைமா துமையாள் தவஞ்செய்கச்சி வாழ்வோர்
வருக வருகவே
வளச்செங் குந்த குலத்தில்வந்தோர் வருக
வருக வருகவே. ௨

நட்டா ரிரவோர் மறையோர்க்கு நாட்டுந்
தமிழ்நன் னுவலர்க்கும்
நம்பி மிகுநீர் தம்பமென நாடி
யடைந்தோர் தங்களுக்கும்
பட்டார் கொடிசே ரிடையார்க்கும் பான்மை
யுடைய தவத்தோர்க்கும்
பசித்தோர் தமக்கும் பாருலகிற் பலரு
மதிக்கப் பான்மையுடன்
இட்டார் பெரியோ ரெனக்கேட்டிங் கிரவும்
பகலு மருள்புரியும்
ஈகை யுடைய பெரியோர்க ளேமக்
களபம் பரிமளிக்கும்

மட்டார் கடப்பப் புயவீர வாகுத்
தலைவர் வருகவே
வளஞ்சே ரருணை புரியில்வந்தோர் வருக
வருக வருகவே. ௬

சத்தம் பயிலு மழைமுகிலுந் தழைக்குஞ்
சீதக் கமுகினமும்
தந்தி மருப்பு மலைவேயுஞ் சசியும்
பனித்தண் டாமரையும்
கத்துங் கடல்வா யிப்பிகளுங் கரும்பும்
கனிப்பொற் றிருப்புயமும்
கன்னி மடவார் பொன்கழுத்துங் கருஞ்சூ
காத்தி னிருமருப்பும்
சுத்தம் பயிலும் பசுத்தந்தந் தோயுந்
தூய சங்கினமும்
துகடீர் குரண்ட மணிச்சிரசுந் துள்ளும்
புனல்சேர் மீன்றலையும்
முத்தஞ் சொரியுந் திருக்காஞ்சி மூதூர்க்
கிறையோர் வருகவே
முனைசேர் பஞ்ச வணவிருது முடிக்குந்
திறலோர் வருகவே. ௭

செச்சை மணிமா மேடையினுந் தேரோ
டியநற் றெருத்தோறும்
செந்நெற் பசும்பூங் கழனியினுந் தீட்டுஞ்
சுதைமா ளிகைமீதும்
பச்சென் றொளிரு மரகதமும் பரிகை
மேடைக் கொடிகளிலும்
பால்போ லெரிக்குந் தரளமணிப் பணிக்கோ
புரத்தின் முடிமிசையும்

உச்சந் திகழ்வெண் மதிதிகழு மோங்கும்
பளிங்கு மாடத்தும்
உம்பர் தொழுமா லயந்தோ றுமொண்பூங்
கமல மாதிருந்து
மெச்சு புகழ்சேர் கச்சிநகர் விளங்குந்
திறலோர் வருகவே
வெண்மா மதிநற் குடைநிழற்றும் வேள்மைத்
துனமார் வருகவே. ரு

வேறு

திலத நுதலி லெழுதியழகு
சேர்க்க வருக வருகவே
செவ்வாய்க் கனிமுத் தாடமடியிற்
சேர்த்த ணைத்திட வருகவே
முலைகொ டுத்துடல் புழுதிதுடைத்து
முத்தா டிக்கொள வருகவே
முழங்குஞ் சிலம்புங் கலீன்கலீனென
முன்னே யோடி வருகவே
நிலவெனு மிளநகை யுலாவி
நில்லா தோடி வருகவே
நித்திலச் சுட்டிபொன்கதிர்பரப்பிட
நிறைபொன் னணிய வருகவே
மலைம டந்தை சுதர்கரமுகில்
மன்னர் வருக வருகவே
வல்லா னுயிர்கொல் லாதவீர
வாகுத் தலைவர் வருகவே. சு

விதரண மிகுநிபுண செங்குந்த
வீரர் வருக வருகவே
விண்ணோர் சிறையை விடுவித்தவரை
மேன்மை செய்தவர் வருகவே

சதுரு பாய தருமநெறிகொள்
சத்யரிச் சந்த்ரர் வருகவே
தாதவிழ் பூமலர் நீபமாலிகை
தரிக்கு மன்னவர் வருகவே
அதிரு மொன்னலர் பணிபதாம்புய
ராடுந் தாளவர் வருகவே
அட்டதிக் கெங்கணும் புகழ்படைத்திடு
மதுலர் வருக வருகவே
மதுரை நகரி லரசுபுரியு
மன்னர் வருக வருகவே
வல்லா னுயிர்கொல் லாதவீர
வாகுத் தலைவர் வருகவே. எ

சேலார் விழிகளெனச் சொல்மாதர்கள்
தேடுந் திண்புயர் வருகவே
சிரச்சிங் காதனங் கவிக்குதவிய
தீர வீரியர் வருகவே
நாலா கலைகற் றுலகிற்பரந்த
நல்லோர் வருக வருகவே
நம்பினபே ரைத்தம்ப மெனவைத்து
நடத்து நாதர் வருகவே
சூலா யுதனைச் செபித்தவானவர்
துணையடிக் கன்பர் வருகவே
சுருதி நிலைமை மனத்தினிறுவு
தூய நேயர் வருகவே
மாலோன் மருகர் கந்தன்சோதரர்
வரிசை யாளர் வருகவே
வல்லா னுயிர்கொல் லாதவீர
வாகுத் தலைவர் வருகவே. அ

வருகைப்பருவ முற்றிற்று

## அம்புலிப்பருவம்

விண்ணிலுடு மங்கையர்க் கரசுநீ யிவர்கள்புவி
மேன்மங்கை யர்க்கரசராம்
விரவுமா காயவிரு ணீயொழிப் பாயிவர்கள்
மிடியர்கலி யிருளொழிப்பார்
மண்ணுலகி னிற்பயிர்க் கினியைநீ யிவர்கள்பல
வான்பயிர்க் கினிமையர்களாம்
மாமதி யெனும்பெருமை யுடையைநீ யிவர்புத்தி
மதியெனும் பெருமையுடையார்
தண்ணொளி பரப்புவாய் நீயிவர்கள் மடவார்கள்
தண்ணொளி பரப்பியருள்வார்
தண்குமுத நண்பனீ யிவர்கள்மட வார்கள்வாய்த்
தண்குமுத நண்பராவார்
அண்ணலா கியவுனக் கிவர்களொப் பாவர்கா
ணம்புலீ யாடவாவே
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருட
னம்புலீ யாடவாவே. க

போதரவ தாயுனது கலைகள்பதி னறலாற்
புகலில்வே றிலையிவர்க்குப்
பூரணம தானகலை யறுபத்து நாலுண்டு
பொய்யில்லை மெய்யுண்மைகாண்
சீதமிகு முனதெழி லிராக்கால மல்லாது
செய்யும் பகற்போதிலைச்
செப்புமிவர் கீர்த்திப்பிர காசமெண் டிக்கினுந்
திகழிரவு பகலுமுளதாம்

ஏதமில் லாமலே யிவர்களுட னின்னைநிக
ரிடினுநீ நிகரில்லையால்
எங்கள்பெரு மான்முடிக் காபரண மாமென்ன
வெண்ணியே மிகவுநண்ணி
ஆதரவ தாயுன்னை வரவழைத் தாரிவர்க
ளம்புலீ யாடவாவே
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருட
னம்புலீ யாடவாவே. உ

அம்பரம துனதிடத் தாவினல் மிகவுநீ
யல்லல்பட் டயர்வதெல்லாம்
அம்பிகை யிடத்துநம் பெருமா னுடன்சொல்லி
யவ்வா தனைப்போக்குவார்
உம்பர்வந் துனதுடலி லமுதகலை யைப்பறித்
துண்ணநீ மெலிவதெல்லாம்
ஓங்குமயில் வாகனத் தண்ண லுட னேசொல்லி
யும்பரனு காமற்செய்வார்
நம்பிநீ யுறைகின்ற தானமுந் தானமல
நாடியிவர் பாலடைந்தால்
நமதம்மை யுமையெனுந் தாயுடன் சொல்லியே
நற்கதியி லீடேற்றுவார்
அம்புவியி லிவர்களைச் சேருநற் றுணையுனக்
கம்புலீ யாடவாவே
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருட
னம்புலீ யாடவாவே. ௩

மிசையான தேவருட னீயுமச் சூரனல்
வெஞ்சிறைப் படுமந்தநாள்
வீரமயில் வாகனன் றுணைவராய் வந்துன்னை
விடுவித்த தறிகிலாயோ

திசைநான் முகன்றனது மைந்தன்செய் வேள்வியிற்
சிக்கிவிண் ணவரோடிடச்
சிவனுன வீரமா வீரனடி யாலுனைத்
தேய்த்துவிட் டதையறியையோ
பசியாம லெந்நாளு முப்பத்தி ரண்டறம்
பாலிக்கு மம்மையுமையாள்
பாதச் சிலம்பிற் பிறந்தா ரழைத்தாற்
பயப்படே யிவர்முனிந்தால்
அசையாத வெண்டிக்கி லொருத்திக்கு மிலையுனக்
கம்புலீ யாடவாவே
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருட
னம்புலீ யாடவாவே. ரு

சாரச மிருந்தமறை யாவையுந் தருகின்ற
தாமரைத் தவிசனுமவன்
தந்தையா கியதிரு முகுந்தனோ டேயினித்
தக்கதிக் குப்பாலரும்
மூரிவெற் பனையவெள் ளானையும் முப்பத்து
முக்கோடி தேவர்பலரும்
முடியடியு மறியாத சிவனுடைய சீர்பாத
முறைமையிற் றங்குமூரவோர்
காரைநிக ரானகுழன் மடமாதர் நடமாடு
கனகமய மேடைதோறும்
கங்குல்பக லென்னவே யொளிவிளக் கஞ்செயக்
கதிரொளிப் பிரபையெனவே
ஆரமுத் தணிகச்சி மாநகர்க் கிறைவருட
னம்புலீ யாடவாவே
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருட
னம்புலீ யாடவாவே. சு

வேறு

கம்பலை புரிவிரி கடலே ழுங்குல
கனகிரி யோரேழும்
கருணை பெறுந்தவ ரெழுவரு மருடரு
கன்னிய ரெழுவோரும்
தம்பம தாகிய குலகிரி யெட்டுந்
தருமிகு திசையெட்டும்
தந்திக ளெட்டட னுகம தெட்டுந்
தகுபா லகரெட்டும்
செம்பது மாலய மலர்மா துந்தமிழ்
செப்பிய கலைமாதும்
திசைமுகன் முதலிய விண்ணே ருந்தொழு
தேவி பராபரையாள்
அம்பிகை தந்திடு மைந்தரோ டாடுற
வம்புலி வருவாயே
அறுமுக வேலவர் துணைவரோ டாடுற
வம்புலி வருவாயே. ௬

உலவிய திரைவிரி பாலா ழியில்வள
ருரகபண டவிமேல்
உம்பர் தொழுஞ்சல சத்திரு மகளுட
னுறவிழி துயில்கூரும்
கலவியில் மருவிடு பொழுதொரு மதகரி
கஞ்சமென் மலர்கொய்யக்
கண்டொரு முதலை பிடித்திட வெருவிக்
கரிகோ மூலமென
உலகொடு வானுல கறியக் கதறிய
வொருகுர லதிரவிடுத்
துள்ளந் துள்ளித் தள்ளா டிக்கொண்
டுயிர்போ மெனவஞ்சி

அலறிய போதே யருள்மால் மருகரோ
டம்புலி வருவாயே
அறுமுக வேலவர் துணைவரோ டாடுற
வம்புலி வருவாயே. எ

முரச மலாடங் கொங்கு தெலுங்கு
முடுகிய கருநாடம்
மோதிய முனையிடு மொட்டிய மீழ
முதிர்குகு ரந்துளுவம்
உரைசெறி சிங்களம் வங்கா ளம்புக
ழுயர்கரு மலையாளம்
ஓதிய வங்கங் கலியா ணந்திரு
வுயர்சோ ழங்குடகம்
கருதிய மகதம ராடஞ் சிங்கொடு
கமலஞ் செறிசீனம்
கவினுறு மைம்பத் தறுதே சத்துள
கதிர்முடி யுடையமகா
அரசர் மதித்திடு மன்னவ ரிவருட
னுடுக வம்புலியே
அறுமுக வேலவர் துணைவரோ டின்புற
வாடுக வம்புலியே. அ

அம்புலிப்பருவ முற்றிற்று

---

## சிறுபறைப்பருவம்

---

சந்திரக் கவிவாண ரிசைமுழக் கப்பெருகு
சதுர்வேத மறைமுழக்கத்
தண்காவின் மலரளிகள் குமுறொலி முழக்கிடத்
தந்திவீ ணைகள்முழக்கப்

பந்திமத கரிகள்குர லொலிமுழக் கத்திருப்
பரதமட வார்முழக்கப்
பன்னுசுர மண்டல முழக்கமு முரசமும்
பரிவுகொடு மெதிர்முழக்கத்
திந்திதிமி யெனவாடு பரியின்மே லரசருந்
திறையிடுந் தொனிமுழக்கத்
திகழுமுலை மடமாத ராலத்தி யேந்தியவர்
திருமொழிகள் பலமுழக்கச்
செந்திருப் புயவீர வாகுதே வத்தலைவர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. க

வீறுடு மொன்னலர்கள் மகுடம் பிளக்கவே
வெட்டும் பரிக்குநகுலர்
மென்மீசை யுடையவர்க ளபிமான பூடணர்கள்
வீரசூ ரனைவென்றவர்
மாறுடு பாவகோ டிகளெலா மோடிட
வழங்கிடும் பிச்சையுடையார்
மாகாளி கையைப் பிடித்தவர்கள் முசுகுந்தன்
மல்லாரி யைப்பறித்தோர்
தாறுடு கதலியும் பாகலுஞ் சூதமுஞ்
தண்கனி சுமந்துநிற்கும்
தண்டலையில் விண்டமுவு வாளைபாய்ந் தக்கனிச்
சாறுபாய்ந் தோடுவெள்ளம்
சேறுடு கழனிசூழ் கச்சிநக ருக்கதிபர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. உ

பூவகைத் தளிர்களொரு கோடிதண் டலைதொறும்
பொருவிலிசை பலமுழக்கப்
புண்டரீ கக்கழனி வாய்தொறுங் கடைசியர்கள்
புகல்குரவை யொலிமுழக்க
மர்தவத் துமையரிய தவமுயலு மருகிலும்
வருகம்பை யலைமுழக்க
வாசமல ரோடைதொறு முக்கோடி சங்கினம்
வளமைகொளு மொலிமுழக்கப்
பாவகத் தவமுனிவர் பூசைவே ளைக்கினிய
பன்மணித் தொனிமுழக்கப்
பன்னுளு மிந்தவகை மாறு முழக்கமே
பயில்கச்சி யம்பதியினோர்
சேவகக் கந்தன் சகோதரப் பிரபுடீகர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே ௩

தம்பமெனு மகமேரு வில்லுடைய மகதேவர்
தம்புதல்வ ரம்புயமலர்த்
தையன்முலை மீதிலே துயில்புரியு நெடியமால்
தயவுபுரி திருமருகர்பூம்
கொம்புடைய மதயானை மேலுதய மதரூபர்
குருவின்மொழி தவிராதவர்
கோலமிகு சிவபூசை மேலதிக தயவாளர்
குலபுரவி நகுலனையார்
அம்புவி மதிக்கவரு வீரசெங் குந்தர்பே
ரபிமான பூடணமுளோர்
ஆதிகயி லாயகிரி நாதரருள் பெற்றவர்க
ளகிலம் புரக்குரிபுணர்

செம்பவள மடமாதர் கும்பவிள முலைநேயர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. ௪

புகழ்பெற்ற சூரன்மா மாமதா யுருவுகொடு
புக்குநிற் குங்கடலிடைப்
போந்துவடி வேல்விட் டெறிந்துமுடி சிதறிடப்
பொருதுவரு முருகர்துணைவர்
நகைமுத்த மனையசெந் திருமகளை யகலாத
நாகரிக மாலின்மருகர்
நாடறிய வேபட்ட மானமுங் காத்தவனை
ரட்சித்த கருணையுடையார்
தொகைபெற்ற வறுபத்து நாலுகலை கற்றவர்கள்
சொல்வாண ருக்கினியவர்
துட்டவல் லானுடைய பட்டங் குலைத்தவர்கள்
சுரிகைமல் லாரியுடையார்
செகமெச்சு பஞ்சவண விருதுடைய மகராசர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. ரு

பரிவுடைய முப்பத்து முக்கோடி தேவரும்
படர்முடித் தோராகவும்
பரிதிமதி யிருவருந் தருமுருளை யாகவும்
பகருமறை வடமாகவும்
விரிகமல மலரயன் னூர்பாக னாகவும்
மேருகிரி சிலையாகவும்
மிக்கவா சுகிநெடிய நாணாகவுங் கருணை
மேவுமால் கணையாகவும்

தருமனத் தக்கினிக் கிடுசமித் தாகவுஞ்
சமர்செய நினைக்குமந்நாள்
தக்கவிவர் மனவலிமை கண்டுதே ரடியிடத்
தான்முரிந் திடநகைத்தே
திரிபுர மெரித்ததொரு பரமசிவ னருள்மைந்தர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. சு

கோமேவு வதனக் குறச்சிறுமி யுறைகின்ற
குளிர்தினைப் புனவனத்தில்
கோல்பிடித் துச்சிமயிர் மேல்வெளுத் துக்கிழக்
கோலமுட னேகியவள்முன்
நாமேவு மிதமுரைத் தினியதினை மாவுண்டு
நாவுலரு தெனமயக்கி
நற்புனச் சுனைவழியி லற்புத மணம்புரியு
நற்றணிகை முருகர்துணைவர்
பாமேவு மதுரவிசை பாடிச் சுரும்பினம்
பைந்தேனி னமுதநுகரப்
பசுமுகை முறுக்கவிழ்ந் தலர்விரிந் தொழுகுமவிர்
பண்புபுனை மல்லிகைப்பூந்
தேமேவு தண்டருத் தொண்டைவள நாடதிபர்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. எ

அச்சமா யோடிவந் தபயமென் றவர்தம்மை
யாதரிக் கின்றபெரியோர்
அஞ்சாத பகைவரிட நெஞ்சாணி யாகவே
யடல்செய்படை கொண்டபெரியோர்

வச்சிரபா ணிக்கடவுள் மெச்சவே சூரரை
வதைத்துதவி செய்தபெரியோ
வானவர்கள் சஞ்சலந் தீர்த்தருளி வானுலகம்
வாழ்விக்க வந்தபெரியோர்
உச்சமா மதியமுங் கதிரவனு மாருடி
யோங்குதென் றிசைவடதிசைக்
குதயமாய் வருகினு மொல்காத மெய்வசன
முற்றுரைக் கின்றபெரியோர்
செச்சைமா லிகைமேவு கச்சிநகர் வீரர்கள்
சிறுபறை முழக்கியருளே
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்
சிறுபறை முழக்கியருளே. அ

சிறுபறைப்பருவ முற்றிற்று

---

## சிற்றிற் பருவம்

---

பூவிற் சிறந்த திருமாதும்
புகல்நால் வேதக் கலைமாதும்
பொன்னாட் டுயர்ந்த சசிமாதும்
போற்று முமையாள் திருச்சிலம்பில்
மேவிப் பிறந்த காலனுடன்
பெரும்போர் விளைத்த விறலோர்கள்
விளங்கு முகத்தில் மென்மீசை
மிகவே படைத்த பெரியோர்கள்
நாவிற் சொலினு விலங்காத
நல்லோர் வல்லான் மனைக்கன்று
நன்மங் கிலியங் கொடுத்தருளி
நாட்டிற் புகழைப் படைத்தோர்கள்

சேவற் கொடிநல் விருதுடையோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணுட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. க

காரார் சோலைக் கரையிடத்திற்
கமலஞ் சிறந்த நறுநிலத்தில்
கனவண் டரள வண்டல்செய்து
கருதிக் கருதி விளையாடி
நேராய் மலர்பூங் குழல்முடிக்க
நிறைந்த மதியொன் றறியாது
நிற்கு மடப்பே தையருமது
நிகர்வின் முகத்தை யறியோமால்
ஆராய் புலவர் கவியலவே
யடல்சேர் வல்லான் றலையலவே
அஞ்சாச் சூரன் புரமலவே
யழகா ரடிகள் வருந்தாதோ
சேரா வரசர் முடியலவே
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணுட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. உ

காண்டற் கரிய மணவாளர்
கருத்தைத் திருத்தும் விழியாலே
காட்டி மயக்கி வரவழைக்கக்
கருத்தொன் றறியாப் பேதையர்கள
வேண்டற் குரிய சிற்றில்முற்றும்
வேண்டா தழிப்ப துங்களுக்கு
விருப்போ கருப்ப நீர்பயில்சொன்
மெய்த்தாய் மார்கள் பத்தியுடன்

பூண்டற் கரிய பணிதிருத்திப்
புகழ்ந்து விளையா டெனவிடுத்தால்
பொன்னூர் சிலம்பு கலின்கலினப்
பேர்ந்து விளையா டாமலொன்னார்
தீண்டச் சிவந்த மலர்த்தாளாற்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. ௮

மேவுந் திசையிற் கிரிகளெட்டும்
விளங்கு மணித்தா ளெனநிறுவி
மிளிர்சேர் சக்கிர வாளநெடு
வெற்பைச் சுவரா யொப்பமிட்டுத்
தாவும் வெளியா காயமெனத்
தனிவீ டாக்கி மணிவிளக்காய்ச்
சசியோ டிரவி தனையேற்றித்
தகைசே ரண்ட மடுக்கடுக்கிப்
பூவின் மகளுங் கலைமகளும்
புகலுஞ் சசியு மரம்பையரும்
பொருந்தி யிழைக்கு மணிச்சிற்றில்
புதுச்சோ றாக்கி யறம்வளர்க்கும்
தேவி யுமையாள் சிலம்பில்வந்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. ௯

பெருவா ரிதியிற் படவரவம்
பிறங்கு திருப்பள் ளியிற்கமலப்
பீடத் திருந்து விளையாடும்
பெரிய புகழ்சேர் திருமாதோ

டொருவா திரவும் பகலுமிருந்
தொண்பொற் கமல விழிகடுயின்
றுலகி லுளபல் லுயிர்களுக்கு
முண்ணும் படிக ளளவாகப்
பரிவா யளந்து காத்தருளப்
படைக்கு மயனை மன்மதனைப்
பால ரிவர்க ளெனக்கருதிப்
பாரே ழையுமுண் டுமிழ்ந்தருளும்
திருமால் மருக ருமதடியார்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணுட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. ரு

பருவ முதிர்செங் கரும்பின்முத்தும்
பங்கே ருகத்தின் விளைமுத்தும்
பால்போ லெறிக்கு நிலாமுத்தும்
பசும்பூங் கமுகு தருமுத்தும்
அரிசி யெனவே கழுவியெடு
தரித்துப் பணில நீர்பரப்பி
அடுப்பா யிளநீர்க் காய்கூட்டி
யமுதப் பசுந்தே னீர்தேக்கி
விரிசந் தனக்கட் டையைப்பிளந்தே
விறகா யடுக்கிச் செம்மணியை
வீசிப் புகையா தெரிமூட்டி
வெண்சோ றாக்கி யமுதருந்தித்
தெருவில் விளையா டும்பேதைச்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணுட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. சு

நிறக்குங் கமலக் கரையிடத்தில்
நெடிதாய் வளைத்த வண்டலத்தில்
நிரைத்த தரள மலர்ப்பதத்தில்
நேர்பட் டிடிலொன் ஞர்பணிந்து
மறுக்கொண் டிருக்கு மறுவேயிம்
மறுவா மெனவெண் ணியநினைவோர்
வார்கோ கனக முலைத்தாயார்
வருந்தி யழைத்து மடியிருத்தி
வெறிக்கொண் டிருக்குந் திலகநுதல்
வியர்வே திருபொற் பதப்புழுதி
மிகுதி யிதுவே தெனவுரைத்தால்
மெய்வா சகமென் விளம்புவிர்காள்
சிறக்கும் புகழைப் படைத்தோர்கள்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே
சேணுட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. எ

நேச மிகுந்த சோமேந்திர
னிறைந்த கொலுவில் வரிசைபெற்றோர்
நெடிய வலிவல் லான்மனைவி
நினைவின் படிமங் கலமளித்தோர்
ஓசை மிகுந்த கடலுலகி
லொட்டக் கூத்தன் தமிழ்கேட்டோர்
உதவி புரியென் றடைந்தோருக்
குயருங் கருணை யருள்புரிவோர்
வீசுங் கரவொன் னலரவுணர்
வெற்றிக் கொடியைப் பறித்துவந்து
வேலா யுதர்கண் மனங்களிக்க
மிக்கபுகழை நாட்டும் வல்லோர்

தேசம் புகழக் கீர்த்திபெற்றோர்
சிறியோருஞ் சிற்றில் சிதையேலே
சேனுட் டமரர் சிறைவிடுத்தோர்
சிறியோருஞ் சிற்றில் சிதையேலே. அ

சிற்றிற்பருவ முற்றிற்று

---

## சிறுதேர்ப்பருவம்

---

காரேறு கிரவுஞ்ச மலையுருள நினையாத
கசடாசு ரேசருருளக்
கண்டுதுதி செய்கின்ற தண்டமிழ்ப் புலவோர்கள்
கலியகன் றோடியுருளத்
தாரேறு குழல்மா தரைப்புணர்ந் தவர்கள்மேற்
றங்குமய லேகியுருளத்
தர்க்கமிடு துட்டவல் லான்முடியு முருள்படச்
சதகோடி வரையுமுருள
வாரேறு கனகமுலை மாகாளி தன்னுடைய
வலியுருள முசுகுந்தனும்
மன்னவன் பலமுருள வலைவீசு கூற்றுவன்
வஞ்சநெஞ் சகமுருளவே
சீரேறு கஞ்சமலர் வஞ்சியுறை மணிமார்பர்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. க

வில்வச் சடாடவிச் சிவனுறையு மாரூரும்
வெண்காடு பஞ்சநதியும்
விரைமருவு தண்டலைத் திருவிடை மருதூரு
மிக்கபுகழ் சேர்தில்லையும்

மல்வைத்த முலைபங்க ருறைகின்ற சீகாழி
மாநகரு ஞானமேவும்
வளமிக்க செங்கோடு சாய்க்காடு வொற்றியூர்
வானளவு மருணகிரியும்
சொல்வைத்த காளத்தி காசிரா மேசுரந்
தொழுதிருத் தணிமலையுடன்
சோதிதிகழ் கயிலாய கிரியுமா கச்சியுந்
தொகுசத்த புரியிதுவெலாம்
செல்வப் பெருங்காணி கொண்டசெங் குந்தர்கள்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. உ

கொந்தார் மலர்ப்பொன் னடியிலணி நூபுரங்
குமுறுமொலி மிகவுமாடக்
குளிருமலர் முன்கையின் முகுதாரி யாடக்
குதம்பையுங் காதிலாட
நந்தா விளக்கெனத் துப்பின் பதக்கமொடு
நவமணியு மார்பிலாட
நலமுலவு நெற்றியிற் சுட்டியா டக்கையின்
நவரத்தின பணிகளாடப்
பந்தாடு முலைமாதர் தழுவுதிண் புயமிசைப்
படர்தீப மாலையாடப்
பங்கய முகத்தினிற் றரளவெயர் வாடப்
பசும்பொனரை ஞாணுமாடச்
செந்தா மரைப்பொய்கை சூழ்தொண்டை வளநாடர்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. ௩

பைம்பொன்னு லிலையுதர வெண்டரள நகைமாதர்
பணிமலர்க் கூந்தலிருளைப்
படர்முகி லினங்கவர வந்துதண் டலைதொறும்
படியும்வா னுதலினழகை
நம்பிவா னினிநிலவு பின்சென்று கவரவே
நறியமே டையிலூரவும்
நாகரிக மயிலினஞ் சாயல்கண் டிவர்கள்பின்
னடியா டித்திரிதர
அம்புயஞ் சூழ்புனல் குடைந்தாடி மீளிலவ
ராளுநடை கண்டுபழக
அன்னங்க ளொருகோடி சேவலொடு பின்செல்ல
வரியபல் வளமேவிடும்
செம்பொன்னா லயமேவு கச்சியம் பதியதிபர்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. ௪

மேவிவளர் பூகத்தின் முத்தத்தை யுங்கன்னல்
விளைகின்ற முத்தத்தையும்
விரியும் புனற்சங்கு முத்தத்தை யுங்கழனி
விளைநெல்லின் முத்தத்தையும்
தாவியெழு கின்றவேய் முத்தத்தை யுங்கலைத்
தண்ணிலா முத்தத்தையும்
தாமரைப் பூவில்வளர் முத்தத்தை யுங்கார்க
டந்தமணி முத்தத்தையும்
பூவையர்கள் கந்தர முத்தத்தை யுங்கரிப்
பொற்கொம்பின் முத்தத்தையும்
புகழ்கின்ற வயல்மாதர் மதுவுக் களக்கின்ற
புதுமைசேர் கச்சிநகரில்

தேவர்தொழு கருமாறி பாய்கின்ற திறல்வீரர்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. ரு

அசைதருஞ் செண்பக வனங்கோடி வேலியா
யதனடுவில் விளைகழனியில்
அடர்கமுகு வனமெலா முத்தங்கள் சொரியவே
யதனடுவி லொருகோடிநீள்
பசியமட லேந்தியொரு பொன்னுருவ மாகியப்
பண்பாளை யிளநீர்தரும்
பரிவுடைய தென்னைவன மெதிர்நின்று தொழுகின்ற
பான்மையு மதன்றிமற்றும்
ஓசியுமிடை மாதரொடு கொடிபோல மேடைமே
லுலவிநகை நிலவொளியினல்
உம்பரை மயக்கிடும் புதுமையும் புதுமையா
யுள்ளத்தி லறியுமமரர்
திசைதொறும் பூமாரி பொழிகச்சி நகரதிபர்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. சு

அவ்வான விந்திரனொடு முப்பத்து முக்கோடி
யமரருந் தொழுதிறைஞ்சும்
அழகிய திருப்பரங் குன்றுசி ரலைவாய்பொன்
ஞவினன் குடியேரகம்
வெவ்வாதை யணுகாத பலமலைகள் மதயானை
மேவுதென் சோலைமலையும்
மேதினியி லாறுதல மகலாது குடிகொண்டு
மெய்யடி யரைப்புரக்கத்

தவ்வாது மயிலேறி விண்ணோர்கள் சூழவே
தாட்சிலம் பொலிமுழக்கத்
தகுதிதிகு திகுதியென நடனமுட னேவந்து
தயவுபுரி கருணைமேவச்
செவ்வேள் திருத்தம்பி மார்கச்சி நகரதிபர்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. எ

கொங்குலா வியசோலை மேவிய வயோத்தியிற்
கொண்டதச ரதனெனுமகா
கொற்றவன் சேயெனத் தோன்றிவிசு வாமித்திரர்
கூடவே கித்தாடகை
துங்கமா கச்சயங் கொண்டுமிதி லாபுரித்
துரைசனகன் மகளைவேட்டுத்
தோலா திருக்கு மயோத்தியில் வந்தபின்
தொல்லைவன வாசமெய்திப்
பங்கமி ராவணன் றலைகளீ ரைந்தையும்
பறிகொடுத் தோடவென்று
பரிவுகொடு வீடணர் பட்டமுங் கட்டிப்
பரித்தரா மாவதாரச்
செங்கண்மால் மருகரென வந்தசெங் குந்தர்கள்
சிறுதே ருருட்டியருளே
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்
சிறுதே ருருட்டியருளே. அ

சிறுதேர்ப்பருவ முற்றிற்று

---

## அரங்கேற்றியகாலமுதலியன

---

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அருள்பெறு சகாத்தமதொ ராயிரத் தறுநூற்றொ
டைம்பஃது மேழுக்குமேல்
அச்சுதனன் ளினிற் கதிர்வார மதுதன்னி
லதிசயக் கச்சியதிபர்
பெருமைபெறு மாயிரத் தொள்ளா யிரத்தவர்
பிரபந்தத் தமிழ்க்கேட்டிடும்
பேசரிய வல்லானை வென்றசெங் குந்தர்தம்
பெருமையாங் கண்ணின்மணியோர்
தருமதுணை யானபேர் தாட்டீக முள்ளபேர்
தருவைநிக ரானபெரியோர்
தந்தபொன் னுடைகரி பரிவாக னத்தோடு
தங்கப் பதக்கமுதலா
வருபொரு ளிராசியாய் வரையாம லீந்தபேர்
வளர்பஞ்ச வண்ணவிருதோர்
வளமையா நவவீர வுயர்சிங்க மானபேர்
வனபுலிக் கொடிவாழியே.



## வாழ்த்து

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்

மாதவ முடைய தேவி மலரடிச் சிலம்பு தித்த
தீதிலா வீர வாகு முதலிய தீரர் தந்த
பூதர மென்ன வோங்கு புயமுடைக் குந்தர் வாழ்க
நீதிசேர் புகழி னோங்கு நெடுந்தொண்டை நாடும் வாழ்க.

---

## பிள்ளைத்தமிழ் முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க



கோலம் பெறவேண்டிற் கூறுதியென் னெஞ்சேநம்
நீல கிரிக்குகன்றாள் நேடி.

உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை

# கலித்துறைமாலை

## தற்சிறப்புப்பாயிரம்

### விநாயகர்

பூராய மாங்கவி நான்கையு மோர்ந்த புலவர்செவிக்
காரா வமுத மெனச்சோழ மண்டலவா ளர்க்குச்சொல்
நேரான மாலைக் கொருவிக் கினமுமென் னெஞ்சகத்தே
வாராமற் காகச்சி வாழ்விகடச் சக்கரவாரணமே. ௧

### சுப்பிரமணியர்

எத்திக்கும் கீர்த்தி படைத்தசெங் குந்த ரியல்பனைத்தும்
புத்திக்கு ளோர்ந்த படியுற் றுரைக்கவிப் பூவுலகிற்
சித்திக்கும் புள்ளமர் வேளூர் வயித்தியன் சேயெனச்சொன்
முத்துக் குமரன் முருகனெம் மாறு முகன்றுணையே. ௨

### நவவீரர்

சந்ததம் வாணர் சவைநடு வேதமி யேனுயர்செங்
குந்தர்தம் மாலை கலித்துறை யான்மிகக் கூறுதற்கு
நந்தலி லக்குல நாயக ரென்ன நவிலுமொன்பான்
கந்த னனுசரை நான்மற வேனெந்தக் காலமுமே. ௩

### ஒட்டக்கூத்தர்

கல்விக் கரசு கவிராஜ சிங்கங் கலைச்சலதி
வில்விக்கும் வாட்கை யபயர்சஞ் சீவி விமலமுத்தி
புல்விக்கு மாகமப் பொக்கசம் வேதப் புயல்கமலச்
செல்விக்குச் சேயொட்டக் கூத்த னல்லாற்புவி செப்பரிதே.

### ஆக்கியோன்பெயர்முதலியன

நாகைப் பதிவரு முத்துக் குமார னயந்துசெழிப்
பாகப் புனைதரு செங்குந்தர் மாலையைப் பாரிலுளோர்
தாகத் துடன்வினவக் கச்சி யேகம்பர் சந்நிதிக்கண்
ஏகத் தவிசிற் றியாகைய னுற்றரங் கேற்றினனே. ரு

### நூற்பயன்

எங்குந்த மோசை யிலங்காதி பத்திய மேற்றதனிச்
செங்குந்தர் மாலை யொன்றேனுமுறு நூறையுஞ் சிந்தித்தபேர்
சங்கும் வளையுந் தரித்த பிரான்மனை தன்னருளாற்
பொங்குமெண் பாக்கிய போகமுந் துய்த்துளம் பூரிப்பரே.சு

### வாழ்த்து

கனம்வாழ்க வெத்திக்குங் கார்பெய்தல் வாழ்க கவின்மணிநீ
றினம்வாழ்க மன்ன ரெழில்வாழ்க சைவ விருடியர்தம்
மனம்வாழ்க வைதிக மாமறை வாழ்கசண் மாமுகன்சீர்
தினம்வாழ்க வாழ்கநங் கைக்கோள ராகிய செங்குந்தரே.எ

---

## நூல்

காரார் மேனித் திருமான் மருகரிக் காசினியில்
ஏராருங் கச்சி யிடைமா வடியி லிருந்துலகாள்
சூராதி சூரர் சுகந்தமுந் தாதுந் துலங்குகின்ற
சீரார் கடம்பணி தாரார்திண் மார்பினர் செங்குந்தரே. க

சலம்பெற்ற செஞ்சடை யார்கயி லாசர் தமதுநெற்றி
நலம்பெற்ற மூவிரு கட்பொறிக் கஞ்சிய நாயகிபின்

• • •

புலம்பிப் பெயர்ந்தவந் நாளவள் பாதத்திற் பூட்டியபொற்
சிலம்பிற் பிறந்தவர் கைக்கோள ராகிய செங்குந்தரே. உ

பூமார் துறைமணி மார்பற்கும் வெண்கஞ்சப் போதிலுறை
நாமாது கேள்வற்கு நற்சசி காந்தன்முன் னுகருக்கும்
தாமாதி யாந்தந்தை போலு முதலியர் தண்டலைப்பூந்
தேமா வுருச்செறி கச்சியி லுச்சிதச் செங்குந்தரே. ௩

கந்த வரையொடு கைலையு மேருவுங் காவல்கொளீஇ
முந்திய நீபத் தொடைநட னப்பரி முப்பதஞ்சேர்
தந்திசெஞ் சேவற் கொடிமும் முரசொடு சண்முகன்றன்
செந்திருக் கோயிற் றசாங்கமும் பெற்றவர் செங்குந்தரே. ௪

வாரா நிதிக்குண் மகேந்திரந் தன்னிடை வாழ்ந்திருந்த
சூராதி சூரனை வென்றவ னாகத் துவசங்கொண்ட
வீராதி வீரர் விசயப்ர தாபர் விருதுபெற்ற
தீராதி தீரர் துரைவீர ராகிய செங்குந்தரே. ௫

காணுநின் றூர்க்கரு ளுங்கயி லைப்பரற் கானபல
பூணார மாளிகை மெய்க்காவல் பூண்டவர் பூதலத்தில்
ஆணுள ராகிச் செவ்வேளுக் குத்தம்பிய ராகிநின்றோர்
சேணுடு தன்னைக் குடியேற்றி வைத்தவிச் செங்குந்தரே. ௬

மெய்யுளுக் காதநன் னுவைப் படைத்தவர் மெய்யிற்சற்று
மையுளுக் காநமற் கோலைவிட் டோர்வெற்றி வாள்கொடுச்சி
கொய்யுளுக் காவண மென்றே கவியொட்டக் கூத்தன்சொன்ன
செய்யுளுக் காச்சிரப் பாவாடை யிட்டவர் செங்குந்தரே. ௭

காவே கரப்பினுங் கார்பெய்தல் பொய்ப்பினுங் கட்கமலப்
பூவே மலையி னுனியிடை பூப்பினும் பூதலத்தின்
மாவே முடையவெய் யோன்வடக் குற்தெற்கு மாறினுமெய்த்
தேவே விலகினு நாவி லங்காதவர் செங்குந்தரே.

அருவா யுருவமு மாயண்ட மாயண்ட ரண்டமுமாய்
மருவாய் மருவின் மருவிட மாய்ச்சது மாமறையின்
தருவாய் விளங்கிய காமாட்சி யம்மையின் சந்நிதிக்கண்
திருவாழுங் கச்சிக் கருமாறிப் பாய்பவர் செங்குந்தரே. சு

பேரா யிரமுடை யார்கச்சி யேகம்பர் பேண்விழவில்
ஏராரும் வீதிக் கெழுந்தரு டோறு மிரவுபகல்
பாராம லேநிதஞ் சீர்பாதந் தாங்கும் பணிவிடைக்குச்
சேரா யிரத்துத் தொளாயிரம் பேர்களுஞ் செங்குந்தரே.

முகத்தின்மென் மீசை மிளிர்வோர் மறைதெரி மூதறிவோர்
அகத்திற் றயவுகொண் டார்வந்தி ரக்கினு மன்னமிட்டுத்
திகத்திசை தோறுந் திறைகொள் கரதலச் செம்மையினல்
செகத்தினிற் செம்பியர்க் காதார மானவர் செங்குந்தரே.கக

நடுக்கண்ட காரி யமேசொல்லு வார்பொய்யெந் நாளுஞ்சொலார்
துடுக்குற்றெரு ராடல் துணிந்துசெய் யார்தங்க டொல்குலத்தில்
வடுக்கொண்ட பேரைச் சினத்தோ டவர்த மணிமிடற்றில்
திடுக்கென் றலற நுகத்தூணைப் பாய்ச்சுவர் செங்குந்தரே.

படமுட னேவரு பாந்தளொப் பாமல்குற் பாவையர்க்கும்
அடலுட னேதிரி யானையொப் பாம்வலி யாடவர்க்கும்
குடதிசை யோடு குணக்கும் வடக்குங் குலாவுதெற்கும்
திடமுட னேபட்ட மானமுங் காத்தவர் செங்குந்தரே. கங

அக்கால் சடையனுக் கன்பான பேருக் கன்பாகியபேர்
திக்கானை யெட்டுந் திகைக்கச் சமர்புரி தீரர்சிவ
மிக்கான சைவ விதிவளர்ப் போர்பலர் மெச்சவந்து
செக்காருக் குற்ற பழிக்குயி ரீந்தவர் செங்குந்தரே. கச

நெல்லைப் பதிமது ராபுரி காஞ்சி நெடுங்கழுக்குன்
றெல்லைக் கடங்கருங் காசி யையாறெரு டிடைமருதூர்

துல்லைப் பொருங்கம லாலயங் காழி யதிகைமுதல்
தில்லைத் தலந்தொறு மெய்க்காவல் பூண்டவர் செங்குந்தரே.

மேயசெம் பாக்க நெற்குன்றம் படப்பை வியன்புவனை
நேயநா கீச்சுர மாணும்பதி சம்பை நீடகரம்
தூயநன் ஞைகைமுன் மாப்பிளைக் குப்பஞ்சீர் சொற்கமலை
சீய புரஞ்சே ரலமாதி நாட்டினர் செங்குந்தரே. கசு

பக்கத் தெழுந்து வருஞ்சூர னஞ்சப் படையெடுத்து
நெக்கப் பொருந்தொறுஞ் செஞ்சோரி வெள்ள நெடுங்கடல்போற்
சொக்கொத்த வெண்குடை மேலே யலையெறி கொள்கையினுற்
செக்கச் சிவந்த கவிகையுள் ளோர்களிச் செங்குந்தரே. கஎ

பாவிக் குறும்பருக் கும்பழு வூரன்முன் பன்னிருவர்
மேவிக் குளத்துற்ற கம்பத்தி லேறியூன் வீசிக்கொண்டே
ஆவிக் குறுதிசெய் யாமல்வல் லானை யடக்கியபின்
தேவிக்கு மாங்கி லியப்பிச்சை யிட்டவர் செங்குந்தரே. கஅ

குக்குக் குகுவெனக் கூகைகள் பாடக் குறுங்குறளி
நக்குச் சரங்கொட்டி நின்றாட வெட்டி நடுச்சமரிற்
புக்குக் கொடுஞ்சிங்க மாமுகன் பல்சிரம் போழ்ந்துடலச்
செக்குக் கொருசிரம் வைத்தொழித் திட்டவர் செங்குந்தரே.

சத்திக் கொருபுடை தந்தரு ளீசன் றமிழ்ப்புலவர்
பத்திக் கிரங்கும் பரமேட்டி வேதப் பருப்பதத்தில்
எத்திக்கும் போற்றிடுஞ் சம்பாதி சம்பாற் கிச்சையுடன்
தித்திக்க வேநித மன்னம் படைப்பவர் செங்குந்தரே. உ0

நேசச் செழியனுஞ் சேரனுஞ் சோழனு நின்றுமெச்ச
வாசத் தவண்டைமல் லாரிகள் கொட்டிவந் தேசவையிற்
பாசத்தி னுற்பனை மேற்கம்பம் வீக்கி யப்பார்த்திபர்தந்
தேசத்தி லேநட்டுக் கட்டியு மாடுவர் செங்குந்தரே. உக

ஆவக் குடாக்கடன் மாயேந் திரத்தி லவுணர்சிரங்
கூவப் படவெட்டி நின்றவஞ் ஞான்று குமரன்மெச்சி
ஓவச் சுரிகை யும்பட்டா டையும்வயி ரேர்யக்கொத்துஞ்
சேவற் கொடியுங் கெடியும்பெற் றோர்களிச் செங்குந்தரே.

பாவாணர்க் கன்னம் படைப்பாரு மிவ்வுடற் பாரம்விட்டுச்
சாவாருக் கான பொருளளிப் பாருந் தமர்க்கிரங்கி
ஈவாரு நன்மைக் கிசைவாருஞ் சித்த மிரங்கியென்றும்
தேவார முற்றும் படிப்பாரு மங்கையிற் செங்குந்தரே. உங

ஒருவா சகஞ்சொலக் கேளாத பேர்க்குத்தம் மூனைச்சிந்திப்
பெருவா சகங்கொண் டறச்சிதைப் பாரும் பிறப்பகற்றும்
குருவாச கத்தை மறவாத வருங்கு வலயத்தே
திருவாச கஞ்சொ லொருவா சகத்தருஞ் செங்குந்தரே. உச

கொல்வினைக் கண்ணுறுங் கூற்றற்கு மஞ்சிலர் கொள்படைப்பாம்
புல்வினைக் கண்ணுறும் போதற்கு மஞ்சிலர் போரெனுமோர்
வல்வினைக் கண்ணுறும் வானிக்கு மஞ்சிலர் வாரிதிமேற்
செல்வினைக் கண்ணுறுந் தீமைக்கு மஞ்சிலர் செங்குந்தரே.

உம்பர்க் குறுந்துயர் யாவு மொழித்தவ ரோங்குகச்சிக்
கம்பர்க் கினிய செம்பட்டுக் குடையவர் காரியென்பேர்
பொங்கத் தமிழ்சொலி மெய்ப்பணி பூண்ட புராதனர்பைஞ்
செம்பொற் சிகர மகமேருக் கொப்பவர் செங்குந்தரே உசு

ஞான பரணர் நவவீரர் தங்குல நாகரிகர்
மான பரணர் மதிக்குந் தயாளர் மகேந்திரத்தில்
தான பதிகமுற் றேனுது சென்றவர் சண்முகன்றன்
சேன பதிகளுஞ் சேனையு மானவர் செங்குந்தரே. உஎ

பொன்னிற் பொலிதில்லை மூதூரிற் காளி பொலிந்திலகி
மன்னித் திரிதரு தேராழ்தல் கண்டு வயப்புலிபோல்

துன்னித் தினகரன் றோஞ்ச வோட்டிய சூழ்ச்சியர்பல்
சென்னிச் சிங்காதனர் சேனைத் தலைவரெம் செங்குந்தரே.

மருவந்த பூங்குழன் மாதுமை யாளொண் மணிச்சிலம்பின்
உருவங்க ளொன்பதி லொன்பா னுமையுரு வுற்றரனுற்
கருவுந்தத் தோன்றிய காரணத் தாற்கந்த வேளுக்குப்பின்
செருமுந்து சூலப் படையான் றருமைந்தர் செங்குந்தரே.

மாசற்ற வர்சொல் வழுவற் றவர்மரி யாதையுள்ளோர்
நேசத் துறுபுன னுடன்முன் றண்டிகை நீட்டப்பெற்றோர்
பாசத்தொ டேசுந்த ரர்க்குமுன் கைலைசெல் பண்பரெந்தத்
தேசத் தவருக்கு நல்லவர் வல்லவர் செங்குந்தரே. ௩0

முறைச்சோறும் வன்பிணி யாளர்க்கு யாத்திரை முந்துவர்க்குத்
துறைச்சோறு முத்தமிழ்ச் சூரிகட் குஞ்சதுத் தொல்குலர்க்கும்
இறைச்சோறு நற்றவர்க் கின்சோறுங் காவலி லெய்த்தவர்க்குச்
சிறைச்சோறு மீகுவர் கைக்கோள ராகிய செங்குந்தரே. ௩௧

தவச்சிந் தனையுள்ள தக்கோரின் மிக்கவர் தாரணியிற்
பவச்சிந் தனைசற்றும் பண்ணறி யார்குல பாதகமாம்
அவச்சிந் தனையொரு போதுமெண் ணார்நித மந்திசந்தி
சிவச்சிந் தனைமற வாதவ ராகுமிச் செங்குந்தரே. ௩௨

காவித்து கின்மணி நீறணிந் தேகள்ளர் காண்குறினும்
கோவித் திடாரந்த வேடம் பொருளெனக் கும்பிடுவார்
பாவித் தவரைப் பணிவ ரல்லாற் பரசாதியரைச்
சேவித்துக் கைகட்டி வாய்புதை யாரிந்தச் செங்குந்தரே.

சூரசெங் குந்தர் சுகிர்தசெங் குந்தரெண் டோளர்தந்த
வீரசெங் குந்தர் விதரண செங்குந்தர் வெற்றியில
பாரசெங் குந்தர் பரமார்த்த செங்குந்தர் பற்குனனில்
தீரசெங் குந்தர் மெய்த்தியாக செங்குந்தரிச் செங்குந்தரே.

நாற்பாற் குலத்தொழி னண்ணுசெங் குந்தரந் நாற்குலத்து
மேற்பால ராகி விளங்குசெங் குந்தர்தம் வெஞ்சமரில்
தோற்பாரைத் தொண்டுகொ டேசெங் குந்தர் துறக்கமிகு
சேற்பாவு கண்ணியர்க் கார்வல ராகிய செங்குந்தரே. ௩௫

கனத்தாலுங் காருகச் செய்தொழி லாலுங் கணிக்கரிய
தனத்தாலுந் தங்களுக் கிடுமுண் டோவிந்தத் தாரணியின்
மனத்தாலும் வாக்கொடு காயத்தி னுலுமுன் மற்றொருவர்
சினத்தாலுந் தங்க ளினத்தாரைக் காப்பவர் செங்குந்தரே.

அறப்பால ரென்னப் பலபா வலரு மரும்ப்ரபந்தத்
திறப்பாக்கள் பாடச் செவிகொடுத் தாங்கவர் சிந்தையறிந்
திறப்பாம் பொருளு மிருநிலச் செம்மையு மின்புறவே
சிறப்பாகத் தந்தின்மை சேரர்து காப்பவர் செங்குந்தரே.

மேவிய பேர்க்கரு ளுங்கைலை வெற்பிடை மேவலர்தம்
ஆவியைக் கொள்வண மண்டர்நின் றேத்த வமலன்குகற்
கூவிவைவேலைக் கொடுத்தவஞ் ஞான்றவன் கொள்கைகண்டு
தேவிகை வேலைக் கொடுத்திடப் பெற்றவர் செங்குந்தரே.

ஆரா ருமைமுலைப் பாலுண்ட வாய னறுமுகன்பாற்
பேராநற் றம்பிய ராகிவந் தோரிந்தப் பேருலகில்
தாராரும் வெற்றிக் கடம்பணி வோர்செந் தமிழ்ப்புனைவோர்
சீராரு முத்தர சைவரு மாவரிச் செங்குந்தரே. ௩௬

முனைத்துணைக் கண்செவி தாவுங்கா மாட்சியை முற்றுந்தங்கண்
மனத்துணை யாக்கொண்ட வண்மையி னோர்திருமான்மருகர்
இனத்துணை மிக்கவ ரெய்ப்பி லொருவர்செய் திட்டநன்றி
தினைத்துணை யேனும் பனைத்துணை யாக்கொள்வர் செங்குந்தரே.

பரங்குன் றஞ் சீரலை வாயாவி னன்குடி பண்ணவர்க்கு
வரங்குன் றிடாத்திரு வேரகஞ் சோலை மலைமரத்தின்

உரங்குன்று குன்றுதோ ரூடன்முன் னும்பதிக் கோரதிபத்
திறங்குன்றி டாதிருந் தாதிக்கம் பெற்றவர் செங்குந்தரே.

அலைகடல் போல்வரு தங்குலக் கூட்டத் தவைநடுவே
கலகலென் றேயவச் சொல்லுரை யாரறக் கற்றுணர்ந்த
பலபல வாகிய செந்தமி ழாற்பல பாவலர்க்குச்
சிலசில சங்கைக டீர்த்திசை கொள்ளுவர் செங்குந்தரே.

புயங்கொண்ட நீபத் தொடையுடை யாரிந்தப் பூதலத்தில்
நயங்கொண்ட கல்விக்கு நாயக மானவர் நாடொறும்பல்
பயங்கொண்டவ ரைப்பயந் தீர்க்கவல்லவர் பற்றலரைச்
செயங்கொண்ட வீரியர் தேவர் சினேகரிச் செங்குந்தரே.

எம்மைவி டாதெம் மனத்தோங்கு கம்ப ரிடத்துறையும்
அம்மைவி டாதாத ரிக்கப் பெற்றோரபி மானமிக்கோர்
தம்மை விடாதடைந் தோர்தமைக் காக்குந் தயாளர்சிவச்
செம்மை விடாதவ ரம்மா வதிசயச் செங்குந்தரே. ௪௪

பாடவும் பாடிப் படிக்கவும் வல்லவர் பல்கலைகள்
நாடவு நாடி நடிக்கவும் வல்லவர் ஞானிகள்பாற்
கூடவுங் கூடிக் குலவவும் வல்லவர் கோதின்முத்தி
தேடவு மற்றதிற் சேரவும் வல்லவர் செங்குந்தரே. ௪௫

வேடிக்கை செய்குவர் வெல்லாதும் வெல்வர் மிடிவரினும்
வாடிக் கிலேசிக்க மாட்டார்க டம்மினம் வந்தடைந்தாற்
கூடிக் குலவுவ ரேற்போர்க் கிடுவர் குவலயத்தே
தேடிப் புதைத்து மறந்திற வார்களிச் செங்குந்தரே. ௪௬

சல்லாப சற்குண சங்கீத லோலர் தமிழின்மிக
வல்லாரை வாதினில் வெல்லவல் லோர்மதி மந்திரப்போர்
கல்லாது கற்றவர் பல்கலை தேர்ந்தவர் காசினியிற்
செல்லா வழிச்சென்று வல்லானை வென்றவிச் செங்குந்தரே.

பரமர்தர் தம்முகம் பாராத வர்பஞ்ச பாணமதன்
கரமாற வைத்தவர் காமாந்த கர்க்கொரு காலர்கலி
உரமாதி மாய்த்தடைந் தார்தமைக் காப்பவ ரூறில்சதுச்
சிரமான நற்குலக் கைக்கோள ராகிய செங்குந்தரே. ௯அ

அவ்வேழ் கடலு மகலாம கேந்திர மாளவந்த
வெவ்வேழு நாமுகச் சூர்முத லோர்களை வீட்டுவதற்
கெவ்வே லையுமுனக் கின்றுணை யாவ ரெனச்சிவன்றாள்
செவ்வேளைக் கைக்கொ ளெனக்கொண்ட சேவகர் செங்குந்தரே.

ஏதமில் கைக்கோளர் தாமே முதலிய ரென்பதல்லால்
ஓதய லார்க்கிலை யென்றேதக் கோர்க ளுறுஞ்சவையில்
வாத மறக்குரு ஞானப்ர காசன் மழுவெடுக்கத்
தீத றவப்பட்டஞ் சேரநின் றூர்களிச் செங்குந்தரே. ௲௦

தக்கன் மகத்தைத் தகர்வீர பத்திரன் றுனெனவே
கொக்கரித் தார்த்துவல் லான்றனை வெல்லக் கொதித்தெழுநாள்
விக்கினந் தீர்த்திட வேண்மென் றேயவன் வீட்டிற்சென்று
சிக்கெனக் காளியைக் கைப்பிடித் தோர்களிச்செங்குந்தரே.

மறைநூல தாகிய வைதிக நூலினு மாசில்பல
முறைநூல தாகுமி லௌகிக நூலினு முத்திநெறி
அறைநூல தாகிய வேதாந்த நூலினு மாயறத்தின்
சிறைநூல தாகிய வெந்நூலுந் தேர்ந்தவர் செங்குந்தரே.

நம்புலிக் காலர் பதஞ்சலி போற்ற நடித்தருளும்
அம்புலிச் செஞ்சடை யார்க்கடி யாரடை யார்களுக்கோர்
வெம்புலிக் கொப்பென வந்துதித் தோரிந்த மேதினியிற்
செம்புலித் தண்டை விருதுபெற் றோரெனுஞ் செங்குந்தரே.

தவகா ரியர்புகழ் சற்காரிய ரிந்தத் தாரணியில்
அவகாரி யஞ்சொப் பனத்துளுஞ் செய்தறி யார்கள்கண்டீர்

நவகா ரியமொன் றுஞ்செய்யார் பழமையை நாடிச்செய்வார்
சிவகா ரியத்திற் றுரந்தரர் தொல்குலச் செங்குந்தரே. ௫௪

ஆரஞ் செறியு மகலப் புரூர வரிச்சந்திரன்
வீரஞ் செறிபுரு குற்சன் முசுகுந்தன் வெற்றிநளன்
ஈரம் புணர்கார்த்த வீரியன் சோழ னெழிற்செழியன்
சேரன் முதலரை யர்க்கணி யானவர் செங்குந்தரே. ௫௫

தவகண நாதர் பணிகயி லாயத் தலவதிபர்
உவகையி லீன்ற வெங்கந்த னுக்கென்று முறுந்துணைவர்
நவகண வீரர்க் கிலக்கத் தவர்க்குதி நாகரிகர்
சிவகயி லாய பரம்பரை யாரெனுஞ் செங்குந்தரே. ௫௬

தருக்கோ வெனக்கரு தாரைப் புடைத்துத் தமையடைந்த
வருக்கோ வுயிரும் வழங்கிடு வார்தமில் வாதுவந்தால்
பெருக்கோதம் போல்வரு கோபம் பொருமலெம் பிஞ்ஞகன்வாழ்
திருக்கோயில் சென்று சினந்தீர்த் தொழிப்பவர் செங்குந்தரே.

கஞ்ச வகத்த னடுச்சிரங் கிள்ளிய கண்ணுதருள்
விஞ்சணி மாமுடி யாக்கொ டுலகாள் விமலர்தம்பால்
தஞ்ச மெனச்செலு வோரைத் தினந்தினந் தாங்கவல்லோர்
செஞ்ச வரத்தின் விருதுடை யோருமிச் செங்குந்தரே.

முத்துக் கடுக்கன் சரப்பளி பூண்பவர் மோனர்மன
தொத்துச் சிவசிந் தனையினிற் போர்பிற ருக்குதவப்
புத்திப் பெருகித்தம் மூட்டியி லீட்டிபுல் லார்செருகச்
செத்துச் செயங்கொண்ட சீரா ளருமிந்தச் செங்குந்தரே.

காவான செங்கைத் தலர்க்கின்மை சோரத்தங் காணவைப்பை
நாவான தாற்கொள்ளை நாடவிட் டாருநன் னுவலர்தம்
பாவான தின்மெச்சிப் பாடவை வாள்கந்து பாய்ச்சியறச்
சேவா னடிதொழுஞ் சாவாரு மாகுவர் செங்குந்தரே. ௬0

நயங்கொண் டொருநங் குலத்துக்கொர் நூலை நவில்கவென்றே
வியங்கொண்ட நற்சிரச் சிங்கா தனமிட்ட வீரங்கண்டொண்
குயங்கொண்டவாணியின்கோயின்முனேயொட்டக்கூத்தன்சொலிச்
செயங்கொண்ட வீட்டி யெழுபதுங் கொண்டவர் செங்குந்தரே.

நேரான குந்தஞ் சமதாடு நேரிச நீள்சுரிகை
கூரான சூரி சந்த்ராயு தஞ்செய்யம்பு கோல்வடிவேல்
ஓராரு நேமி கழுமுளைஃ கேதி யிணையிலசி
சீராமுன் னும்பதி னெட்டாயுதத் தருஞ் செங்குந்தரே. ௬௨

கனக்கார் கொடையுடைய கைக்காரர் மற்றிந்தக் காசினியில்
தனக்காரர் மெத்தவுந் தாட்டீகக் காரர் தவறையுஞ
மனக்கார ரேதினும் வல்லமைக் காரர்பல் வாதையும்வெல்
சினக்கார ரங்கைச் சிலைக்காரர் யாரெனிற் செங்குந்தரே.

செருநூற்றை யாயிரம் வந்தாலு மஞ்சிலர் தேகத்துக்கு
வருநூற்ற லென்றெண்ணி வாடார்க டங்கண் மனத்தினுள்ளே
ஒருநூற்றுக் கோடிபஞ் சாக்கரந்தன்னின முச்சரித்துத்
திருநூற் றெணக்க மணிநீ றணிகுவர் செங்குந்தரே. ௬௪

பேருடை யாரும் பெலமுடை யாரும் பெரியகச்சி
ஊருடை யாரு முலகுடை யாரு முயர்கடம்பின்
தாருடை யாருந் தவமுடை யாருந் தனபதிபோற்
சீருடை யாருஞ் சிறப்புடை யாருமிச் செங்குந்தரே. ௬௫

பெருக்க முடையவர் சைகைதப் பாதவர் பின்னுமுன்னும்
வருக்க முடையவர் வாகாய்ப் பிறந்தவர் வண்மாபில்
உருக்க முடையவ ருத்தமி கௌரி யுயர்குலமென்
செருக்கை யுடையவர் செல்வரிற் செல்வரிச் செங்குந்தரே.

தந்தா வளமென்ன வுஞ்சங்க மாநிதி தானெனவு
நந்தா துயர்ந்தசிந் தாமணி யென்னவு நானிலத்தில்

ஐந்தாரு வென்னவு மண்டர்க் குரியநல் லாவெனவும்
செந்தா மரைநிதி யென்னவும் வந்தவர் செங்குந்தரே. ௬௭

மரபியல் சற்றும் வழுவாத வர்சிகை வற்றுசுடர்
பரவுற வைத்தெரித் தாரருள் பெற்றவர் பாதகராய்
விரவிய பல்குலத் தார்க்கிடி யேறெப்பர் வேட்டவர்க்குத்
திரவியம் போல்பவர் சேணுட்டைக் காத்தவிச் செங்குந்தரே.

அன்னப் பரியுடை யோனைச் சிறையிட்ட வாண்மையர்வேட்
குன்னப் படாத மைவாக னந்தந்தவ ரோர்முசுவென்
மன்னற் குறவின ராகித் தியாகர்தம் வைப்பினைப்பல்
சின்னத்தொ டேமணிற் செய்த சிரேட்டருஞ் செங்குந்தரே.

அங்காரை நேருங் கொடையுடை யாரவு ணேசனைமுன்
சங்காரஞ் செய்த முருகேசன் றம்பியர் சற்புருடர்
கொங்கார் வடவனக் காளிகைத் தாளத்தைக் குத்துசிதச்
சிங்காரப் பாணியர் சேவற் கொடியரிச் செங்குந்தரே. ௭௦

அருக்கனைத் தேசிரச் சிங்கா தனத்தீட்டிக் காம்பரபந்தம்
இருக்கவெங் கூத்த னியற்றிய பின்னமு தேய்த்தினிமை
பெருக்குந் தமிழா கரன்புக ழேந்தியும் பேசிவைத்த
திருக்கை வழக்கப் பிரபந்தம் பெற்றவர் செங்குந்தரே. ௭௧

சங்கு வளையுந் தரித்தான் பரவரற் றூழ்ந்தயத்தின்
பங்கம் மொடுசமண் பாழியுங் கண்ணும் பறிந்துலகம்
எங்கும் புகழ்கொ ளபிமானச் செல்வரே லேலனெனும்
சிங்கற்கு மெய்த்தலை சென்றளித் தோர்களிச் செங்குந்தரே.

நந்தா விளக்கை நிகர்குலத் தோருமெந் நாளுநம்பி
வந்தாரை வாழ்விக்கும் வல்லபத் தோரும் வறுமைதவிர்த்
திந்தா பிடியெனக் கையேற்ப தற்குமு னீந்தருளும்
சிந்தா மணியொத்த கைத்தலத் தோருமிச் செங்குந்தரே.

பட்டுக்கு நூல்கொண் டிழைத்தோடித் தோய்ந்தபற் பாவைநெய்தே
மட்டிட்டு மாறும் வியாபாரத் தான்முன் மலரயனைக்
குட்டித் தளையிட்ட கோலா கலக்குக னென்குமரச்
செட்டிக் கிளையநற் செட்டிக ளாகுமிச் செங்குந்தரே. எ௪

கோவல னன திருமான் மருகன் குகனமரர்
காவலன் வள்ளி தெய்வப் பிடிதோய்புயக் காந்தன்மறைப்
பாவலன் பொய்யா மொழித்தமிழ் கேட்டெதிர் பாடுகின்ற
சேவலன் சேவகர் கைக்கோள ராகிய செங்குந்தரே. எ௫

காத்தலைச் செய்க மலக்கணன் மார்பிலெக் கா லும்வைத்துப்
போற்றலைக் கொண்ட பிரானையிப் பூதலப் புன்பவங்கள்
நீத்தலைச் செய்யப் பிரதிட்டை செய்த நிமலர்சங்கச்
சித்தலைச் சாத்தற் குபகார மாற்றிய செங்குந்தரே. எ௬

போந்தார் புதியர் பழைய ரெனினுமிப் பூதலத்தில்
ஆய்ந்தான காரிய மேசெய் குவரபி மானமதைச்
சார்ந்தார் மரபினர் சங்கீத லோலர் தமையரணச்
சேர்ந்தார்க்குச் செம்மையர் சேரார்க்கு வெம்மையர் செங்குந்தரே.

ஈடற்ற வம்பலக் கூத்தன் றலைத்தவி சேறித்தரும்
பாடற் புனைந்தபின் மெய்யாவுந் தந்தலை பற்றியுயிர்
கூடப் புகனு மெழுப்பேழ்ப தாலொட்டக் கூத்தனெனத்
தேடற் கரிய திருப்பேரைத் தந்தவர் செங்குந்தரே. எ௮

துலையினு மிஞ்சு நிறையுடை யாரொரு சொல்லுடையார்
மலையினு மிஞ்சிய மன்னர் பகைக்கினு மற்றவராற்
புலையினம் போர்த்தபல் புங்கமெண் கோடி புகினுந்தங்கள்
சிலையினிற் கைவைக்கு முன்னே யொழிப்பரிச் செங்குந்தரே.

தவசவ தம்புகழ் சத்திய மானந் தயவிதெலாம்
கவச மெனத்தினம் பூண்டுகொண் டேயெந்தக் காலத்தினும்

எவர்சம யப்பற்றையு மனுகா ரென்று மீறிலதாம்
சிவசம யப்பரி பாலன ராகுமிச் செங்குந்தரே. அ0

சுயவிக் ரமரொரு சொல்விக் ரமரிந்தத் தொல்லுலகில்
நயவிக் ரமர்நலஞ் சேர்விக் ரமரமர் நாடியெழும்
புயவிக் ரமர்பெரும் போர்விக்ரம ரெட்டிற் போந்திசையுட்
செயவிக் ரமரன்பு சேர்விக்ரம ரிந்தச் செங்குந்தரே. அக

அலைக்குந் தரங்கக் கடல்கடந் தோர்களு மன்றவுணர்
குலைக்குந் தரக்கின் கொடிபறித் தோர்களுங் கோதையர்கண்
முலைக்கந்த மான புயமுடை யோர்களு மூதுலகிற்
சிலைக்கந்த மான செங்கை யுடையோர்களுஞ் செங்குந்தரே.

ஈட்டித் திறஞ்சொலுங் கந்தபு ராணத் திருங்கதையை
நாட்டிப் புகழ்கொண்ட ஞானப்ர காச னயந்தெரிந்து
காட்டிப் புகவிடுங் காரிய மோர்ந்தவன் கையெழுத்தாம்
சீட்டின் படிநடந் தேசிறப் பெய்துவர் செங்குந்தரே. அ௩

பாராளு மன்னவர் கொண்டாட வந்தவர் பற்றலர்தம்
பேரான தையறப் பேர்த்தே விறல்கொளும் பெற்றிமையோர்
ஆரா திரைக்கரன் வேடரா ரேனும்பொ ருய்ந்தளிக்கும்
சீராள ராரெனிற் கச்சியில் வாழுமிச் செங்குந்தரே. அச

தவ்வைக் குணத்தரென் வண்டக் குலாமரைத் தள்ளியுள
வெவ்வற்கு நன்னெறி காட்டிநின் ருட்கொ ளெழிலராற்
கொவ்வப் படுமலர்க் கூறுசெ யும்பல்கைக் கூறுகண்டோர்
செவ்வைக்குட் செவ்வையர் சேனைத் தலைவரெஞ் செங்குந்தரே.

வேணாட்ட மோர்பன் னிரண்டிற் கருணை விளங்கத்தன்னோர்
தாணாட்ட முற்ற திண்டம்பிய ரைப்பெருந் தாரணியில்
ஆணாட்டங் கொள்ள விடுப்ப வவர்வழி யாகவந்தோர்
சேணாட்டுக் கொப்பெனுஞ் சோணாட்டையாண்டவிச் செங்குந்தரே.

சுயங்கொண்ட கல்விக் கடலனை யார்தமைத் தோத்திரித்தால்
நயங்கொண்ட வர்க்கு நலம்புரி வார்நம னுரைவென்ற
புயங்கொண் டெதிர்த்து வருவாரை வெட்டியிப் பூதலத்திற்
செயங்கொண்ட வீரக் கழல்கட்டு வார்களிச் செங்குந்தரே.

முத்தமிழ் வேந்தரெம் முன்னவன் கோயின் முறைகளைத்தம்
கைத்தலந் தந்தவஞ் ஞான்றய லார்க்கொரு காரியமும்
வைத்த றகாதென வான்பெண் ணடங்கலும் வாங்கிச்செய்தே
செத்திற வாச்சிறப் பெய்திநின் றார்களிச் செங்குந்தரே.

சீரேறு நல்வழு வூரிடை நான்மறை தேர்தொறும்பல்
போரேற வாது புரியிரு சன்மர்சொல் பொய்க்கவிறை
நேரேறி மற்றவ னுனீவி ரேமறை நீதரெனத்
தேரேறி மீண்டிட்ட தேசிக ராவரிச் செங்குந்தரே. ௮௯

முந்திக்கு வேளை முனிந்தோனுக் கான முறைத்தொண்டெலாம்
அந்திக்குஞ் சந்திக்கு மாய்ந்தாற்று மாற்றி லயலவரால்
நிந்திக்குந் தொண்டுள வேனு மதைய நிறீஇக்குறைவாய்ச்
சிந்தித் திடாது சிறப்பாகக் கொள்பவர் செங்குந்தரே. ௯௦

ஒப்புயர் வற்ற கயிலாய வெற்பில்வல் லோங்கவுணர்
துப்பற வாறு முகனோ டுதித்துப்பின் றொல்லுலகின்
வெப்பறவெய் யோன்கு லத்திவர்ந் தோங்கிவிற் பன்னர்மிகச்
செப்பு தசாங்க மிருவகைப் பெற்றவர் செங்குந்தரே. ௯௧

பாவல ரான்மெச்சு மேழ்தீவத் துள்ளும் பவித்திரமா
நாவலந் தீவி னடராசன் கோயின்முன் னுகநவின்
றாவல்செ யாயிரத் தெண்டலந் தோறுநல் லாட்சியராய்ச்
சேவலற் போற்றி யெணினு டுறைபவர் செங்குந்தரே. ௯௨

ஆர்ந்தவக் ரார மரண்மன்ற மாவண கூடமயல்
சேர்ந்தநத் தம்பிவை தற்சூழ நாப்பண் செழுமணிபோல்

நேர்ந்த விடந்த மடவளா கம்மென வேநிறுவிச்
சேர்ந்த சுற்றத் தொடும்வைகுவர் காணிந்தச் செங்குந்தரே.

தகரிவர் வேள்விடத் தூதாய் மகேந்திரந் தன்னிற்புக்கி
அகலரும் வெஞ்சிறைக் கண்படு மும்பரை யாதரித்தீத
இகல்செயுஞ் சூர்கடைச் சேய்முது கென்பைத்த மீட்டியெனச்
சிகரியி னுட்டிநின் றாடிய வீரியர் செங்குந்தரே. ௬௪

மூவகைத் தீக்கையுட் டந்தை சமய முயன்றளிப்பத்
தாவில் விசேட நிருவாணந் தங்குலத் தந்தணர்கை
பாவபி டேகத்தர் பன்முறை யாய்ந்து பரிந்தளிப்பத்
தேவரு மெச்சப்பெற் றோங்கிநிற் பார்களிச் செங்குந்தரே.

அங்க மருண மவந்திசவ் வீரமொ டாந்த்ரமெழில்
தெங்கணம் வங்கங் கலிங்கங் குடகந் திகழ்துளுவம்
கொங்கண மச்ச மலையாள மாளவங் கோதில்சிந்து
சிங்கள மாதிய பல்தேயம் வென்றவர் செங்குந்தரே. ௬௬

அப்பணி வேணிய ராலால கண்ட ரன்பர்க்கெளியர்
ஒப்புயர் வற்றவர் தஞ்சிறு பாலரென் றெண்கவிகள்
தப்பில் புராணம் பரணி யுலாபிளைத் தண்டமிழ்முன்
செப்பும் பிரபந்த மெண்ணில பெற்றவர் செங்குந்தரே. ௬௭

காத்திரங் கொண்டழி தேவ ரிருடியர் கற்பனையாம்
சூத்திர கோத்திரம் போலா துலகங்க டுஞ்சிடினும்
சாத்திர மாறினுந் தான்மா றிடாச்சிவ சண்முகன்றன்
சேத்திர கோத்திர ரென்னப் பொலிபவர் செங்குந்தரே.

அந்தமு மாதியு மில்லான் பணிகொண் டறுமுகன்பால்
வந்தனை யாற்றித் தமைவரப் பெற்ற மனுகுலத்தோன்
சொந்தம தாமுசுப் பேராரு கேதங்க டொல்படைப்போர்
செந்தமிழ் நாவலர் கொண்டாட வைத்தவர் செங்குந்தரே.

நாமா புகல்வ திவர்வீர மம்மம்ம நான்முகனால்
ஆமா விதற்குக் கரிகே ரளவிறை யஞ்சவைத்துத்
தாமாகத் தங்குலக் கோதையிச் சித்தசந் தானமெனும்
தேமாங் கனியைக் கொணர்ந்தளித் தார்களிச் செங்குந்தரே.

பொய்வீக மேற்ற புலவர்முன் னேபல புன்கவிஞர்
மொய்வீக மொத்தபி மானத்தி னாற்பொருண் மோகத்தினான்
மெய்வீக மாட்டிக் குலவண்மை கூறல் வியப்பன்றெனத்
தெய்வீக நாட்டியவ் வண்மையைப் பெற்றவர் செங்குந்தரே.

### வாழ்த்து

அறுசீர் விருத்தம்

காணருங் கைலைக் கந்தக் கனவரை யாதி வாழ்க
பேணுறு சைவச் சின்னம் பெருகுக பிழையில் கீர்த்தி
பூணுமொன் பானென் வீரர் பொலிகுலம் விளைக தேவர்
சேணுல காள வைத்த செங்குந்தஞ் சிறக்க மாதோ.

## கலித்துறைமாலை முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க



## பின்கிடைத்த பிரதிகளில் கிடைத்தவை

பார்பெற்ற வுத்தமி காமாட்சி யம்மை பரிபுரத்தில்
பேர்பெற்ற கீர்த்தி யுடன்பிறந் தோர்கற்ற பேர்துதிக்க
நேர்பெற்ற நாடக மெல்லா நடிக்கு நிபுணர்பல
சீர்பெற்ற வாறியல் வல்லானை வென்றவர் செங்குந்தரே. க

விரகாக வேதங்கை வேலைவிட் டேபல வெற்றிகொண்டோர்
பரகாரி யங்களிற் பாவாடஞ் செய்யப் பயங்கருதார்
நரகாதி பாநின்மு னும்வரு வேஞ்சமர் நாளைக்கென்று
திரமாக வேநமற் கோலைவிட் டோர்களுஞ் செங்குந்தரே. உ

மருவுக்கு நல்ல கடம்பணி மார்பர்நல் வாகையுள்ளோர்
தருவுக்கு நல்ல கொடையுடை யோரிந்தத் தாரணியில்
வெருவுக்கு நல்ல கொடுஞ்சூர பன்மனை வெல்லுகின்ற
செருவுக்கு நல்லவர் தேவ சிகாமணிச் செங்குந்தரே. ௩

மருக்குங்கு மப்புய மாயேந்த்ர சூரன் மனவலியின்
பெருக்குங் கெடவிட்ட பேர்கள்கண் டீரெழிற் பேதையர்நெஞ்
சுருக்குங் கலவிக் குகந்தசிங் கார ருதாரகுணச்
செருக்கும் பெருமையு மெந்நாளு முள்ளவர் செங்குந்தரே.

ஆலசெங் குந்த ரமுதசெங் குந்தர்தம் மண்டலர்க்குக்
காலசெங் குந்தர் கடம்பணி செங்குந்தர் கௌரிதரு
பாலசெங் குந்தர் பழிதீர்க்குஞ் செங்குந்தர் பற்றுதவ
சீலசெங் குந்தர் சிவானந்த ராகுமிச் செங்குந்தரே. ரு

அல்வைத்த பூங்குழ லார்க்கித மேசெயு மாணழகர்
கல்வைத்த சிந்தைக் கயவரை யென்றுங் கருத்திலெண்ணார்
வெல்வைத்த கைத்தலர் வீராதி வீரர் விளங்கிநிற்கும்
செல்வத்தை நாளு முடையார்க ளியாரெனிற் செங்குந்தரே.

துறப்புடை யார்ருக்குத் தொண்டுடையார் சுகந்தோய் வுடையார்
மறப்புடை யார்ருக்கு மாமதி கூறும் வளமுடையார்
அறப்புடை யார்நட் பருகுடையா ரெங்கு மாண்மைகொளும்
சிறப்புடை யார்செல்வ மெல்லா முடையவர் செங்குந்தரே.

தாதாவென் றேற்பவர்க் கில்லையென் றுது தமக்குளதில்
ஏதா கிலும்பகிர்ந் தீவர்பன் னுள்சுமந் தீன்றளித்த
மாதாவி னுந்தயை வாய்ந்தவ ராயமர் வாய்களத்தும்
சேதா வெனநல் லிரக்கமுள் ளார்களிச் செங்குந்தரே. அ

ஆருடை யார்க்கென்று மன்புடை யாரணி யார்கடப்பம்
தாருடை யார்தந் தயவுடை யாரெண்ணிற் றைத்தியர்தம்
போருடை யார்வெற்றிப் பூணுடை யாரெங்கும் போற்றுமறச்
சீருடை யாரெனுஞ் செப்புடை யாரிந்தச் செங்குந்தரே. கூ

மாவைக்கைக் கொள்வர் வரிசைகைக்
கொள்வர் வளருமணிக்
கோவைக்கைக் கொள்வர் கொடையைக்கைக்
கொள்வர்பொற் கோயிலின்மெய்க்
காவல்கைக் கொள்வர் கருணைகைக்
கொள்வர் கடம்பணியும்
தேவைக்கைக் கொள்வர் சிவநாமங்
கைக்கொள்வர் செங்குந்தரே. கO

வேலுமயிலுந்துணை

தவள விடைநாதன் றுன்கர்ணொன் னெஞ்சே
குவளை வரையுடைய கோன்.

உ
சிவமயம்
முருகக்கடவுள்துணை

# த ச ா ங் க ம்

காப்பு

நீசாங்க விட்டியர் - தசாங்க முரைசெய
கசாங்க னடியிணை - வசாங்க மாமரோ.

மலை

பொன்னவிரும் பைங்கூரற் பூவையே செங்குந்த
மன்ன ருறையு மலைபகரா - யின்னலற
வந்தவரை யாதரித்தும் வாழ்வித்து மோங்கிவளர்
கந்தவரை நேரிவரை காண். க

யாறு

செம்பொற் சிறையனமே செல்வச்செங் குந்தமன்னர்
அம்பொன் கொழித்திடுநல் லாறியம்பா - யெம்பரையைத்
தங்கையெனக் கொண்டுவிணைத் தாங்கிமணைப் போற்றுசிவ
கங்கையுமொண் காவிரியுங் காண். உ

நாடு

கீதமிசைக் குங்குயிலே கேடில்செங் குந்தமன்னர்
நாதமொடு வாழ்தருநன் னாடுரையாய் - நீதமெனும்
பூணுரும் பல்கலைதேர் புண்ணியருங் கொண்டாடு
சேணாடுஞ் சோணாடுந் தேர். ௩

நகர்

ஆடுந் தொழின்மயிலே யங்கையிற்செங் குந்தமன்னர்
நாடும் புனித நகர்கூறாய் - பாடுபுரி
மந்தன் செருக்ககற்றி மாட்சியொடு காட்சிதரும்
கந்தனப யன்பதிகள் காண். ௪

மாலை

போதேறித் தேனுகரும் புள்ளேசெங் குந்தமன்னர்
தாதேறித் தேன்பிலிற்றுந் தார்மிழற்று - யேதும்
இரத்தல்செயா தியார்க்கு மிருமை நலநல்கும்
அரத்தமுநல் லாத்தியுமே யாம். ௫

குதிரை

தாலக் கிழங்கிற் றழைவாய்க் குருகேசெங்
கோலக்கை வேலரூர் கொக்கிசையாய் - ஞாலமிசை
மைச்சிரவர்க் கெட்டாத வானவர்கோ னூர்தருமுச்
சைச்சிரவங் கோரமெனச் சாற்று. ௬

யானை

அன்பிற் பிரிவரிய வன்றிலே செங்குந்தர்
இன்புற்றிவரு மிபமோதாய் - வன்புற்றெண்
காவதப்போ ரேனுங் கடிப்பொழுதிற் றேய்க்குறுமை
ராவதமா ரூர்சரமு மாம். ௭

முரசு

கேதஞ் சிறிதுமிலாக் கேகயமே செங்குந்த
நாதர் முரசு நனிவிளம்பா - யோதமெலாம்
சீதமொடு கூடித் திகழுங்கா லோங்கொலிகொள்
வேதமொடு வென்றியுமாம் விள். ௮

கொடி

நங்கையர்வேய்த் தோள்பழகு நாகணவா யேகுந்த
வங்கையர்தங் கேதனநீ யாய்ந்தறையாய் - துங்கமிகு
காவலொடு வைகித்தங் காவலர்மெய் காக்குமெழிற்
சேவலொடு வேங்கையுமாந் தேர். ௯

செங்கோல்

தீதி லருங்கற்பிற் றிகழ்புறவே செங்குந்தர்
நீதிதரு செங்கோ னிலைபுகலாய் - கோதில்பல
வானவரை மானவரை வாழ்விப்பா னெங்குமொன்றே
யானதனிச் செங்கோ லறி. ௧0

தசாங்க முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க

கருத்தணிய வென்னெஞ்சே கார்மருவு சோலைச்
செருத்தணியான் சந்நிதியைச் சேர்.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# ஊசல் முதலியவை

## க. ஊசல்

### காப்பு

**கூத்தாடும் பிள்ளையார்**

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

நீருலவுஞ் சடைப்பரம னுபய பாத
நெஞ்சின்மற வாத்துதிசெய் நேய ரான
பேருலவுஞ் செங்குந்தர் தங்கண் மீது
பிரபலஃமுட னூசற்பாட் டுரைக்க வேண்டிக்
காருலவு மணிமதில்சூழ் மயிலை வாசன்
கபாலீச ரருள்கயமா முகத்து நாதன்
சீருலவக் கூத்தாடும் விநாய கன்றாள்
சிந்தைதனிற் குடியிருத்திச் செப்பு வோமே. க

திருவிளங்கு நவவீரர் குலத்தில் வாழுஞ்
செல்வர்சொன்ன நாவிலங்கா வியல்பை யுள்ளோர்
மருவிளங்குஞ் செங்கடப்ப மாலை பூண்ட
மன்னவர்கள் சிவனீதி மறவா மைந்தர்
தருவிளங்குந் தேவர்புவி தழைக்க வாழ்வு
தருவோர்க ளூசலெனுந் தமிழைப் பாடச்
செருவிளங்கு மானைமுக விநாய கன்றாள்
சென்னியில்வைத் தறுதினமுஞ் சிந்தை சேர்ப்பாம்.

நூல்

பொன்னுலவு வாசவன்மால் பிரமன் விண்ணோர்
போரசுரர் வாதைவெள்ளிப் பொருப்பி லீசன்
தன்னுடனே யுரைக்கநுதல் விழியில் வீசுந்
தழற்பொறியி லறுமுகவன் றனைவா வென்று
பன்னுமசு ரேசர்குழா நாச மாகப்
படைசிதறத் தேவர்கடம் பயங்க டரா
மின்னுதனி வேல்கொடுபோய் வெல்வா யென்ன
வென்றகுகன் பின்னவரே யாடி ரூசல். க

வச்ரமணி யாற்கடைந்த கால்க ணட்டி
வைடூரி யத்திலுயர் விட்டம் போட்டு
பச்சைநிற மரகதத்தாற் கொடுங்கை சேர்த்துப்
பருநீல மணிப்பலகைத் தொட்டில் பூட்டி
நிச்சயச்செம் பொன்னின்வடக் கயிறு தூக்கி
நிலையாகச் சோடித்த வூசன் மீதே
கச்சிமா வடிக்கம்பர் பங்கில் வாழுங்
கௌரியுமை புத்திரரே யாடி ரூசல். உ

சந்திரகாந் தியிலொளிசேர் பட்டி னலுந்
தபனவொளிப் பட்டாலு மழகு சேர
அந்தமிகு சவரிகள்சல் லிகளுந் தூக்கி
யலங்காரக் கண்ணடி யொளிகள் வீசச்
சுந்தரமா கியசெம்பொற் குடங்கண் மின்ன
தூய்மணிமா ணிக்கவிளக் கெங்கு மன்ன
இந்தவிதமா யலங்கரித்த வூசன் மீதே
யியன்முருகன் றுணைவர்களே யாடி ரூசல். ௩

தருசின்ன டோல்துடிக்க மேள மோதத்
தவண்டையொலி கறங்கமிகு வேணு நாதம்
வருசின்ன மெக்காளை ருத்திர வீணை
மகிழ்சுரமண் டலநாத வொலிக ளார்ப்ப

ஒருவருக்கு முலகிலிந்தப் பெருமை வாரா
துரைக்கிலெனச் சகலவாத் தியமு ழங்க
குருபரன்ற ளிணைமலரைப் போற்றி நாளுங்
குடிபெறுஞ்செங் குந்தர்களே யாடி ரூசல். ௪

சந்தனங்குங் குமம்புனுகு களபம் பன்னீர்
சவ்வாது கூட்டிவட்டி றன்னின் மொண்டு
கந்தமிகு தோகையர்க ணிறைந்து பூசக்
கனசுகந்தக் கார்குழலார் வசந்த மாட
இந்துநுதன் மடவார்கள் பூப்பந் தால்விட்
டெறிந்துகையான் மருக்கொழுந்து மலரும் வாரிச்
சிந்துமழை போற்பொழியக் களித்த வீரச்
செங்குந்த மன்னவரே யாடி ரூசல். ரு

பெண்கள்பொன்னி னுலத்தி செங்கை யேந்திப்
பிரபலமுடன் சோபனமங் களமுங் கூறப்
பண்புடனே தியாகவசந் தங்கண் மீதிற்
பரவியிளங் கன்னியர்கள் வடந்தொட் டாட்ட
எண்சுருதி யிராகமுமெண் டிசையு மோங்க
வெழிற்றாள மிகுதிசைக ளெங்கு மார்ப்பக்
கொன்றைமுடிச் சடைப்பரமன் றாள்வ ணங்குங்
கொற்றநவ வீரர்களே யாடி ரூசல். சு

மாதவரு மறையோரு மாசி கூற
வண்டமிழோர் செந்தமிழான் மகிழ்ந்து வாழ்த்த
ஓதுபட்டுவ ரொருபாற் புகழ்ந்து போற்ற
வுகந்துகட்டி யக்கார ரெச்ச ரிக்க
ஆதிபஞ்ச வாத்தியத்தின் றொனிக ளெங்கு
மதிர்ந்துபெருங் கடலொலிபோல் முழங்கி யார்ப்பச்
சீதமதிச் சடைப்பரமன் சிறுவ ரான
செங்குந்த மன்னவரே யாடி ரூசல். எ

பழுதின்மொழித் தமிழொட்டக் கூத்தன் முன்னாள்
பகர்வளவன் சமுகத்திற் பரிவா யீட்டி
எழுபதுபாட் டுரைக்கமன மொருமை யாக
விசைசிரச்சிங் காதனத்தை யிட்டு நாளும்
வழுவிறமி ழுரைகேட்டும் பெருமை கொண்ட
வண்மையுள்ள நவவீர மன்ன ரான
உமைமழுப்பா ணியரடியைத் துதித்தே ஞான
முயர்செங்குந் தாதிபரே யாடி ரூசல். அ

அஞ்செழுத்து மந்திரத்தை யுன்னு தாரை
யரியமுத்தி தரும்வெண்ணீ றணியா தாரைத்
தஞ்சமெனச் சிவனடியைப் பணிசெய் யாரைத்
தருக்குடனே சிவாலயத்தை வலம்வா ராரை
வஞ்சனைபொய் யுரைநெஞ்சின் மறவா தாரை
வளர்சடையோன் றண்மனத்தில் வையா தாரை
வெஞ்சமறச் சிரந்துணித்து மகிழ்ந்து வாழும்
வீரசெங்குந் தாதிபரே யாடி ரூசல். கூ

அரிவையர்கள் பரதநட னங்க ளாட
வணிகொள்புவி யோர்களெல்லா மகிழ்ந்து பார்க்கப்
பரிவுடனே கவரியிரு பாலும் வீசப்
பகைவரெலாம் வணங்கிநலம் பாரித் தார்ப்ப
வரிசைமலர்ச் செங்கடப்ப மாலை பூண்ட
வையமெலா மிகமணக்கும் வளமை யுள்ள
குருகருணை தழைத்தவரே யுயர்ந்த கோழிக்
கொடிவிருது படைத்தவரே யாடி ரூசல். கo

பட்டாடை யசைந்தாட மார்பி லிட்ட
பதக்கம்பொற் சரப்பணிமுத் தார மாட
விட்டாரத்தி னக்கடுக்கன் காதி லாட
வெழில்வீசுஞ்செங்கடப்ப மாலையாடச்

சுட்டிகண்ட சாமணப்பூ மாலை யாடத்
தொடுத்தநிறை பூடணத்தி னிழல்க ளாட
மட்டவிழ்மா மலர்நிறைந்த வூசன் மீதே
வல்லானை வென்றவரே யாடி ரூசல். கக

வாசமலர் முடித்தளக பாரம் பூண்ட
வனிதையர்க டிருத்தியநல் விரல்க டம்மில்
தேசுறுபொற் பவுத்திரமு மப்பொன் னாலே
திகழுநுதற் பட்டமுஞ்சுட் டிகளுந் துன்ன
காசுமுத்து நவரத்னக் கடுக்கன் சோடு
காதிலணிந் தவ்வவற்றி னொளிகண் மின்ன
வாசவன்விண் ணோர்கள்சிறை மீட்டிந் திராணி
மங்கிலியந் தந்தவரே யாடி ரூசல். கஉ

நாவிலங்கா மைந்தர்பட்ட மானங் காத்த
நவவீர நாயகரே யாடி ரூசல்
பாவிசைக்கும் புலவோர்கண் மிடிக டீரப்
பரிசளிக்கும் பார்த்திபரே யாடி ரூசல்
தாவுமயின் மீதேறுஞ் சுப்பிர மணியச்
சாமிதுணை யானவரே யாடி ரூசல்
கூவிமுப்போ தினையுநித மழைக்குங் கோழிக்
கொடிவிருது படைத்தவரே யாடி ரூசல். கங

காலன்முறி படவெழுதி யோலை விட்ட
காளைநவ வீரர்களே யாடி ரூசல்
சூலமழு மான்கொளரன் மைந்த ரென்ற
சொல்லுயர்ந்த நாயகரே யாடி ரூசல்
சீலமுட னஞ்செழுத்தைத் துதித்தெந் நாளுஞ்
சிவபூசை துரந்தரரே யாடி ரூசல்
ஆலகண்ட னம்பரனம் பிகையைப் போல
வவரவர்தம் மனைவியரோ டாடி ரூசல். கச

கயிலையொடு மேருவினைச் சூழ வேமெய்க்
காவல்கொண்ட காவலரே யாடி ரூசல்
பயனறிந்தே யடைக்கலமென் றடைந்த பேரைப்
பரிவுடனு தரிப்பவரே யாடி ரூசல்
தயவுதரும் பதவியிலெந் நாளும் வாழுஞ்
சற்குணமுண் டானவரே யாடி ரூசல்
அயனொடுநா மகளரியோ டாக்கம் போல
வவரவர்கண் மனைவியரோ டாடி ரூசல். ௧௫

---

## உ. வாழ்த்து

திருமாலுந் திருவும்போல் வாழி வாழி
சித்தசனும் ரதியும்போல் வாழி வாழி
புருகுதனுஞ் சசியும்போல் வாழி வாழி
பூவுலகி லனைவோரும் வாழி வாழி
மருவுறுநற் செங்கடப்ப மாலை பூண்ட
மன்னரெனுஞ் செங்குந்தர் வாழி வாழி
அருமறையுஞ் செங்கோலும் வாழி வாழி
யவரவர்கண் மனைவியுடன் வாழி வாழி.

---

## ௩. லாலி

இலாலியய னுலக நாட்டியதைப் புரக்க
நாரணனைக் கூட்டியரா னுல்வினைகள் வீட்டி
சீலமொடு நின்றருள்செய் சிற்பரைநின் பாதச்
சிலம்பில்வரு மைந்தர்குலஞ் சிறக்க வருள்வாயே லாலி

இலாலிமயி டாசுரன்செயு நலிவை யகற்றி
நானிலத்தைக் காத்தநின் நளினபதச் சிலம்பில்
கோலமொடும் வந்தநவ வீரரெனு மன்னர்
குலம்விளங்க வேயருள்கூர் தல்செய்யு மம்மா லாலி

---

## ச. எச்சரிக்கை

தேரூர்திருத் தணிகாசல தேவ னுடன்வந்த
சீரூர்திரு வாரூர்குந்தத் திறலோர் எச்சரிக்கை.

காரார்திரு மிடறூர்வழி கண்டோர் புவிபோற்றும்
தாரார்திரு தோளார்சிவ சார்பார் எச்சரிக்கை.

செந்தார்திரு மார்பார்குக சேன பதியம்மை
நந்தாய்திரு கச்சிப்பதி நாட்டார் எச்சரிக்கை.

---

## ரு. பெரியகட்டியம்

அருளோங்கு கயிலையங் கிரியிலர னருள்குகற்
கருசர்கை யேந்துகுந்தம்
அம்பிகை யகங்களித் துலகுய்ய வவர்கரத்
தங்கைகொடு தந்தகுந்தம்
அண்ணரிய வெள்ளிவரை பொன்வரை யிடைக்குரவ
ரருள்காவ லேற்றகுந்தம்
அமரர்துயர் கெடவவுண வேட்டஞ் செயக்கருதி
யறுமுகனொ டேகுகுந்தம்
அந்தமிகு கந்தமா தனமெனும் வரைமீதி
லாண்மைகொடு நின்றகுந்தம்
அலையெனுங் கரம்வீசி யொலிகொண் டெழும்பெரிய
வாழ்கடல் தாவுகுந்தம்
அடலவுண சேனைகட் கதிபர்வாழ் லங்கைகட
லாழமே லோங்குகுந்தம்
அணிமிகு மயேந்த்ரபுரி யண்மிசிறை யிடைபடுஉம்
அமரரைத் தேற்றுகுந்தம் வ

இருளோங்கும் வன்மனச் சூரனவை யேறிமே
விழியா தனங்கொள்குந்தம்
இகலவ னுளங்தெரிந் தோங்கியம ரேற்றவரை
யீர்த்தழித் திட்டகுந்தம்
இன்னுமை புரியிராக் கதர்சூழு நகரினை
யிடித்துதுக ளாக்குகுந்தம்
இளையசுதன் வச்சிரவா குவைவதைத் தவன்முது
கென்பினின் றூடுகுந்தம்
இரணியனை வெங்கண்டொ ரெரிமுகன் மூவாயிரவ
ரின்னுயிரை வீட்டுகுந்தம்
இடியே றெனத்தரும கோபனு தியவமைச்
செண்ணிலரை வாட்டுகுந்தம்
இரவிபகை வனைமாய்த்துச் சிங்கமுக னைச்செகுத்
திணையிலா தோங்குகுந்தம்
இனியமர்க ளிலையெனுச் சூரன் புலிக்கொடியை
யெய்திப் பறித்தகுந்தம்

பொருளோங்கு தண்டமிழ்ப் புகழோங்க மநுகுலம்
போந்துலகை யாண்டகுந்தம்
பொன்னுலகர் பரவுமுசு முகமன்ற னுதுபெயர்
போற்றவுற வேற்றகுந்தம்
பொங்கிய மனுக்கோலை போக்கியவன் மனைவவ்வு
பொற்கிள்ளை பெற்றகுந்தம்
பொருவில்சந் தானமாங் கனியினுக் காக்குடம்
புக்கிவிறல் கொண்டகுந்தம்
பொதுநீக்கி யாடுமா காளிகைத் தாளம்
பொருக்கெனக் களைசெய்குந்தம்
பொற்பாரும் வேதகிரி யுற்றசம் பாதிவினை
போக்கியமு தீந்தகுந்தம்

பொய்த்தா லயம்பெறு வயனையொரு முனிவன்
பொருட்டான் முனிந்தகுந்தம்
பொடிதவில் வலிகொள்வல் லானையென் றவன்மனைவி
போற்றவுயிர் தந்தகுந்தம் ௯

தெருளோங்கு தில்லைமா காளிநிலை கொண்டாழ்ந்த
தேரோட விட்டகுந்தம்
தெரிவருந் தேயமெண் ணிலவென்று திரைதரத்
தேய்த்திடா தாண்டகுந்தம்
தெளிகொளா ருயிரெலாஞ் சிந்தித்த வெய்தபல்
சிவாலய மமைத்தகுந்தம்
தெற்றியினு மில்லினுந் தன்னைவழி படுவோர்க்கெண்
சித்திதந் தாள்செய்குந்தம்
தெய்வமறை யோதுபஞ் சாக்கரஞ் செபியாத
தீயர்வாய் சீச்செய்குந்தம்
தெண்மைதரு வெண்ணீறு டக்கமணி புனைகலாச்
சிதடர்மெய் சிதைசெய்குந்தம்
தெறிதராச் சிந்தையொடு தனையருச் சிப்பவரைச்
சிவபதத் தேற்றுகுந்தம்
தெண்டிரைக் கடல்சூழு முலகில்லைக் கோளர்தஞ்
செயவீர செங்குந்தமே. க

---

## சா. சின்னகட்டியம்

வஞ்சகம தாகவீ ருணமெனு மேரியிடை
வகைபெறத் தூண்கணிறுவி
மண்டபங் கட்டிமற் றதிலிருந் தெண்டிக்கின்
மன்னரை வதைத்தவல்லான்

செஞ்சிலைத் திறமும்வாள் தீமையுங் கண்டமால்
தீவினைகள் வந்தவெனவே
சிந்தைகொ டவன்றனைச் சிதைசெய்வகை யாய்ந்தினித்
தினையளவு போதுமுவனை ௬

விஞ்சவிட லாகாதெ னச்செவ்வே டுணைவர்தம்
விழுக்குலத் தவர்களல்லால்
வேறொருவ ராலணுவு மாகா தெனத்தேறி
விண்ணவர் வியப்பவிலகும்
பஞ்சவன மேயவிரு துக்கொடி முனைஞ்சீர்
படைத்தசெங் குந்தர்கடமிற்
பன்னிருவர் கையிலே வெற்றிலைப் பாக்கினைப்
பரிவாக வேயளிக்க ௭

கொஞ்சிகை கொட்டிக் குதித்தோடி வழியினேர்
குமரியிரு வர்க்கிருவருங்
கூவுபரி யாப்பினுக் கொருவனு முயிர்தந்து
குரைசெய்நாய் புலிகரடிகள்
மிஞ்சிடா வண்ணநால் வர்கடுணிந் தழன்மீது
மீறியொரு வன்படுக்க
மேலேறி யகழ்முதலை வாய்க்கொருவ னும்வயிர
மேயகாற் கொருவனுமுயிர் ௮

அஞ்சாம றந்துபின் வல்லா னிடத்திருவ
ர ணுகிபொற் றலையாணைகோல்
அணிமாய விரதநால் வகைசால பரிசேனை
யாதியை யவன்றரக்கொண்
டெஞ்சாத வன்மனைவி வேண்டமீண் டபயற்கு
மெழிறில்லை யரனடிக்கும்
இணையில்தஞ் சிரமளித் துலகர்தொழ பதின்மரொடு
மீறில்பத மடைசீலரே. ௯

## எ. மங்களம்

செயமங்களம் நித்திய சுபமங்களம்

அறைகாவல் மெய்க்காவ லமைந்தநவ வீரர்க்கும்
அறுமுகவன் றுணைவரெனு மரசர்கள் தமக்கும்
நறுமலர்ச்செங் கடப்ப மாலையணி மார்பர்க்கும்
நாவிலங் காதருள்செய் நாய கர்க்கும்
செயமங்களம்

ஆதிசத்தி பாதச்சிலம்பி லவதரித் தவர்க்கும்
அமரர்சிறை தனைதீர்த்த வருளாள ருக்கும்
சூதுசெயு மசுரர்களைச் செயித்துசெயங் கொண்டவர்க்கும்
செங்குந்தச் சிவநீதி தெளிவள வருக்கும்
செயமங்களம்

கயிலாய மலைக்காவல் காக்குமுயர் நாயகர்க்கும்
கருதரிய கோழிக் கொடிக்கதி பருக்கும்
பயனுதவுஞ் சிவசமய பத்திபரி பாலகர்க்கும்
பட்சமாய் நகர்காத்த பண்புள்ள வருக்கும்
செயமங்களம்

ஊசல் முதலியவை முற்றின

---

## செங்குந்தர் பிரபந்தத்திரட்டு முடிந்தது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க



நங்கல்விக் காய நலம்பெறலா நன்னெஞ்சே
செங்கல்வ ராயனடிச் சேர்ந்து.

உ
சிவமயம்

# திருவொற்றியூர்ச்
# செங்குந்தவி நாயகர்மாலை

## காப்பு

### நேரிசைவெண்பா

ஒற்றிச்செங் குந்தனென்றே ரோங்கன்மே ளுட்பரவும்
வெற்றிச்செங் குந்த விநாயகற்கு - முற்றித்
தணிந்துயவு தீர்தமிழ்ச்சொ றண்மலரான் மாலை
யணிந்துயவன் றான்று ளரண்.

## கட்டளைக்கலித்துறை

பொன்னின் றவிருருப் பூவையைச் சூள்கொடு போய்மகிழ்க்கீழ்
வன்னின்ற தொண்டற் கருள்வான் புடைவடி வாம்பிகையென்
மின்னின்ற கற்கிக்கு மேல்பாற்றென் கோணத்துண் மேவினனெம்
வின்னின்ற சீரொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. க

வக்ர துண் டங்கொடு வானுயர் மூவரை வாய்மடுத்தங்
குக்ரபல் லண்ட வுருக்காட்டிக் கன்மத்து ளோங்கவிடுத்
தக்ரமெய்ப் பூசனை யாற்றப் பெறீஇயரு ளண்மிநின்ற
விக்ரம னேயொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. உ

கண்டோ யொளியிற் கருத்தூடு நின்று கவின்செயுநின்
தண்டோ யுருளுக்குந் தாழ்வுண் டுகொற மியேன்மனத்தே
திண்டோய மாணவந் தீர்தர வாண்டருள் செய்வதெந்நாள்
விண்டோய் பொழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

களங்குன் றிடாத மனத்தோர்க ணிற்பநின் காமர்கஞ்ச
வளங்குன் றிடாத்துணை வார்கழற் றாளை வழுத்துனர்தம்
உளங்குன் றிடாரெனி லியான்குன்று மாற்றி லுறுவதென்கூ
விளங்குன் றிடாவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

நதிபல வுக்குமோ ரம்போதி யென்னவிந் நானிலத்துள்
மதிபல கோடி சமயர்க்கு நீயொரு மாமுதலாய்த்
துதிபல சேதனர்க் குள்ளொளி யேமறை சொன்முதலின்
விதிபல வேயொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ரு

தாயா யிளமுலைப் பாலு மறுசுவைத் தண்ணமுதும்
காயா தளித்தருந் தந்தையிற் கல்வி கரைத்தருளி
மாயா மலங்கெட வாரிய னாய்நின்ற வள்ளலன்பில்
வீயாம லாலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௬

நினையோர் குனர்க்கன்றி யல்லார்க்கு நின்னிடை நீளருளில்
தினையோ ரளவுமென் பாலிலை யேலென தீமையென்னே
மனையோடு மக்களி னேடுமா ழாந்து மயங்குவதெவ்
வினையோ திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. எ

கழிப்பதெந் நாள்புன் னெறியாவுஞ் சோரக் கவின்மனத்தில்
கொழிப்பதெந் நாணன் னெறியாவு மித்தைக் குவலயச்சீர்
பழிப்பதெந் நாள்பர மானந்த வாழ்வினைப் பற்றியதில்
விழிப்பதெந் நாளொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

நாடுறு மோர்வெனை நல்லருள் வாழ்வு நலந்தெரிந்து
கூடுறு மோமன மெய்ஞ்ஞான போகங் குணங்கடந்து
நீடுறு மோநிம லானந்த மோனமின் னேவினையும்
வீடுறு மோவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௬

எண்ணற் கரும்பல வல்வினை யாவு மெனைக்குழுமி
நண்ண வருந்துயர்க் கென்கட வேனவி னுற்பயனும்

மண்ணவ ரெய்த மதகய மாமுகம் வாய்ந்துலவா
விண்ணவர் சூழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧0

நாறுங் கமல நயனனும் வேதனு நாடருமே
றேறும் பரம னெயிலொரு மூன்று மெரித்தவஞ்ஞான்
றீறின் முதன்மைநிற் காக்கின னேனினை யேய்பவர்யார்
வீறும் பொழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧௧

நஞ்சும் பனிக்குங் கணூரியர் மோக நரலையில்வீழ்ந்
தெஞ்சுஞ் சிறுவருள் யான்றலை நிற்ப திழிவதன்றோ
பிஞ்சுங் கனியுமொப் பேன்பிழை தீர்த்திநற் பேறனைத்தும்
விஞ்சுந் திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧௨

துளையு மிடறு நரம்புநற் கஞ்சமுந் தோலுமென
வளையு மியமிய மண்டமுந் தூர்ப்ப வருமறையின்
கிளையு முனிவரர் கேண்மையு மியாண்டுங் கெழுமவறம்
விளையு மெழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧௩

கழையிலம் பூவினைக் கார்முகத் தம்பெனக் காட்டுமதன்
உழைசிறு மானி னுழல்வேனுக் குன்னரு ளொட்டுமதோ
விழைபல கொண்ட விளம்பிடி யார்மய லெய்தலிலார்
விழைதரு நல்லொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧௪

மதியோ சிறிதுமென் மாட்டிலை மாதர் மயக்கின்மனக்
கதியோ விருகணுங் காணுக் கதியென்றன் கைபடைத்த
நிதியோபொய் வஞ்சங் கொலைமுத லாமெனி னீடலைக்கென்
விதியோ திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧௫

நல்லார் குழுவினை நாடொரு போது நயந்தறியேன்
பொல்லார் குழுவிடைப் புக்குநின் றுடலைப் போக்ககிலேன்
எல்லா மறிந்துளநீ யாத லினெனக் கென்கதிகாண்
வில்லார் தருமொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ௧௬

கூடாப் பொருட்குளம்குன் றிநைவே னங்கை கூடியென் றும்
வாடாப் பொருளைநல் வாழ்க்கையிற் பேண வகையறியேன்
தேடாப் படிக்குன் றிருவரு ளின்றெனச் சிந்திக்கிலேன்
வீடாப் புகழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. கஎ

பருப்புறு வெம்முலைப் பாவைய ராவலிற் பட்டெளியேன்
நெருப்புறு வெண்ணெயி னெய்த்தலை வேனினை நேரரியா
விருப்புறு வன்மனத் தேனுக்கு நின்னரு ளெனும்வகை
விருப்புறு மோவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

இலங்கையர் கோனைவிண் ணெற்றிச்சென் டாடி யிரங்கவிடுத்
தலங்கல்செய் வாழ்க்கை யளித்தாண்ட நின்னரு ளாயுமதோ
துலங்குசெஞ் சாலி வயறொறு மள்ளர்க டுன்னவனம்
விலங்குறு சீரொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. ககூ

எண்ணிற் பெரிய ரெடுத்தோது நல்லறத் தெய்துகிலேன்
மண்ணிற் பெரும்பவ மாற்றும்புன் மாந்தர் மருங்ககலேன்
கண்ணிற் றிகழொளி போன்றன்பர் யாரையுங் காத்தருள்வான்
விண்ணிற் பொலியொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

பொன்னியிப் பூதலம் யாண்டும் பொலியப்பொதியன்றன்பான்
மன்னிய மந்தா கினிசேர்நற் கன்னலை வாயசமாத்
துன்னிமண் சாய்த்தவன் றுன்பகல் வித்தநின் சூழலென்னே
மின்னியர் சூழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. உக

திரிபொரு ளுண்மையிற் சிந்தையற் றூளல் செயுஞ்சனகன்
பரிபவந் தீரப்புல் யாசித் தவன்றன் படரொழித்துக்
கரிபல காட்டித் திரிசிர நற்றவர் காத்தளித்தாய்
விரிபொழில் சூழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

கமலா சனனுங் கருடப் பரியனுங் கார்வையனு
மமலார் கலியிடை மூழ்காத யோக முனிவரும்

•

•

•

துமலா தியவொழி சுத்தரும் பத்தருஞ் சூழ்ந்துதொழும்
விமலர் திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. உரு

தொட்டோரைக் காயு மனலினு முள்ளத்துட் டோன்றல்செயப்
பட்டோரைக் காயும்வெங் காமம் பொலாததிற் பாவியனேன்
மட்டோர்த லின்றி மடிந்தேன் புரந்தருள் மாயையற
விட்டோர் புகழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

பொய்யோ வெனக்குப் பொருந்துண வாம்புலை யுங்கொலையும்
ஐயோ நிதம்புரி யான்மார்த்த பூசனை யாங்கனவுள்
மெய்யோ மருந்துக்கு மேவரி தேலுனை மேவலெங்ஙன்
வெய்யோர் விளியொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

கடுகடென் றேகின் னரனுரு மாகு கரந்துபுக்கி
மடுமடென் றேதவர் மன்னிடங் கெல்லி மறைகறிப்பக்
குடுகுடென் றேவலித் தூர்ந்தோட்டி யாண்ட குழகமறம்
விடுவிடென் றேதொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

மாலோன் றரும்பெண்க ளாறிரு வோரையு மாமறையென்
நூலோன் றரும்பெண்க ளோரிரு வோரை நூங்குவவுண்
மேலோன் மரீசி தரும்பெண் ணையுநனி வேட்டடல்கூர்
வேலோன்ற னேடொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

அடையு மவருக்க ருவினை போக்கு மறுகொன்றினல்
விடையுங் காமும் புலைச்சியு நன்முத்தி வீடுபெறப்
புடைநின் றருடரும் புண்ணிய னேபுனி தஞ்சிறந்தோர்
மிடையுந் திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

அம்புவி யோர்க்குன் னருள்பெற் றருந்தமி ழாமறையை
உம்பரும் வாழ்த்த வுகந்தளித் துன்பணிக் கோவலிலா
நம்பியை யாண்ட நலத்தினை நீநிற்க நான்றுயரால்
வெம்புவ தோவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

அரும்பா முலைச்சிறு பேதையர் தாமு மவநசையால்
இரும்பா மனத்தரு மாற்றுரென் றேசவென் னேந்திழையைத்
திரும்பா வணங்கவர்ந் தீண்டுறில் யான்றனி சீவிப்பதோ
விரும்பா ரிலாவொற்றி யூர்வாழ் செங் குந்த விநாயகனே.

கரும்பி னிரதமுந் தேனு மளேஇயதென் காண்சொல்கொடு
சுரும்பு ஞிமிறுந் தொடர்நறும் பூவிற் றொடுத்தடியேன்
பெரும்புன் பவங்கெடப் பேணிநின் மூர்த்த பிணையலைமேல்
விரும்பு மெழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.

## வாழி

வாழிதிரு வொற்றியூர் வாழிவடி வாம்பிகைத்தாய்
வாழி யவள்கணவன் மக்களுடன்—வாழியவே
இந்தப் புவியில்வள ரெவ்வுயிரு நன்னடையில்
குந்தப் பெரியருடன் கூடி.

திருவொற்றியூர்ச்

## செங்குந்த விநாயகர்மாலை முற்றியது

வேலுமயிலுந்துணை

செங்குந்த விநாயகன் திருவடிவாழ்க



அனுபந்தம் - உ

# செங்குந்தசிலாக்கியர்மாலை

காஞ்சி வீரபத்திர தேசிகர்

கரணங்க ளெல்லாங் கடந்தோர்கள் போற்றும்
பிரணவார்த் தக்கிரியைப் பேசு.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# செங்குந்தசிலாக்கியர்மாலை

## காப்பு

### நேரிசைவெண்பா

கமலன் முதலாக் கழறுபெருந் தேவர்
முமலமொழி யத்தி முகனே—யமலனருட்
சீரார்செங் குந்த சிலாக்கியர்மா லைசொலநீ
நேராயென் னுவுவந்து நில்.

### சண்முகக்கடவுள்

பொன்னுல கோரவுண் போர்க்குடைந் துற்ற பொழுதமலன்
முன்னுறு மாறு முகக்கண் பொறிதர முற்றிவெஞ்சூர்
மன்னுறு மாயேந் திரபுரி நண்ணியம் மாற்றலனைத்
தின்னுறும் வேல்கொண்ட செவ்வேள்செங் குந்த சிலாக்கியரே. க

### நவவீரர்

அரனவுண் மாள வுகுத்த வனற்பொறிக் கஞ்சுமுமை
வரமுறு தாட்சிலம் பின்மணி யொன்பதுண் மன்னியெழும்
உருவொளிச் சத்திகண் மாட்டுதித் தீட்டி யுவளருளச்
செருமுகங் காணவ வீரர்செங் குந்த சிலாக்கியரே. உ

### இலக்கவீரர்

உமையி னுருவொளிச் சத்திக ளஞ்ஞான் றுமாபதிதன்
இமையு மருள்கொடு சூளுத லும்முவ ளேய்சினத்தால்
சமையும் வியர்விற் கரவாளி னேடுஞ் சனித்துக்கந்த
சிமைய முறுமிலக் கத்தோர்செங் குந்த சிலாக்கியரே. ௩

### ஆயிரத்துத் தொள்ளாயிரவர்

பாடா ருமிலக் கத்தொன் பதின்மர் பயந்தளித்த
ஓரா யிரத்துத்தொள் ளாயி ரவர்கண்மற் றூழிமுதல்
பேரா னிறைந்த பெரியோ ரெனப்பல்ப்ர பந்தம்பெற்ற
சீரான ரோடவர் செல்வர்செங் குந்த சிலாக்கியரே. ச

### திருக்கச்சி யாளவந்த வள்ளலார் மடாலயச் சைவாசாரியர்

அன்று ளுடைப்பிள்ளை கண்டோங்கும் பாளய மாகிக்கச்சி
நின்றுடு மூருட் சமயாதி தீக்கை நிறுவிமுத்தி
குன்று வகையிற் றந்தாளவ ரும்வள்ள லார்குழுவிற்
சென்று டுரிமையர் யாருஞ்செங் குந்த சிலாக்கியரே. ரு

### திருவாலங்காடு கார்க்கோடக மடாலயச் சைவாசாரியர்

முக்கண னெண்டோண் முதல்வனோர் தாளண்ட முட்டவிட்டங்
கொக்கரின் றுடு மமரியை வென்ற வுலப்பினலம்
புக்குறு மால வனத்திற்கார்க் கோடன் புரிமடத்தெண்
டிக்கும் மெச்சக்கலை தேர்ந்தோர்செங் குந்த சிலாக்கியரே. சு

### திருவழூர் வேதநாயக மடாலயச் சைவாசாரியர்

பூசல்வெண் ணீறும் புலம்பனல் மாபெரும் புகனரகென்
றேசி யிகலால் வழுவுவித் தோநிறை முன்னிலமை
பேசியேகி ஞன்மறை யோதக் காட்டிவேதப் பெருக்கின்
றேசுறு நாயக ரென்போர்செங் குந்த சிலாக்கியரே. எ

### மெய்கண்ட சிவாசாரியர்

முந்தடன் மொய்ம்ப னருந்தவ மாற்று முசுமுகனை
நிந்தைசெ யூழ்முறை நிற்ப வுலகி னிரீச்சுரர்கோள்
உந்த மகதி முனியா ஞரிடத் தோதவுவை
சிந்தச் சுவேதத் துதித்தோர்செங் குந்த சிலாக்கியரே. அ

### இளைநாட்டு மடாலயச் சைவாசாரியர்

பண்டெம தன்னைப் பரனு ரிடம்பெறப் பண்ணுறுநற்
றொண்டி னிலைமைக் கிடுமெல்லை நான்கையுஞ் சூழுமொன்பா
னெண்டனி நாட்டு ளுறைகைக் கோளருக்கிருந் தீக்கைசெயும்
திண்டியை யொப்பவர் யாருஞ்செங் குந்த சிலாக்கியரே. கூ

### திருக்கச்சிமாவடித் தேவசிங்காசனாதிபதிகள்

காவல ராகிப்பன் னாட்டுளு மேழ்விவ காரமெலாம்
சேவகத் தோடினி தாய்ந்து நடுநிலை தேர்ந்துரைப்பான்
மாவடிக் கீழண்டர் சூழும் மண்டல மன்னவரால்
தேவசிங் காதனம் பெற்றோர்செங் குந்த சிலாக்கியரே. க0

### திருவாரூர் முதலிய சத்தவிடங்கத் தாபகர்

பாரளந் தோனன்று பூசித் திடர்கெடப் பண்ணவர்கோக்
கார வளித்துள வண்ணலை வேண்டி யவனியுளோர்
பூரண வாழ்வுற வாரூர்மு னுமெழு பூம்பதிக்கண்
சீருறத் தாபித்த மேலோர்செங் குந்த சிலாக்கியரே. கக

### சிவாலய குகாலய தருமகர்த்தத்துவ பரிபாலன ஆட்சியோர்

சோனாட்டு னுந்தொண்டை மானாட்டுளு மஞ்சு ராதியரால்
பேணுநின் றோங்குமெம் பிஞ்ஞகன் கந்தன் பிறங்கிநிற்கும்
மாணர் நிலைய பரிபா லனத்தொழின் மன்னவென்றும்
சோணாடர் போற்றிடச் செய்வோர்செங் குந்த சிலாக்கியரே.

### தில்லைக்கொடி யேற்றுவித்தோர்

தம்புக ழோங்கநூ றேய்ப்பா குனுமிறை தன்கூபரத்
தும்ப ரமுதி னெழுகு மதையு னுமாபதியால்
அம்பல வன்றுச மேற்றுமா திக்கமொ டார்கொடிப்பா
செம்பிய னேத்திடப் பெற்றோர்செங் குந்த சிலாக்கியரே. கங

## திருமூலதேவர்

ஒப்புயர் வற்ற சிவாகம மேழ்நான்கி னுண்மையெலாம்
எப்புவ னத்தும் விளங்கவா மேக்கி யிறந்தவுட
லிற்புகுந் தாண்டுக்கொன் றாகவே மூவா யிரமனுவைச்
செப்புறு ஞானக் கதிரோர்செங் குந்த சிலாக்கியரே. கச

## காரித்தேசிகர்

ஆரண மோது மபிடேகர் தம்மி லவதரித்துப்
பூரண நற்றமிழ்க் கோவைகள் பாடிப் புரவலர்பால்
ஏரண வப்பொருள் கூறிப்பொன் பெற்றிறை யின்பணிகள்
சீரண வச்செய் திறலோர்செங் குந்த சிலாக்கியரே. கரு

## நரசிங்கமுனையரையர்

ஒருநூறு பொன்னை யுலப்பிலி நாட்சைவ வுத்தமர்க்குத்
தருநூறி லன்புக் கெதிர்தூர்த்த வேடன் றனித்துறலும்
இருநூறு பொன்றந் திகலும் புறமத ரேவிடும்பல்
செருநூறும் வாழ்க்கை சிவண்வோர்செங் குந்த சிலாக்கியரே.

## இடங்கழிப்பெருமான்

தன்னர சிற்சைவ மாணெறி வைதிகஞ் சார்நெறிகள்
மன்னுறு நாளி லரன்றொண்டர்க் குண்டி வழங்கலற்ற
வின்னலொ டேநெற் களவாடு வோன்மு னிணையவரே
தின்ன நிதியும் விடுத்தோர்செங் குந்த சிலாக்கியரே. கஎ

## முனையவள்ளல்

பொருந்தலர் போர்க்குடைந் திட்டோர்க்கெந்நாளும் புகலிடமாய்
இருந்தவர்க்காடெய்தச் சென்றமர்வென் றதி லெய்திடும்பொன்
விருந்த ரருந்தவர்க் காக்குத லன்றி விமலனிடம்
திருந்து பணிக்கு மளிப்போர்செங் குந்த சிலாக்கியரே. கஅ

## பெருமிழலைப்பெருந்தகை

கருக்கலை நேர்குழற் சங்கிலி கேள்வனைக் காதலித்த
பெருக்கம தாற்சித்தி யாவையும் பெற்றவன் பிஞ்ஞகன்பால்
இருக்கை பெறலறிந் தாற்றுது யோகி லிணங்கிமுன்னர்
திருக்கயி லைப்பதி மேயோர்செங் குந்த சிலாக்கியரே. கக

## மெய்ப்பொருண்மூர்த்தி

பன்முறை யாயோ தனத்தெய்த்த மேவலன் பட்டிமையால்
கொன்முறை யாய்ந்தான் சின்னங் குலவுறு கோலமுடன்
சொன்முறை நூல்கர வாண்மறைத் தெய்தச்சோர் வின்றியுயிர்
சென்முறை செல்ல விடுத்தோர்செங் குந்த சிலாக்கியரே.

## சத்தியண்ணல்

அண்டார் புரத்தைச் சிரித்தெரித் தானை யவன்பொறியைத்
தொண்டா தரிக்கு மவனடி யாரைத் துணிந்திகழ்நாத்
தண்டாயஞ் சிக்கியொள் வாளாற் றறிபடத் தக்கணமே
செண்டா யுதனிற்செய் தீரர்செங் குந்த சிலாக்கியரே. உக

## செருத்துணைக்குரிசில்

பாராளு மன்னவன் றேவிமுக் கண்ணற்காம் பைம்மலரென்
றோரா ளெடுத்துமோந் தேகலுங் கூந்தலீர்த் தொண்ணயில்
வாரார்ருங் கோண மறிந்தவள் கேள்வன்கை வாங்கவிட்ட
சீரார்சொன் மாலை யுடையோர்செங் குந்த சிலாக்கியரே.

## கோட்புலிச்செம்மல்

வேயைவெல் தோளிபங் கன்றொண்டர்க்கென்று விசித்தநெற்றீ
நோயையாற் றுதினத் தோருணக் கண்டுள றொந்துதந்தை
தாயை மனையைத் தமரை யவர்மூலைத் தண்சுதையுண்
சேயை யசிகொடு மாய்த்தோர்செங் குந்த சிலாக்கியரே.

## கூற்றுவத்தலைவர்

ஏர்சான்ற செம்பியர்க் கல்லா லிடோமுடி யென்னத்தில்லை
யூர்சான்ற வந்தண ரோதவு மாகுல முற்றரன்றாள்
ஏர்சான்ற மாமுடி யாகுற வேண்டி நெடுங்கனவில்
சீர்சான்ற வாதுபெற் றாண்டோர்செங் குந்த சிலாக்கியரே.

## எறிபத்தநாயனார்

என்று மலர்பறித் தேற்றார்திக் கார மியற்றுந்தொண்டர்
நின்றல றச்சிந்துந் தும்பியொ டைவர் நெடுமழுவால்
பொன்ற விடுத்திறை மெய்யன்புக் கின்னுயிர் போக்கவெண்ணிச்
சென்ற வுயிரைமீள் வித்தோர்செங் குந்த சிலாக்கியரே. உடு

## கணம்புற்றூபதர்

தொகைபெறும் பல்பொருளாற்சிவன் கோயிலிற் றாய்விளக்கிட்
டகமகிழ் காலின்மை யெய்திக் கணம்பு லறுத்துவிற்று
மிகைகெட லின்றி யதையே யெரித்து மிக்கின்மையால்
சிகையெரித் திட்ட செயலோர்செங் குந்த சிலாக்கியரே. உசு

## தண்டியடிகள்

முகைத்த பொழுதே பெறுங்குரு டேகிக்கண் முன்றெரிய
விகைத்த கயத்தொண் டினிதின் முற்றிப்புக லீறிலொட்டாற்
பகைத்த வமணர் குருடாகி யேந்தற் பணிப்பினவர்
திகைத்து நிலைவிடச் செய்தோர்செங் குந்த சிலாக்கியரே.

## ஒட்டக்கூத்தர்

மங்காத கீர்த்தி மறைநெறி யாறை மனுமுறைகள்
பொங்காநிற் பக்கவிச் சக்கரவர்த் திப்பெயர் பூண்டுதிறை
தொங்கா தவைதரச் சத்தியச் செங்கோல் சுமந்துசிரச்
சிங்கா தனத்திவர்ந் தாள்வோர்செங் குந்த சிலாக்கியரே.

குகனேரியப்பநாவலர்

பிறப்பிலி யீன்ற பிரான்காதை யையவன் பேரருளால்
துறப்பவ ருந்துதிப் பக்கச்சி யப்பன்முன் சொற்றவறு
திறப்பகு திக்கப் புறத்தோர் பகுதியைத் தீஞ்சுவைகள்
சிறப்ப வுரைத்த திறலோர்செங் குந்த சிலாக்கியரே. உகூ

காங்கேயர்

மடம்பெறு மாந்தர் மருடீர மல்கடல மாண்புருடன்
இடம்பெற வோங்கு முரிச்சொ னிகண்டை யினிதுரைத்துக்
குடம்பெறு மாமுனி யொப்பத் தமிழைக் குவலயத்தில்
திடம்பெற வைத்த திறலோர்செங் குந்த சிலாக்கியரே. ௩0

பொய்யாமொழிப்புலவர்

உரமசைத் தார்கலி சூழ்புவி யாளு முசிதன்முன்னுள்
கரமசைத் தார்ப்பப் புனலமிழ் சங்கக் கவின்பலகை
வரமசைத் தும்பர் வயங்கவு மற்றதில் வாழ்புலவர்
சிரமசைத் தொன்றவும் வைத்தோர்செங் குந்த சிலாக்கியரே.

பகழிக்கூத்தர்

புதைந்தோட மயேந் திரமன்று செற்ற புனிதன்வினை
வதைந்தோட யார்க்கும்பிள்ளைத்தமிழோதென வாய்மலர்ந்தே
பதைந்தோடப் பாவலர் பாடும்வேப் பத்தவர் பாடுகுன்றிச்
சிதைந்தோடச் செய்திற லோர்செங் குந்த சிலாக்கியரே.

இரட்டைப்புலவர்

அத்தை மகன்குரு டம்மான் மகன்முட மாகிக்கீழ்மேல்
ஒத்துறைந் தேகூறு பாடோ டணிகொ ளுலப்பில்கவி
முத்தரிலோதியே கம்ப ருலாமுன் மொழிந்தெவரும்
சித்த முவப்பத் திரிவோர்செங் குந்த சிலாக்கியரே. ௩௩

### படிக்காசுப் புலவர்

புகழ்பூத் திடுந்தில்லை மேலோனையம்மையைப் போற்றியெங்கும்
இகழ்பூத் திடாதபொற் காசைப்பஞ் சாக்கரத் தின்படிமேல்
நிகழ்பூத்தல் பெற்றுப்புள் வேளூர்க் கலம்பக நீட்டியரூத்
திகழ்பூத்து நின்ற செயலோர்செங் குந்த சிலாக்கியரே. ௬௪

### கச்சியப்பமுனிவரர்

மேனாள் வழுவூர் மறைநாத ருட்பஞ்சம் வீட்டிப்பின்னோன்
மானாரை வேட்கு மவர்பா லுதித்துக்கைம் மாமுகவன்
ஆனாத காதை யகிலத் தவர்தொழ வாய்ந்துரைத்த
தேனார் கிளவிப் புலவோர்செங் குந்த சிலாக்கியரே. ௬௫

### சிதம்பரசுவாமிகள்

அங்கயற் கண்ணி யருள்வாங்கிச் சாதன மாகியநான்
கெங்கு முலவுறச் சாந்தலிங் கன்மொழிக் கின்னுரையும்
பங்கமில் கண்ணுடை வள்ளன் மொழிக்குரை யும்பகர்ந்த
சிங்குவை யுற்ற திறலோர்செங் குந்த சிலாக்கியரே. ௬௬

### பிறசை அருணசல சுவாமிகள்

எட்டு மிரண்டு மெண்ணீரா று தத்துவத் தேதயங்கி
ஒட்டியு மொட்டா வொருபொரு ளைச்சுட்டி யோர்வையெலாம்
வெட்டி விளக்குநல் வேதாந்த சாகை விரித்திடும்வா
சிட்ட வுரைமுனைட் செய்தோர்செங் குந்த சிலாக்கியரே. ௬௭

### வாழ்த்து

ஆவாழி வாழி யந்தண ருறுமறை யாதரிக்கும்
கோவாழி வாழிசெங் குந்த சிலாக்கியர்க் கூறிடுமம்
பாவாழி வாழி யதுபகர் வோருறும் பான்மைமிகும்
கூவாழி வாழிய வாழிய ரோவிசை கூர்தரவே.

## செங்குந்தசிலாக்கியர்மாலை முற்றியது

வேலுமயிலுந்துணை

---

நங்குலத்தின் முன்னவனை நன்னெஞ்சே நாட்டிலுயர்ச்
செங்கழனி வெற்புடையான் தேர்.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# செங்குந்தவேற்பதிகம்

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

சங்கரி சுமங்கலை யிமங்கிரி தருங்குமரி
தங்கமல நின்றகரமாம்
சத்திபர முத்தியி லுதித்தெமை யிருத்துமரு
டாயகி வராகிநிமலி
இங்குலி கவங்கநிற சங்கர னிடங்குலவி
யிவ்வுலக மெவ்வுலகமும்
ஈன்றகம லாட்சிகா மாட்சிபொற் காற்சிலம்
பிந்துமணி யொளியில்வெளியாய்ச்
செங்கன னிறங்குலவு மங்குலெழு மின்கொடி
திரண்டுரு வெழுந்தவகைபோல்
சித்ரநவ ரத்னமணி முத்தணியு மிட்டகன
தேவவுரு வாயுதிதராத்
துங்கநவ மங்கைய ரிடங்குமர ராய்வந்த
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. க

தந்தருமை யாகவரு ளெந்தையிட பாகமுறு
சத்தியுத வுங்குந்தவேல்
சாமிநா தர்க்கிளைவ லாகிவிளை யாடுகாற்
றண்டையசை யுங்குந்தவேல்

கந்தனொடு சென்றண்ட கோளமுஞ் செண்டாடி
கதியில்வைத் திடுகுந்தவேல்
கார்வண்ண னுந்திவரு பூமனை விலங்கிட்டு
காவல்வைத் திடுகுந்தவேல்
செந்தமி ழினங்குலவு சந்தமுனி வேள்விதரு
திருகுபுரி கோட்டுதகர்மா
திடுக்கிட நடப்பதைப் பிடித்தாறு முகவன்
திருச்சமுகம் விடுகுந்தவேல்
தொந்திவயி றைந்துகர தந்திமுக னுக்கிளைய
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. உ

வஞ்சனையு லோபமுட னெஞ்சக் களங்கமுறு
வட்காரை யடுகுந்தவேல்
வாரண முகங்கொண்ட தாருக னெடுங்கிளைய
வாரியை நுகர்குந்தவேல்
பஞ்சாக்ஷரம்பூதி சாதன மிலாதவெம்
பாவிகளை யடுகுந்தவேல்
பன்னிரு புயாசலத் தண்ணலிட மென்றும்
பராக்குரைத் திடுகுந்தவேல்
மஞ்சுலவு மேருகிரி குலுங்கிடப் பாய்ந்தே
மகேந்திரம் புகுகுந்தவேல்
மாளா வரங்கொண்ட சூர்முனம் வெற்றிவேல்
வாழியென வருகுந்தவேல்
துஞ்சுவெம் புலியென்ன பகைவருட லங்கீறு
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. ௩

பம்பர மெனச்சுழன் றிம்பரி லலைந்திடாப்
படிபுரந் திடுகுந்தவேல்
பாவிநீ தேவர்சிறை விடுவிடா விடிலதம்
படுமெனுங் குந்தவடிவேல்
வெம்பதும னேவு கிங்கரர் களைக்கொன்று
விண்ணெழுந் திடுகுந்தவேல்
வெற்றியென வேவஜ்ர வாகுவென் பிணைநாட்டி
விளையா டிடுங்குந்தவேல்
அம்பர முறும்பெரு மகேந்திரங் கடல்படர
வணுவெனக் கொழிகுந்தவேல்
ஆறுமுக னும்பதும தாண்மல ரிணங்கிலா
னசுரனென வுரைகுந்தவேல்
தும்புருவ ரொடுதேவ ரஞ்சலித் திடவந்த
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே.

கோமரு வும்பகைவர் குலைநடு நடுங்கவே
கொண்டுகாத் திடுகுந்தவேல்
கும்பலம் போதர கஜானனர்க் கிளவலாங்
குமரகுரு பரகுந்தவேல்
வீரமோ டெழுந்துமுத னூட்சூர னமர்க்களம்
வெறுங்களஞ் செய்குந்தவேல்
வெஞ்சூரன் மகவிலொரு மகவொழிய மற்றவரை
வெங்கண் டிடுங்குந்தவேல்
சீரணங் கும்பானு கோபனுட லங்குத்தி
சென்னியும் பறிகுந்தவேல்
செங்கடம் பணியுபய வம்போரு கங்கண்டு
தெரிசித் திடுங்குந்தவேல்

சூரனுஞ் சூரனுக் கிளவனு நமக்கென்ற
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. ௫

மாமுத றடிந்துசெஞ் சேவலங் கொடிதனது
வலமேந்தி பதுமனுடைய
மற்பெரிய வெம்புலிக் கொடிமுருக னாற்றர
வாங்குஞ் சினக்குந்தவேல்
காமுதற் சுரராஜ னாதியாந் தேவரைக்
ககனமேற் றிடுகுந்தவேல்
கனவல்லி தெய்வானை திருமணங் கண்டே
களித்திடுங் குந்தவடிவேல்
பாமுதற் புலவர்க டிதிக்கந்த மாதனம்
பதியா யிருந்துநெடுநாள்
பக்தவிஜ யங்கொண்டு சுத்தசண் முகனுபய
பாதந் தொழுங்குந்தவேல்
தூமத கஜக்கடக மாயிர நிதஞ்செற்ற
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. ௬

மையிலகு தீவினைக ளெய்யவக முள்ளினரை
வந்துகாக் குங்குந்தவேல்
வரதமலி யுஞ்சட்டி விரதமிகு முசுகுந்த
மன்னவ னிருந்தவத்தால்
செய்யமயி லேறுமுரு கையனுட னாகவே
தென்னாடு வருகுந்தவேல்
தேவதனு வங்குதரி மானவ தனுப்பெற்றிச்
செகமிருந் திடுகுந்தவேல்

வெய்யவ னருங்குலத் துய்யுமர மாதரை
மீமணம் புரிகுந்தவேல்
வீரரது மகண்மழக் கிளியையுங் கிளியையும்
வேந்தனுக் கீகுந்தவேல்
தொய்யின்முலை மங்கையர்கண் மையலுறு மெழினிலவு
சுத்தநவ வீரரங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. எ

மாற்றலர்க ணெஞ்சங் கலங்கிட நிணங்கமழ்தன்
மாறுத வைகுந்தவேல்
மானிலத் தவர்நடு நடுங்கவரு செங்கணொரு
மைக்கடா வேறுமழகக்
கூற்றுவன் றம்மகட் கிள்ளையைக் கொண்டுசெல
கோபித் தெழுங்குந்தவேல்
குந்தத் திரங்கண்டு வந்தித்த வேயமன்
கொணர்ந்துதர செய்குந்தவேல்
ஊற்றமிகு சந்தான மாவினவி குடகரச
ஞேடவது பறிகுந்தவேல்
உரியகற் பினியமகட் காகமலை நாடேகி
யுட்பலங் கவர்குந்தவேல்
தோற்றநனி பல்லூழி காலமும் பற்பலமா
தோலாத குந்தவடிவேல்
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. அ

வண்டமிழ்ச் சோழமண் டலமிருக் கப்பெருமை
வானமட் டெழுகுந்தவேல்
மாநக ரிற்பொரு வலானது வலங்கண்டு
மகபதிக் கருள்குந்தவேல்

அண்டருக் காசனுன் மார்த்தித விடங்கரை
யாரூரி டுங்குந்தவேல்
அங்கிவன் மன்றனொடு மனகசன காதியர்க்
கரசுதந் திடுகுந்தவேல்
கண்டக வலானையென் றன்னவன் றேவிக்கு
களநாண் டருங்குந்தவேல்
தொண்டரா ரூர்க்கெலாந் தொண்டருமை யென்சிற்
சுகானந்த முறுகுந்தவேல்
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. கூ

சிவநந்தி கணநாத ராதிநவ வீரராய்ச்
சித்ரமணா வூரிலெய்தித்
திவ்விய குலோத்துங்க னஞ்சமஸ் தானந்
தெரிந்தனந் தங்கூத்தயர்
இவனந்தி யாமென்ன வாயிரத் தெண்டலைக
ளீய்ந்திசைப் பெறுகுந்தவேல்
ஏகம்பர் தெய்வீகத் திருவுலாச் சொன்னதி
விரட்டையர்க டுதிகுந்தவேல்
நவநந்தி வீரரே முதலியர்க ளாமென்ன
ஞானப்பிர காசவள்ளல்
நாவினுன் மழுவெடுத் தும்மாலை பிளைதமிழ்
நவிலப் பெறுங்குந்தவேல்
துவநந் திருத்தெய்வ மாகிமனு வாகியுஞ்
சொல்விலங் காக்குந்தவேல்
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. க௦

செங்குந்தவேற்பதிக முற்றியது

வேலுமயிலுந்துணை

---

உருத்திரனுர் வேண்ட வொருபொருளை வைத்த
திருத்தணிகை மேயானைத் தேடு.

உ

சிவமயம்

முருகக்கடவுள்துணை

# செங்குந்தர்மரபுவிளக்கம்

## காப்பு

### சத்தியவிநாயகர்

நேரிசைவெண்பா

வாசவளந் தன்னாலு மாசவளந் தன்னாலும்
தேசவளஞ் செய்கின்ற செங்குந்தர்—நேசவளப்
பாவளம்பெற் றோங்கப் பணைவளங்கொள் கச்சியிற்றந்
தாவளம்பொன் வண்மை தரும். க

### சுப்பிரமணியர்

மங்களசெங் குந்தர் மரபுவிளக் கஞ்செய்வான்
எங்க ளகத்தி லிருந்தொளிருங்—கங்கைமுடிப்
பைங்கச்சி காவளத்தான் பாலன் வடிவேலன்
றங்கச்சி காவளத்தான் றாள். ௩

### கச்சபேசர்

வள்ளற்செங் குந்தர் மரபுவிளக் கஞ்செயவென்
உள்ளத்தி லோங்கி யொளிருமே—கள்ளமிலா
நங்கச்ச பேச னலம்பொழிவா னன்னேசன்
றங்கச்ச பேசன் சரண். உ

### சுந்தராம்பிகை

மாட்சிபெறுஞ் சோணாடர் மான்மியஞ்செய் வானுளத்தில்
ஆட்சிகொடு மேவி யருளுமே—காட்சிபெற
அந்தரத்தோர் போற்று மருங்கச்ச பத்தளியின்
சுந்தரத்தாய் நற்றாள் துணை. ௪

ஆளுடையபிள்ளையார்

கச்சிப் பதிக்குந்தர் கால்வழியைப் பாடவென் னுள்
இச்சித் திடங்கொண் டிருக்குமே—பச்சிமத்துக்
கோயிற் றிருத்தெருவிற் கோயில்கொண்ட காழிநகர்
சேயின்பொற் றாளிரண்டுந் தேர். ௫

---

## நூல்

கட்டளைக்கலித்துறை

மங்கள வேளையின் மங்கள மேள மகிழ்விரங்க
மங்கள மான செயலொருங் கெங்கும் வளம்பெறுமான்
மங்கள வாழ்வுசெய் நங்கச்ச பேசனின் மங்களங்கொள்
மங்கள செங்குந்தர் மங்கள கோடி வழங்கலினே. ௧

தாரணி மூன்று நடுங்குமோர் வீரனைத் தாம்வெலற்குப்
பேரணை யேறிய வீரந் தெரித்த பெருமையினால்
வீரணத் தேரி யெனப்பெறிற் செங்குந்தர் வீரங்களில்
ஓரணு வேனு முரைவன்மைத் தோவிவ் வுலகமுமே. ௨

நீரொட்டுங்கோட்டையில் வல்லானை வென்ற நெறியுரைப்பக்
கூரொட்டும் வாள்கொண் டளவில சென்னி கொடுத்தருளிப்
பேரொட்டக் கூத்தன தீட்டி யெழுபது பெற்றிருக்கும்
சீரொட்டுஞ் செங்குந்தர் மாட்சியை யாவர் சிதைக்குநரே. ௩

பொன்பொதி கொன்றை யுமையாள்சிலம்பிற்புடைபெயர்ந்த
ஒன்பது வைரத்தி லொன்பது பெண்வழி யொன்பதின்மர்
என்பது மன்னோர் வழிவீர ரென்பது மென்னவென
மன்பதை சோரத் தலைதந்த செங்குந்தர் வைரநன்றே. ௪

கற்றவர் மாதவர் மன்னவர் தேவர் கனியுமக்கட்
பெற்றவ ரென்றிவர் மானங் கெடாமற் பிழைப்பதற்குக்

கொற்றவர் போனிதஞ் செங்குந்தர் கோடி கொடுப்பதல்லால்
மற்றவர் கோடி கொடுப்பர்க ளோசொன் மலர்மகளே. ரு

கோத்திர மொன்பது பெற்றசெங் குந்தர் குளிர்ந்தகடை
நேத்திர மாத்திரம் பெற்றவர் வேந்தர் நெடுஞ்சபையில்
பாத்திர மேற்குந் தொழுநோய ராயினும் பாத்திரராய்த்
தோத்திரஞ் செய்யப் படுவர்தண் மாலை சுகந்தமுற்றே. சு

நாடுயர் காஞ்சிப் பெருநாட்டுச் செங்குந்தர் நன்குநெய்யும்
ஆடை வளங்களை யெவ்வா றியானிங் கறைகுவனல்
பீடைசெ யூதையில் வெம்மை கொடுத்தும் பிணிதவிர்த்தும்
கோடை யுழையுவர் நீர்கவர்ந் தின்ன குணந்தருமே. எ

புறநாடு வந்த கடலாடை யாவுமப் போதொளிரும்
நிறநாடு மூதையில் வேதையங் கோடையி னீளுவர்நோய்
அறநாடும் வைத்திய நூற்குப் பகையாத லால்வணிகீர்
அறநாடுஞ் செங்குந்த ராடையைக் கோட லழகென்பவே. அ

புள்ளாடு மீட்டிகொள் செங்குந்தர் நெய்கின்ற பொற்றுகிலோ
வெள்ளாவி வைக்க விளக்கமுந் திண்மையு மேவிடுமால்
கள்ளார் பணிநக ரத்துவர் நீர்கொள் கருவியுடை
வெள்ளாவி வைத்திட வுள்ளவை யாவும் வெளுத்திடுமே. கூ

தெவ்வா றிருகே சரிவச் சிரம்பொய்ச் சிரங்கொணர
எவ்வாறு வெட்டினை யென்ன விறைவற் கிறைபயவா
திவ்வாறு வெட்டின னென்னத்தன் சென்னியை யீர்த்துணர்த்தும்
செவ்வா றெழுகுநஞ் செங்குந்த ராண்டகைச் சிங்கங்களே.

ஆறுங் கிணறு முயர்கூரை வீடு மணிமூலையும்
போலுநற் றாசுநெய் தின்னவ ரென்னப் பொறியமைத்தல்
ஏலுஞ்செங் குந்த ருயர்திணை யஃறிணை யெவ்வுயிர்க்கும்
பாலும் பழமு மெனவே விளங்குவர் பாருமினே. கக

வானம் வளரும் பசுக்கள் வளரு மகம்வளரும்
தானம் வளருந் தருமம் வளரும் தமிழ்முதலாம்
ஞானம் வளருஞ் சிவஞான போத நலம்வளரும்
மானம் வளர்க்கின்ற செங்குந்த ரெங்கும் வளர்தலினே. கஉ

தாயரும் பன்னநன் மாணாக்கர் யாருந் தழைந்துவர
நேயரி னெண்ணி முகமே யகமே நெடிதலர்ந்தே
ஆயரு நூல்பல வாய்கொண் டுரைத்தலி னான்றதந்து
வாயரென் றோர்பெயர் பூண்டனர் செங்குந்தர் மண்டலத்தே.

பைங்குந்த முன்விற்ற நங்கச்ச பேசன் பதுமமெனப்
பொங்குந்தங் கக்கழல் போற்றுவர் சித்தாந்த புண்ணியர்கள்
எங்குந்தம் போக்குவ ரெங்குந்தங் கீர்த்தி யெழுப்புவர்கள்
செங்குந்தந் தங்குங்கைச் சிங்கங்கள் போலொளிர் செங்குந்தரே.

நீழலு முண்டு முயற்சியு முண்டு நிலைத்தமிடிப்
போழலு முண்டு வருவாயு முண்டு புனிதமுண்டு
வாழலு முண்டு தருமமு முண்டு மகிழ்வுமுண்டு
தாழல் சிறிது மிலையாஞ்செங் குந்தர் தறியிடத்தே. கரு

சேவரு நங்கச்ச பேசனைப் போற்றிடுஞ் செங்குந்தர்நெய்
பூவரும் பொன்னாடைவாங்கி யுடுத்தற்குப் பொன்னின்மையால்
மேவருந் தேவர்விண் சென்றன ரேனையர் வேம்பினிலை
தாவரு மான்றோன் மரவுரி யின்ன தரித்தனரே. கசூ

பாராளுஞ் செல்வந் தவிர்ந்தருங் காட்டிடர் பட்டுறுநாள்
ஓராமை பூசித்த கோயிற்செங் குந்தரை யோர்சிறிதும்
சேரா திருந்த தகைமையி னாலுடைச் சீரிலனாய்ச்
சீராம னன்று மரவுரி பூண்டு திரிந்தனனே. கள

பானலச் செந்நாப் புலவன்செங் குந்தரைப் பார்த்தபின்னர்க்
கானலம் வாசி நலங்காண நெஞ்சங் கசிந்துருகி

நூனலம் பாநல மோடே கலைநல நோக்கியதன்
மேனல மென்ற பொருணலந் தேர்ந்து விளங்கினனே. கஅ

ஞானமி லாது சினேந்திர னம்மையி னல்லகலைத்
தானந் தாராதவன் போன்ம்வறி தேயிந்தச் சைவவுரு
வானசெங் குந்த ரிடஞ்செலக் கண்டுமுட் டஞ்சியஞ்சி
மானந் தெரிதந் திலனம் மணத்துடன் வாழ்ந்தனனே. கசு

தலையேற்ற கச்சப நாதனைப் போற்றித் தவவடிவாய்
நிலையேற்ற செங்குந்தர் போற்சந் திரனு நெடுஞ்செல்வரும்
மலையேற்ற முள்ள புலவரு மாதரு மாதவரும்
கலையேற்றம் பெற்ற வியல்பாற் பெருமை கலந்தனரே. உ0

கடையுகந் தன்னிற் பெரிதுந் திருத்தளி கட்டவந்து
நடையுகந் தோங்கித் திகழ்நாட்டுக் கோட்டை நணுஞ்சைவர்போல்
விடையுகந் தேறிய கச்சபன் றண்கழல் வேண்டிமிகக்
கொடையுகந் தீபவர் செங்குந்த ராஞ்சற் குணசைவரே. உக

கூழ்குடித் தாலுங் குறைபிரந் தாலுங் குடலொருங்கே
சீழ்பிடித் தாலு மதியழிந் தாலுஞ் சிறையிருக்க
ஊழ்பிடித் தாலுங் கடனிருந் தாலு முணர்வரிதாம்
வாழ்குடி கொண்டொளிர் செங்குந்தர் யாவு மறைத்தலினே.

மலைவா சவனன்று கௌதம னற்குறி மன்னுறுநாள்
நிலைவாசத் தாங்கே புரந்தசெங் குந்தர்தண் ணித்திலப்பூம்
தலைவாச னுகந் திகிரி பரிவட்டந் தானையொடு
கலைவாசங் கோடி யுடைபுத் தகமிவை கண்டனனே. உங

நிலைபடு வாழ்க்கைச் செங்குந்த குலத்தோய் நிதநிதமும்
இலைபடு வத்திர நேத்திரங் கேட்டே னிறைஞ்சியிரேன்
தலைபடு வாசம் புனைவட்ட நாகமுன் றுன்பிடியல்
கலைபட நீவி மடிகோடி யின்பணி கண்டையின்றே. உச

சமைய விசேட நிருவாண தீக்கை தரித்தலுடன்
அமையபி டேகமும் பெற்றங் கவர்குலத் தாரியராய்
இமைய முதற்கொடு சேது வரைக்கு மினிதுறைந்து
சிமைய விளக்கென யாண்டும் விளங்குவர் செங்குந்தரே.

பூவாருஞ் சோலைச் சிவாலயந் தோறும் புளகமுற்று
நாவார நெஞ்சக மார விசையி னலந்தெரிந்து
தேவார முந்திரு வாசகமுஞ் சொல்லிச் சின்மயமே
ஆவார் மகிழ்வார் நடிப்பார் செங்குந்த ரனைவருமே. உசு

மூத்தவ னென்று முருகப் பிரானை முறைமைகொண்டிங்
கேத்துவர் செங்குந்தர் நீற்றொளி யாசார மேற்றிருக்கும்
மாத்துவர் வைணவர் சைனர் முதலிய மற்றவரும்
நீத்தவர் போற்றரும் வைதிக சைவ நெறியினரே. உஎ

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனி னுங்கவின்செய்
ஞாலத்தின் மாணப் பெரிதென்று வள்ளுவர் நாட்டினரச்
சீலத்தின் மிக்கசெங் குந்தர்க ளோவர் திரௌபதைக்குக்
காலத்திற் செய்நன்றி வானிற் பெரிதெனக் கண்டனமே.

மானிடை வேங்கை யருள்கொள நூலின் வகைசெலுத்தி
யானிடைச் செல்வரைப் போற்று செங்குந்தரி னன்புடைமை
கானிடைப் பாதித் துகிலோ டுழன்றவன் காருருத்தீர்
வானிடை மேற்கொளும்போர்வைகளேசொலும் வையகத்தே.

வாழ்த்து

வாழிய தண்பெய லானின மந்தணர் மாமகங்கள்
வாழிய தேவர் முனிவர் புலவர் மனிதரெலாம்
வாழிய காஞ்சியி னங்கச்ச பேச னுமாசகிதம்
வாழிய விங்கவன் றொடொழுஞ் செங்குந்த மானவரே.

செங்குந்தர்மரபுவிளக்கம் முற்றியது

வேலுமயிலுந்துணை

---

தணிகா சலப்பெருமான் ருட்டுணையை யென்றும்
பணிந்துறுவாம் வேண்டுவவிப் பார்.

உ
சிவமயம்
முருகக்கடவுள்துணை

# சேனைத்தலைவர்
# மரபுவிளக்கச்சூருவளி

## உரைச்செய்யுள்

ஸ்ரீ கயிலாயத்தின்கண் அமரர்முதற் போகபூமியோர் வரையுமான பதினெண்கணத் தலைவர்களும், நந்தி பிருங்கி பிங்கிருடி முதலாகிய சிவகணத் தலைவர்களும் பணிந்து புகழப் பார்வதி சமேதராக அமர்ந்தருளிய பரமேஸ்வரர், தமது இளைய பிள்ளையாராகிய சண்முகக் கடவுளுக்குச் சகோதரராகப் பார்வதியாரது பாதச் சிலம்பின்கணின் றுதிர்ந்த நவமணிகளிற் றோன்றிய நவசத்திகளிடத்தில் நந்திகேஸ்வரர் முதலாகிய சிவகணத் தலைவர்களையே அவத ரிப்பிக்க, அவதாரஞ்செய்த வீரவாகு தேவர் முதலாகிய நவ வீரர்களது சந்ததியார், கைக்கோளரென்று சொல்லப்பட்ட செங்குந்தர்களென்று தொன்றுதொட்டு உலகத்தில் விளங்கி வருகின்றதை யாவரும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல உணர்ந்திருக்கின்றனர்.

கலியுகாப்த வருடம் நாலாயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்து நான்குக்குமேல் நிகழ்ந்த சோபகிருது வருடம் ஆனி மாதத்திலே, மூன்றுலகையும் மூன்றுனையிற் மறைத் தற் கெண்ணுதல்போல ஓரெண்ணங்கொண்டு இங்ஙனம் இலைவணிகருள் ஒருவராகிக் கல்வியிற் பயின்ற காஞ்சீபுரம் சபாபதி முதலியாரென்பவர், முற்கூறிய நவவீரர்கள் சந்த தியார் தம் மரபினரென்று கலிவெண்பாவினுலும் வாக்கி

யத்தினாலும் கட்டுநூலொன்று தாமே செய்து கொண்டனர். இவர் கதிரவனைக் கண்ணாடியால் மறைத்து, உலகிற்கு இருள்வர நினைத்த ஒருவரை யொப்பர்; ஏனெனின், தாமொருவாறு கட்டிய கட்டுநூலால் முன் உண்மைவிளங்க உணராத சிலரும் உணர்ந்து கொண்டாராதலின்.

பற்பல தேசத்து அரசர்களும் வணங்கித் திறைதர, மநுநீதி வழாது தெய்வீகம் விளங்கச் செங்கோலோச்சிய குலோத்துங்கச் சோழ மகாராஜனுடைய சிங்காதனத்திருச் சமுகத்தைச் சிறப்பிக்கும் வித்துவ சிரோமணியாகிய 'கூத்தர்' என்னும் புலவர்பெருமான் விளங்கிய காலத்து, ஒரு தினம் அக்காலத்திருந்த செங்குந்தத் தலைவர்கள் தங்கள் குலத்துக்கு ஓர் தீபம்போல விளங்கிய கூத்தரென்னும் புலவர்பெருமானை நோக்கி, "எங்கள் மரபிற்கு மாணிக்க மணிபோற் கிடைத்த தமிழ்ப் புலவர் சிங்கமே! தொன்றுதொட்டு விளங்கிவரும் நமது செங்குந்தர் மரபின் சீர்த்தியை ஓர் தமிழ் நூலாகச் செய்து தரல் வேண்டும்" என்று கேட்க, அப் புலவர் பெருமான் "நம்மரபின் சீர்மையை நாமே பாடுதல் தகாது" என்ன, அதற்குச் செங்குந்தத் தலைவர்கள் சம்மதியாமல் கோபங் கொண்டு, அப் புலவர்பெருமானைக் கொல்லுதற்குத் துணிவு கொண்டு ஓடிவர, அதுகண்டு அவர் 'புவனை வீரன்' பட்டினத்தில் ஓடிப்போய்ச் சோமாசியாண்டா ரென்னும் அந்தணரிடத்தில் அடைக்கலம்புக, அந்தணர் மனமிரங்கிக் கல்வியிற் சிறந்த தனது ஏகபுத்திரனை ஓர் பேழைக்குள் வைத்து அப் புலவரென்றே சாதித்துப் பின்றொடர்ந்து வந்த செங்குந்தத் தலைவர்கள் வசத்திற்கொடுக்க, அவர்கள் அப்பட்டினத்திற்கு வெளியிற் கொண்டுபோய்த் திறந்து பிராமணப் பிள்ளை உள்ளிருக்கக் கண்டு மிகவும் அதிசயப்பட்டு மீட்டுஞ் சோமாசியாண்டாரிடத்தில் வந்து

"கூத்தரென்னும் புலவரைக் கொல்லாது விடோம்" என்ன அவ்வந்தணர் மிகவும் வருத்த முற்றுக் கூத்தரென்னும் புலவர் பெருமானனுமதியால் செங்குந்தத் தலைவரை நோக்கி "உங்கள் மரபில் அறிவு அன்பு அழகு முதலிய விசேடத் தன்மை வாய்ந்து, தாய்க்குத் தனியராயும் தலைமை புத்திரராயு மிருக்கிற ஆயிரத் தெண்மர்களுடைய தலைகளை அறுத்து அவைகளால் ஓர் சிரச்சிங்காதனமிடு வீர்களாயின், அதன்மேலிருந்து இப்புலவர் பெருமான் உங்கள் எண்ணப்படி செய்வார்" என்றுரைக்க, அவ் வாறே அகமும் முகமும் மலர்ந்து ஆயிரத்தெண்மர்கள் சிரங்களை அறுத்துச் சிரச்சிங்காதனமிட, அதன் மேலி ருந்து குலோத்துங்கச் சோழ மகாராஜனும் இராஜ சபையி லிருந்த அந்தணர் முதலிய நான்கு வருணத்தாருங் கண் ணும் மனமும் களிப்பக்கண் டிருக்கவும், வானோர் மலர்மாரி பெய்து மகிழ்ச்சியடையவும் ஈட்டியெழுபது என்னும் பிர பந்தத்தை உலகுள்ளளவும் ஓங்கச்செய்து, பின்பு அவ் வாயிரத்தெண்மர் தலைகளும் அவ்வவர் உடலிலே ஒட்டி உயிர்பெற்றெழ எழுப்பெழுபது என்னும் ஓர் பிரபந்தமுஞ் செய்து, அறிவுடையோரால் ஒட்டக்கூத்தர் என்னும் கார ணப் பெயரைப் பெற்றுக்கொண்டிருந்தனர்.

அவரது பெருங்கீர்த்தி இக்காலத்தும் கற்றவராலும் மற்றவராலும் சொல்லப்படுகின்றதைச் சிறிதேனும் இவர் கருத்துட் கொண்டவரானல் எவ்வாறு இவ்வாறு செய்யத் துணிவர்?

ஸ்ரீ கயிலாய பரம்பரையா ரென்றும், உப சுப்பிர மணிய மரபின ரென்றும், நவவீரர் சந்ததியா ரென்றும், சேனைத் தலைவ ரென்றும், தில்லைமாகாளித் தேரோடச் செய்தவ ரென்றும், சோழமகாராஜனல் தண்டிகைபெற்றோ ரென்றும், வல்லானது வன்மையை யழித்து அவன் மனை

விக்கு மாங்கலியப்பிச்சை இட்டவரென்றும், ஏலேல சிங்கனுக்கு மெய்த்தலை கொடுத்தவரென்றும், இன்னும் பலவித சிறப்புடையோரென்றும் சொல்லப்படுகிற செங்குந்தர் மரபின் பெருமை, மேற்கூறிய ஈட்டியெழுபது, எழுப்பெழுபது என்னும் பிரபந்தங்களிற் பிரமாணிக்கப்பட்டிருக்கிறது மன்றிக் கந்தபுராணம், திருவாரூர்லீலை, ஏழாயிரப் பிரபந்தம், செங்குந்தர் புராணம், மதுரைப் புராணம், இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, அலங்கார பஞ்சகம், ஒலியலந்தாதி, கலம்பகம், பிள்ளைத் தமிழ், கோவை, உலா, பரணி, ஊசல், வல்லான் காவியம், மாலை, திருப்புகழ் முதலிய நூல்களிலும் ஐயமறக் காட்டப்பட்டிருக்கின்றது.

இவைகளில் ஒன்றும் பார்த்துணர்ந்திரா ராயினும் செங்குந்தர் தங்கட்குச் சிவசண்முகக்கடவுள் சகோதர பாவனையாக எழுந்தருளிக் கிருபைசெய்கிற பாவோடும் உற்சவம் வீரவாகுதேவர் உற்சவம் வருடந்தோறும் நடத்துவதையும்; சிதம்பரம், காஞ்சீபுரம், திருவாலங்காடு, திருவண்ணாமலை, திருக்காளத்தி, திருக்கழுக்குன்றம், திருக்கச்சூர், திருவானைக்கா, மதுரை, திருப்பரங்குன்றம், திருவாவினன்குடி, திருச்செந்தூர், திருத்தணிகை, வள்ளிமலை முதலாகிய சிவஸ்தலங்களினும் சுப்பிரமண்ணியர் ஸ்தலங்களினும் தொன்றுதொட்டு மரபுவிளங்க நித்திய நைமித்திய பூஜைகள் செய்விக்கின்றதையும் காட்சிப் பிரமாணத்தால் இவர் உண்மை விளங்கக் கண்டும் விபரீதநூல்செய்துகொண்டதற்குக் காரணம், இவர்க்கு அக் காலத்துள் நேரிட்ட மதிமயக்கமென்றே தோன்றுகின்றது.

வேலுமயிலுந்துணை



உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை

# சேனைத் தலைவர்

# மரபுவிளக்கச்சூருவளி

## காப்பு

### நேரிசைவெண்பா

தளிர்த்துவருஞ் சேனைத் தலைவர் மரபு
விளக்கச்சூ ருவளி விளம்பத்—துளக்கமறு
செம்பவள வாயுமையாள் சிந்தைமகிழ்ந் தேயளித்த
கம்பவளக் குஞ்சரமே காப்பு.

## நூல்

### கலிவெண்பா

வேதமொரு நான்கும் வியந்தேத்தும் வெள்ளிமலை
மாதுமையாள் பங்கன் மகிழ்ந்தளித்த—போதமிகு
கந்தவேட் கெம்பியராக் கன்னியுமை காற்சிலம்பின்
சந்தமணி மாதர் தரத்தரையில்—விந்தையொடு
வந்தநவ வீரர் மரபார்செங் குந்தரென்றே
எந்த வுலகு மினிதுணரச்—சந்ததமும்
கார்ந்த முதலாக் கருதுபுரா ணங்களெலாம்
ஓர்ந்துரைக்க வீண்டவர்தம் மொண்சரிதைப்—பாந்தமெலாம்
காதல்கொளுங் குள்ளாண்டிக் கச்சிச் சபாபதியென்
றோதுமிலை வாணிபர்தா முட்கருதிப்—போதுகலி
நாலா யிரத்துத்தொ ளாயிரத்து நாற்பத்து
நாலாம் வருட நடந்ததற்பின்—மேலாண்டில்

திண்மை பெறுந்தெலுங்கு தேசத்தி னுள்ளவரால்
கண்மைபெறுங் கூறுக்குக் காரரென் றும்—வண்மை

புலப்பட்ட தென்பாற் புகழ்தமிழ்நாட் டாரால்
இலப்பட் டிலைவணிக ரென்றுஞ்—சொலப்பட்ட

தம்மரபுக் கென்றே தமிழ்க்கலிவெண் பாவதனால்
அம்ம வுரைத்தா ரகமகிழ்ந்தே—இம்மகியில்

செங்குந்த ருண்டென் னுஞ் சிந்தையுடை யாரென்னில்
தங்கும் படியந்நூற் றாமியற்றார்—அங்கதற்கும்

காட்சியள வின்றே கருத லளவின்றே
ஆட்சி பெறுநூ லளவின்றே—சாட்சியொடு

திட்டாந் தங்காட்டித் தெரிவிக்கி னெந்நூலும்
பட்டாங் கெனலாமிப் பாரிலொரு—திட்டாந்தம்

இல்லாம லேயவ் விலைவணிக ரிவ்வுலகின்
எல்லாருங் காண வியல்பின்றிச்—செல்லாத

வெம்மையினாற் பொய்ந்நூல் விரித்ததுதான் வேற்றொருவர்
செம்மைபெறுங்காணியெலாஞ்சென்றெடுத்துத்தம்மதென்று

பொய்ப்பத் திரமெழுதிப் பூவுலகிற் சிற்சிலர்கள்
கைப்பத்தி ரஞ்செய் கணக்கென்கோ—மெய்க்குறியுட்

கொண்டொருவன் வேறோர் குலமனையை யாற்றினிடைக்
கண்டுவழக் கிட்ட கதையென்கோ—பண்டுலகில்

சிங்க முறுகுகையைச் சேர்ந்து நரித்திரள்கள்
தங்குகையென் றோதுந் தரமென்கோ—பொங்குமிந்திர

சாலவித்தை யென்கோ சழக்குடையோர்க் கேற்றகலி
காலவித்தை யென்கோகண் கட்டென்கோ—ஏலவினி

ஏசுறுபன் மாயையினு ளெம்மாயை யீதென்கேன்
வீசு மிரவிகுல வேந்தனெனும்—வாசமுகில்

20 கொல்லி மலையான் குலவியபொன் னித்துறையான்
சொல்லரிய சீர்த்திபெறுஞ் சோணாடன்—நல்லமலர்ப்

பொன்னு ருறந்தையான் போற்றுங்கோ ரப்பரியான்
தன்னை ரிலாதமதத் தந்தியான்—மின்னாரும்

ஆத்திமலர் மாலையா னம்புவியிற் பாவலர்கள்
ஏத்தியபா மாலை யினிதணிந்தோன்—மாத்தரங்க

வாரியொலி போன்முழங்கும் வண்மைதிகழ் மும்முரசான்
பாரிலுயர்த் தும்புலிப்ப தாகையான்—சீருயர்ந்த

ஆணையினு னெவ்வுலகு மாண்மைசெ லுத்திவரும்
கோணலிலாச் செல்வமிகு கோவேந்தன்—வேணிகரான்

25 மாதர் நிதமு மடலெழுது மார்பினன்
நீதிவ ழாத மநுநெறியான்—ஓதி

மகுடமுடி மண்டலிகர் வந்து வணங்கச்
செகமுழுது மோச்சியசெங் கோலான்—பகலிரவும்

வெண்ணிலவு தும்பையணி வேணியரன் றாள்பணிந்து
கண்ணிமையைப் போலுலகங் காத்தளித்த—புண்ணியவான்

சோழமக ராச சுமுகன் சமூகத்தில்
வாழு மியற்றமிழ்சொல் வண்புலவர்—சூழுமெழில்

செந்தமிழை யெட்டுத் திசையி னடாத்திவரும்
உந்துகட லுண்டமுனிக் கொப்புடையார்—சந்ததமும்

30 அன்னங்கள் செங்கமலத் தாருமகன் பணைகண்
மன்னும் பெரிய மணவூர்வாழ்—தந்நிகரில்

கூத்தரெ னும் பாவாணர் கூறுலகி லோங்கியநாண்
மாத்திரள்செங் குந்தர் மனமகிழ்ந்து—சீர்த்தியுள

நங்குலத்துக் கோர்நூ னவிற்றுகென நாவலரும்
நங்குலநா மேத்தனல மன்றென்ன—அங்கதனுக்

குள்ளமுவ வாதுகொல்வா னோடிவர வப்புலவர்
பொள்ளெனவோ ரந்தணனிற் புக்கியிட—உள்ளிருந்த

சோமாசி யாண்டான் றுணிவுற் றொருமகவை
நாமாசை நண்ணாது நல்கியின்சொற்—கோமானைக்

காக்கிற் புவிமேற் கனபுகழைக் கொள்வமெனத்
தூக்கிப் புவனையிலத் தூய்மறையோன்—மாக்கலைகள்

ஓதியசே யைப்பேழைக் குள்வைத்தவ் வாணரெனச்
சாதனையாற் செப்பித் தரக்கொண்டு—போதவே

ஆர்த்தோடி யாங்கவர்க ளப்பேழை யைத்திறந்து
பார்த்தே வியந்து பயந்தடியைப்—பேர்த்தங்கு

மீட்டும் புவனையிலவ் வேதியன்பாற் சென்றுபழி
நாட்டுதுமந் நாவலனை நன்கெமக்குக்—காட்டுமந்தக்

கூத்தன் றனக்குநாங் கூற்றுவர்கா ணென்றுரைக்கச்
சாத்திரங்க டேர்ந்த தனிமறையோன்—கூத்தாது

சிந்தையெண்ண மோர்ந்துதிருச் செங்குந் தரைநோக்கி
இந்தப் புலவருள மின்புறவே—அந்தமிகு

தாய்க்குத் தனியர் தலைச்சிறுவர் கல்விசெல்வம்
வாய்க்கு நுமதுகுல மாமைந்தர்—தூய்க்குணத்தோர்

ஆயிரத்தெண் மர்சிரத் தாலா தனமிட்டுத்
தூயதமிழ் கேட்கத் துணிவீரேற் பாயிரநூல்

கேட்பீ ரெனமறையோன் கீர்த்திபெறுஞ் செங்குந்தர்
நாட்பாரா தக்கணமே நல்கியிட—வேட்கையொடு

வேதம் படித்தல் படிப்பித்தல் வேள்விசெயல்
ஏதமறச் செய்வித்த லீதலோ—டீதலைத்தாம்

ஏற்ற லெனுந்தொழிலை யெக்கா லமுமினிதாய்
ஆற்றுபுக ழாற்சிறந்த வந்தணருஞ்—சாற்றரிய

ஓதன் மகஞ்செய்த லோம்புதலீ தற்படைகள்
போதப் பயிறலிகற் போர்செய்தல்—ஓதுறுமிவ்

வாறுதொழிற் காவலரு மவ்வா றியல்பெருகக்
கூறும் வசிய குலத்தவரும்—வீறுகின்ற

வேளாண் குலத்தில்வரு மேன்மையருஞ் சூழ்ந்திலங்க
வாளாண்மை மிக்க வலியுடையோர்—நீளாண்மை

சொல்லுங் குலோத்துங்கச் சோழன் றிருமுன்னர்
வல்லமையி னாலே வழங்கியவன்—நல்லசிரச்

சிங்கா தனத்திருந்து சிந்தைமகிழ்ந் தெவ்வெவரும்
அங்கா தரவி னகங்குளிரத்—துங்கமிகு

விண்ணி னமரர் விடாது மலர்மாரி
மண்ணிற் சொரிந்துமிக வாழ்த்தெடுப்ப—எண்ணரிய

ஈட்டி யெழுபதென வின்புறுதஞ் சாதிநூல்
நாட்டிவைத்துப் பின்னரவர் நல்குசிரம்—வாட்டமற

ஓட்டும் படிக்கோ ரெழுப்பெழுப தென்றொருநூல்
கட்டுரைத்தே நற்கலைகள் கற்றோரால்—இட்டமொடு

கூறுதமி ழொட்டக் கூத்தரெனப் பேர்பெற்றார்
வீறுமவர் கீர்த்தி வியனுலகிற்—றேறுகலை

கற்றவரெல் லாமறிவார் கைக்கனிபோற் கல்லாத
மற்றவருங் கேள்வியுற்று வாழ்கின்றார்—எற்றிவர்தாம்

சற்றுமறிந் தாரிலையே தண்டமிழ்நூற் சிற்சிலதாம்
கற்றுமிது தேறாக் கருத்தென்னே—சொற்றவிவை

அன்றியுஞ்செங் குந்தர்புரா ணங்கோவை யூசலொடு
துன்றியபிள் ளைத்தமிழஞ் சொன்மாலை-நன்றிகொளும்

வாக்குலா வும்பரணி வாய்மைத் திருப்புகழ்சீர்
நோக்குலா வாதியவிந் நூலெல்லாம்—ஆக்கமிகு

செங்குந்த ரேகையிலைச் சீர்மரபார் செம்மைபெறு
செங்குந்த ரேமெய்ச் சிவகுலத்தார்—செங்குந்தர்
தாமே நவவீரர் சந்ததியார் செங்குந்தர்
தாமேநற் சேனைத் தலைவராம்—மாமேரு

வல்லானை யொத்ததிறல் வல்லானை வென்றுயர்ந்தார்
கல்லானை தின்னக் கரும்பளித்தே—எல்லாமும்

வல்லசித்த ராகி மதுரா புரியிலன்று
நல்வித்தை காட்டி நலஞ்சிறக்கத்—தில்லையிடை

நீண்ட கனக நிருத்தமணி மண்டபத்தே
தாண்டவஞ்செய் மாதேவர் தம்மிடத்தும்—ஈண்டுயிர்கள்

சேயாகி வைகத் திருவருளீந் தாள்பெரிய
தாயாகுஞ் சங்கரியார் தம்மிடத்தும்—ஓயாமல்
வானேத்து மாலயனை வாழத்தத் தம்வைப்பில்
தானேற்றுஞ் சண்முகனார் தம்மிடத்தும்—மான

வரம்பெற்றார் நல்ல வளம்பெற்றா ரென்றுந்
திரம்பெற்றார் வண்மைச் சிறப்போ—டுரம்பெற்றார்

மண்டலத்தை யாள்சோழ மன்னவர்த மன்னவனால்
தண்டிகையை முன்னே தரப்பெற்றார்—கொண்டல்செறி

தில்லைமா காளிதிருத் தேரோடச் செய்திட்ட
தொல்லைமர பாரென்னுஞ் சொற்பெற்றார்—இல்லையென்று

சொல்லாம லேற்பவர்க்குத் தூய்மையொடு கேட்டவைகள்
எல்லாம் வழங்கு மியல்புடையார்—எல்லாரும்
தீட்டுபுக ழேலேல சிங்கன்றன் செல்வநிலை
நாட்ட வுளத்தி னயந்தருளி—நீட்டுகின்ற

நற்றலைக ளீந்ததற்கு நாடி யவனல்கும்
பொற்றலைகள் வாங்காப் புகழுடையார்—கற்றவருக்

கேற்புடையா ரென்றே யிசைக்கின் றனவந்த
நூற்புடையா தேனுமொன்று நோக்கிலரே—ஏற்பவுரை

பொன்னேர் மதுரைப் புராணத்தை யேனுமிவர்
என்னே யறியா திருந்தனரே—மின்னேய்ந்த

கூர்வேற்கைப் பெம்மான்செங் குந்தர் தொழில்விளங்க
ஏர்வேட்கை யோடு மெழுந்தருளிப்—பேர்வேட்கை

பாவோடு கின்றதெனப் பாவனையிற் செய்திடுமப்
பாவோடு முற்சவமும் பார்த்திலரே—தூவாய்மை

நற்குணச்செங் குந்தர்செய்யு நல்ல நவவீரர்
உற்சவத்தைச் சற்று முணர்ந்திலரே—சிற்பரன்சேர்

கச்சிதிரு வானைக் காவருணை காளத்தி
இச்சைதருந் தில்லை யிடைமருதூர்—உச்சிதஞ்சேர்

மாகாளஞ் சாய்க்காடு மன்னும் விருத்தகிரி
சீகாழி வெண்காடு செங்காடு—வாகார்

மதுரைதிரு மாற்பேறு மாசகற் றையாறு
முதிர்புக ழாரூர் முதலாந்—துதிபெறுசீர்

மன்னுஞ் சிவதலத்தும் வாய்ந்தபரங் குன்றமொடு
பன்னு திருவே ரகம்பழனி—மின்னுமுகிற்

சென்னிமலை தோகைமலை சீரார் விராலிமலை
மன்னுதிருச் செங்கோடு வண்போரூர்—துன்னும்

தணிகா சலஞ்சீர் தருஞ்செந்தி லாதி
அணியார் முருக னமரும்—மணியார்

தலத்துஞ்செங் குந்தர் தமதுமா போங்கி
நிலத்துநெடு நா ணிலைக்க—நலத்துடனே

நித்தியநை மித்தியங்க ளேணைய மனங்களிப்பச்
சத்திய பத்தியொடு தாஞ்செய்து—நித்தியமும்

85 நாட்டுநவ வீரர் நற்குலத்தா ரென்பதனைக்
காட்டுகின்றார் மற்றிஃதுங் கண்டிலரே—நாட்டிலிவர்

வேதியர்க டம்மரபின் மேன்மைதனைக் கொள்ளிலவர்
தீதின்வலக் கையாசி யைப்புரிந்தே—ஓதரிய

பொல்லாத சாபம் பொருத்துவரென் றேவரசர்
மல்லார் மரபின் வளங்கொண்டால்—சொல்லாத

பாடுபட வைப்பரிந்தப் பாரி லிலைவணிகப்
பூடொன்று மில்லாமற் போமென்றே—தேடுபுகழ்க்

காராளர் தம்மரபின் காதையெம தென்னிலவர்
ஏரூரப் பூட்டி யிழுப்பரென்றே—போரார்ந்த

90 மெய்வழுத்துஞ் செட்டிமக்கள் மேன்மையெம தென்னிலவர்
வைது துலையால் வதைப்பரென்றே—மெய்தீர்

விருப்பாகக் கண்ணாளர் மேன்மை யெமதென்றால்
இருப்பாணி நாவிடுவா ரென்றே—தரைக்குள்வரு

தக்க திலவணிகர் தஞ்சரிதை கொள்ளிலவர்
செக்கினுளே வைத்துச் சிதைப்பரன்றி—மைக்கடல்சூழ்

தொல்லுலகிற் பாளையத்தார் தோத்திரஞ்செய் சீர்த்திபெறு
நல்லதிறற் சீல்நாய்க்க னாளையிலே—எல்லவர்க்கும்

அல்லல் விளைவித் ததுபோல வேயின்றுங்
கொல்லவகை தேடக் குறிப்பரென்றே—வல்லமைசேர்

95 வன்னியர்தந் தொன்மரபின் வண்மையெம தென்னிலவர்
சென்னி பிளவுபடச் செய்வரென்றே—உன்னியவவ்

சொன்மரபின் சீரொன்றுஞ் சூழ்ந்து கரவாமல்
தன்மைபெறுஞ் செங்குந்தர் தம்மரபின்-தொன்மைகொள்சீர்

தாங்கரந்தா ரம்மவிவர் தங்கரவை நோக்குங்கால்
ஈங்குநகைப் பெய்தாதார் யாருளரே—பாங்கின்முழுப்

பூசினிக்கா யைச்சோற்றிற் போதமறைத் தாரென்றே
காசினியிற் சொல்வார் கதையொன்று—மாசறவே

அக்கதைபோன் முக்கதையுண் டாமேற் பெருங்கரவாம்
இக்கதைக்குச் சற்றே யிணையாகும்—மிக்கபுகழ்க்

கைக்கொள ரிலாவிடத்திற் காதைசொலல் வேண்டுமெனுந்
தக்க மொழிசெவியிற் சார்ந்திலரே—ஒக்கவிவர்

சென்று விளங்கா றூல் செய்ததனுக் கோர்பரிசாய்
ஒன்றுறவே செங்குந்த ரொண்மரபின்—நன்றி

இலைவணிக ருக்கென் றெடுத்தோதக் கண்ட
நிலையுலகோர் நிட்டூர மாகச்—சொலவருமுன்

நண்டுகொழுத் தால்வளைக்கு ணன்ணு தெனுமதுபோற்
பண்டு புதுவைப் பதியதனுள்—அண்டும்

குமரப்பன் கோலக் கருணசெட்டி யென்னும்
அமரு மிலைவணிக ரானோர்—தமதுளத்தில்

பொங்கி மகிழ்ந்துசென்னைப் போற்றுமகா நாட்டாருந்
தங்கியதே சாயிகளுந் தாரணியில்—எங்களைப்போல்

மேன்மை பெறவறியார் வீண்டலைமை மேவியதெப்
பான்மையெனப் பின்விளைதற் பாராமல்—நோன்மை

அராமுடிமேற் றங்கு மிந்த வம்புவிக் காதாரத்
திராவிட தீபிகையிற் செப்பத்—தரா்தரந்தேர்

சென்னைப் பதிநாட்டார் சீறி யிவர்தம்மை
மன்னுஞ் சபையில் வருவித்துத்—துன்னுபொய்நூல்

செய்தீர் றுமரதற்குச் செம்மாந்து கூத்தாடிப்
பொய்தீரெஞ் சீர்மையெல்லாம் போற்றுது—வெய்தாகப்

பொங்கி வழிகின்றார் பொச்சாந்து மற்றவர்கள்
இங்கிவகை சொல்லற் கிடமும்மாற்—றங்கியதால்

என்னேநீர் கற்றதனை யெங்கொளித்தீ ரிவ்வாறு
கொன்னே கொடிமுடிந்து கொள்வதுதான்—சொன்னேம்
இயலன் றெனவுணர்ச்சி யெய்த வியம்புஞ்
செயல்கண்டு நெஞ்சந் தியங்கிப்—பயமடைந்து
மெய்யொப்பஞ் செய்வோம் வெகுளிவிடுக வென்றோர்
கையொப்ப மிட்டுக் கனம்பெற்றார்—பொய்யொப்பும்
பொர்த்தடைந்த வப்பரிசு போலே வரும்பரிசிங்
கெத்தனையோ வின்னுமவ ரெய்துவரென்—றுய்த்துரைக்க
ஐயுறவு மில்லையிவ ராலே யிவர்மரபு
மெய்யுறவு மில்லைநலம் வேறில்லை—கையறைந்து
நோவுற்றார் போலப்பொய்ந் நூல்செய் துறுங்கீர்த்தி
மேவுற்றா ரீதே வியப்பு.

## வாழ்த்து

பஃறொடைவெண்பா

சேனைத் தலைவரெனுஞ் செங்குந்தர் வேலரொடு
கானக் குறவள்ளி காதலனும்—வானிலுயர்
குந்தப் படையுங் கூறுநவ வீரர்களும்
இந்தப் புவியிலுளா ரின்படைய—சந்ததமும்
வாழி மிகப்பெரிதும் வண்மைகொடு வாழியவே
ஏழுலகமும் போற்ற வினிது.

## சேனைத்தலைவர்
## மரபுவிளக்கச்சூறாவளி முற்றியது

வேலுமயிலுந்துணை



காஞ்சி நாகலிங்க முனிவர் பதிப்பு

செங்குந்தவேலவர்

# திருக்கைவழக்கத்தந்தாதி

ஆறுமுகப்பாவலர்

திருத்தணிகை யாண்டவனைத் தேடி யடைநெஞ்சே
கருத்தணிந்து வாழ்வுறலாங் காண்.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# செங்குந்தவேலவர்
# திருக்கைவழக்கத்தந்தாதி

## தற்சிறப்புப்பாயிரம்

### வழிபடு கடவுள்

குறள்வெண்பா

செங்கோட்டில் வாழுமந்தச் செவ்வேள் திருவடியை
நங்கோட்டந் தீரவே நாடு.

### ஆக்கியோன் பெயர்

நேரிசைவெண்பா

செங்குந்த வேலர் திருக்கை வழக்கநூல்
எங்கும் பரிமளிக்க வேசெய்தான்—கொங்கில்
நிகரற்ற வாறுமுக னென்றுசொலும் வேளாண்
வகைவந்த நன்னு வலன். க

பாடபேதம்

செங்குந்த மன்னர் திருக்கை வழக்கநூல்
எங்கும் பரவ விசைத்திட்டான்—மங்கலஞ்சேர்
வீறுமுகப் பாவலர்கள் வீற்றிருந்த நற்சபையில்
ஆறுமுகப் பாவலவ னன்று. க

## முன்னூல்

### கட்டளைக்கலித்துறை

பேசுந் திருக்கை வழக்கப் பெருமையைப் பேருலகில்
வாச மலர்மதுத் தேனுண்ட வாறொக்கும் வண்கவியில்
ஆசு மதுரமுஞ் சித்ரவித் தார மவைதெரிந்து
தேசம் புகழுமுற் காந்த புராணத்திற் செய்தனனே. ௨

### காலம்

கலியுக நாலா யிரத்துத் தொள்ளாயிரங் கண்டபின்பு
வலிபெறுஞ் சர்வசித் தைப்பரி மாசம் வளர்மதியில்
சொலுநாட் சதய நவமியுந் திங்களுந் தோன்றுதினம்
பொலியுந் திருக்கை வழக்கந் தந்தாதி புகன்றதுவே. ௩

### களம்

புகழாந் தமிழ்க்கவி யாறு முகவன் புகலுமிந்நூல்
மகிழ்வா யுணர்ந்தவன் செங்குந்த மன்னன்வை யாபுரியாம்
திகழ்நாக மாமலைத் தென்கோதை மாநகர் சேர்கருணை
அகழங்கன் கையெழுத் தாணியி னலிங் கமைந்ததுவே. ௪

---

## நூல்

### விநாயகர்

கார்கொண்ட கைத்தலச் செங்குந்தர் தன்றிருக் கைவழக்கம்
சீர்கொண்ட சொல்லைக் கலித்துறைப் பாவினிற் செப்புதற்கு
ஏர்கொண்டகொம்பொன்று கையைந்து மாமுகத் தெந்தைபதம்
பேர்கொண்டு போற்றித் துதிப்பாங் கவித்திறம் பேசுதற்கே.

### சுப்பிரமணியர்

பேசும் பெருந்திறற் சூர்க்கூட்டம் பின்னிட வன்றொழித்துத்
தேசுந் திருமுதற் செல்வமும் பெற்றிடத் தேவர்தம்மை

வீசும் புகழொடு வைத்தாண்ட கூர்முனை வேலவர்தம்
காசும் பதாம்புய மல்லதுண் டோகாண் கவிதனக்கே. ௨

ஒன்பதின்மர்

கவிகேட் பவர்நல்ல காலர் யுதக்கொடி கைப்பிடித்தோர்
செவிகேட்கு மீட்டி யெழுபதுங் கேட்குந் தினந்தினமும்
புவிகேட்கு மந்தப் புரவலர் கைக்கொளப் போர்புரிந்தால்
அவிகேட்கும் வீர நவவீர தேவர்க ணற்குலமே. ௩

பிறப்பு

நற்குலஞ் செங்குந்தர் கச்சிப் பதிவளர் நாயகியாள்
பொற்சிலம் புற்பனர் மாமணிப் பாலகர் பூமிசையில்
விற்குலந் தாங்கிய திண்புயத் தார்குந்த வேற்கரத்தார்
சொற்குலத் தோர்க்குச் சிரந்தந்த கந்தன் துணைக்கையரே.

தொழில்

கையா லரனுக்குச் சீர்பாதந் தாங்கிக் கதிர்மகுடம்
மெய்யாய்வின் னாட்டுறை வேந்துக்குச் சூட்டி விறலசுரன்
பொய்யா முடிபறித் தேகிர வுஞ்சப் பொருப்பைவெட்டி
வைவேற்கைக் கொள்வர் திருக்கை வழக்கம் வளம்பெறவே.

கைவளம்

வளம்பெறு சென்னிச்சிம் மாசனங் கூத்தர்க்கு வைத்தசெங்கை
இளம்பிறை தண்ணுதற் காமாட்சி பாத மிறைஞ்சுசெங்கை
தளம்பெறு வெற்றிவல் லானைச் செயித்த தயிரியக்கை
உளங்களி கூர்ந்திரப் போர்க்கமு தையள்ளி யூட்டுங்கையே.

ஊட்டியி லீட்டியைப் பாய்ச்சிய செங்கையொன் னார்முதுகு
காட்டிட ரத்தத்திற் பாயாடை வீசிய கற்பகக்கை
நாட்டிக வீரசெங் குந்த குலாதிபர் தந்திரக்கை
ஏட்டி லெமனுக் கொருபொழு தோலை யெழுதுங்கையே. எ

எழுதும் பிரமனைக் குட்டித் தளையிட்ட விங்கிதக்கை
பழுதறு காளிகை யம்பாய்ப் பிடித்த பரவசக்கை
குழக னறுமுக வேலனைக் கூப்பிக்கொண் டாடிடுங்கை
மழையிற் றியாகந் தருங்குந்த வீரர் வரிசைக்கையே. அ

வரிசைத் திருக்கை வடிவேற் றரித்தகை மாமரச்சூர்
இருபிள வாக்கிக் குருகேந்து செங்கை யியலிந்திரன்
மருவயி ராணிக்கு மங்கலந் தந்தகை வானவர்கள்
அருஞ்சிறை நீக்கு நவவீர சூர ரருமைக்கையே. கூ

கையானை பின்வந்த கந்தன் சகோதரர் கைக்கொளுங்கை
மெய்யாம்பன் மாமுகச் சூரை வதைத்திட்ட வெற்றிச்செங்கை
செய்யாம்பல்வாய்முகச் சிங்கன் சிரந்துணித் திட்டசெங்கை
மெய்யாங் கவிக்குச் சிரந்தந்த செங்குந்தர் வெற்றிக்கையே.

வெற்றிச்சங் கந்தொனித் தண்டரைக் காக்கின்ற வீரச்செங்கை
பற்றலர் நெஞ்சந் திடுக்கிட வேலைப் பறித்தசெங்கை
ஒற்றைக் கவுரி யுயர்வீர வெண்டைய முற்றசெங்கை
கொற்றக் குடைப்பிடித் தாள்வீர வாகுவின் கோலக்கையே.

கோலஞ் சிறந்தகை கூர்வே லெடுத்தகை கொங்குதிகழ்
மாலை கடப்ப மலர்திண்புயம் பெற்ற வாரிசக்கை
சூலந் தரித்தகை சூர்மால் சிறந்த சுடர்மணிக்கை
ஞாலம் புரக்கு நவவீரர் செய்ய நளினக்கையே. கஉ

நளினத் திருக்கண்ணன் மாலையம் பாய்வைத்த நாமச்செங்கை
ஒளிவைத்த மேருவை வில்லாய் வளைத்த வுபாயச்செங்கை
நெளிவுற்ற சேடனை நாணாய் வகுத்த நிதானச்செங்கை
தெளிவுற்று முப்புரந் தீயிட்ட செங்குந்தர் சித்ரக்கையே.

சித்திரத் தக்கனின் யாகஞ் சிதைத்த செழுமலர்க்கை
முத்தமிழ் வாணர் கலிதீர்க்குஞ் செங்கை முகிழ்மலர்க்கை

நத்தணி ரம்பையி னற்றன பார நலங்கொளுங்கை
பத்திர வீர நவவீர தேவர் பவளக்கையே. ௧௪

பவளமும் பொன்னும் மணிபுனை முக்குடை பற்றுசெங்கை
தவளவெண் ணீறுபஞ் சாக்கர வாசகந் தரித்தசெங்கை
துவள விருகரங் கூப்பிக் குகனைத் தொழவருங்கை
எவள வெனினுங் கொடுத்துனுஞ் செங்குந்த ரின்பக்கையே.

இன்பச் சிலைமதன் கைக்கிணையான வினியசெங்கை
செம்பொற் றிகிரி யிரவலர்க் காகச் செயுஞ்செழுங்கை
தம்புரு வீணை மடவார் படிக்கத் தனந்தருங்கை
அம்புவி யாண்டகை செங்குந்த மன்னவ ராசைக்கையே.

ஆசைப் படுதற்குச் சத்திய முற்றகை யஞ்சலெனப்
பாசைத் தமிழ்ச்சொலும் பாவாணர் தங்கள் பதிநிதிக்கை
வாசக் கடம்ப மலர்க்கங் கணக்கை வழங்குசெங்கை
தேசம் புகழ்திருச் செங்குந்த மன்னவர் செம்மைக்கையே.

செம்மைச்சிந் தாமணி கற்பகத் தாருவுஞ் சேர்ந்தசெங்கை
வெம்மைக் குரூர மடவார் முன்விட்ட விசயச்செங்கை
தம்மைப் புகழும் புலவோர்க் கிருநிதி தந்தசெங்கை
இம்மைக்குட் கீர்த்தியை கைக்கொளுங் குந்த ரியல்புக்கையே.

இயலிசை நாடக முத்தமிழ் வாணருக் கீந்தசெங்கை
மயலுறும் ரூப மடவார் கனதன மல்குசெங்கை
புயலென வந்து புவிகாக்குஞ் செங்கை புரவலக்கை
செயலுயர் கச்சிப் பதிவீர வாகு திறமைக்கையே. ௧௫

திறங்காட்டு மிக்க திருக்காட்டுஞ் செங்கை செகமுழுதும்
அறங்காட்டுஞ் செங்கை யலங்காரச் செங்கை யடையலர்கள்
புறங்காட்டும் வீரவை வேல்காட்டும் வெற்றிப் புயபெலக்கை
நிறங்காட்டுஞ் செங்குந்த ராண்மையைக் காட்டு நிசங்கக்கையே.

சங்காழி தண்டந் தரித்த திருக்கை சரோருகக்கை
செங்கேழ் மழுப்படை தாங்கிய செங்கை செருச்செயுங்கை
மங்காத கீர்த்தி வளருங் கருணை மருமலர்க்கை
கொங்கார் கடம்பணி செங்குந்த வேலவர் கொற்றக்கையே.

கொற்றவர் தங்கட்கு வீரங்கொடுத்த குலிசச்செங்கை
நற்றமி ழோர்க்கு ரணபீடி கைவைத்து நாட்டியகை
அற்றவர் தங்களை யாதரித் தேத்தி யனந்தருங்கை
கற்றறி வாளர்செங் குந்தகுலேசர் கனகக்கையே. ௨௨

கனக வரையையுங் கைலாச வெற்பையுங் காத்தசெங்கை
தனதன் றனக்குப் பரியீந்த செங்கை தழலவர்க்குப்
புனிதத் தகர்தந்த பூங்கமலக்கை புவியதனை
அனிலனுக் கீந்த நவவீர செங்குந்த ராண்மைக்கையே.

ஆணாய்ப் பிறந்து புலிக்கொடி பெற்றிடு மம்புயக்கை
கோணா விடபக்கொடிக்குக் குடக்கொடி கொண்டசெங்கை
சேணாட் டமரர் செயம்பெறக் காத்தசிங் கக்கொடிக்கை
பூணாரம் பொற்கடம் புப்புயச் செங்குந்தர் பூசைக்கையே.

பூசை புரியுங்கை மாவடிக் கம்பரைப் போற்றுசெங்கை
தேசிகன் முத்துக் குமரனை வாழ்த்தித் தினந்தொழுங்கை
வாச மதுரையிற் சொக்கேசர் பாதம் வணங்குசெங்கை
பேசுந் தமிழறி செங்குந்த வீரர் பெருமைக்கையே. ௨௫

பெருமாள் திருச்சக் கரத்தைவிண் ணோட்டும் பிரபலக்கை
திருசூல வேலை மகிட னிடத்து செலுத்துசெங்கை
உருவா மயன்றலை யைந்தினி லொன்றுக் குருத்திரக்கை
தருவாம் புகழ்திருச் செங்குந்த வீரர் தருணக்கையே. ௨௪

தருவை வனத்திற் ககற்றிய செங்கை தயாமணியை
உருவென் றெடுத்துக் கொடுத்தது கல்லென் றுரைத்தசெங்கை

மருவா ரளகைப் பதியான் கொடையினை மாற்றுசெங்கை
ஒருமொழி வாசகர் செங்குந்த வீர ருபயக்கையே. உஎ

உபயக் கதிர்மதி சோணினுங் கோணு துதவுசெங்கை
அபயமென் றுரை யருகணைத் தாதரித் தாண்டசெங்கை
சபையி லெழுதிப் படித்துப்ர சங்கஞ்செய் சாதனக்கை
நிபயங்கொண் டாடிய செங்குந்த வீரர் நிதானக்கையே.

தான முதலன்ன தானங் கொடுக்குஞ் சமயச்செங்கை
கான முருத்திர வீணை யெடுத்துக் கழறுசெங்கை
மீன விழிச்சி கருணை கடாட்சத்தை வேண்டுசெங்கை
மோன மனத்து நவவீர வாகு முறைமைக்கையே. உகூ

முறைமுறை முப்பத் திரண்டறஞ் செய்து முடிக்குஞ்செங்கை
நிறைசவு பாக்கிய சந்தான மென்றும் நிலைத்தசெங்கை
பொறைவளர் மேன்மைப் புகழைப் படைத்த புதியசெங்கை
நெறிதவ றுதசெங் குந்த குலாதிபர் நேமிக்கையே. ௩0

நேமியைத் தியாக முரசா யறைந்து நிதிதருங்கை
பூமியைப் போன்று பொறையே படைத்த புனிதசெங்கை
சாமியை யர்ச்சித் தருட்கப்பர் சேவடி தாங்குசெங்கை
வாமியைப் பூசை புரியுஞ்செங் குந்தர் மதுரக்கையே.

மதுரைத் தமிழ்க்குத் தலையே கொடுத்த மகிமைச்செங்கை
எதிருற்ற பற்றலர் போய்ப்புறங் காட்ட விகல்புரிகை
சதுருக்குள் மேன்மை தழைத்தோங்கு செங்கை சமுகச்செங்கை
கதிர்மிக்க கச்சி நவவீர வாகு கமலக்கையே. ௩உ

கமலா லயப்பெண்ணை மாலுக்குத் தந்த கனகச்செங்கை
கமலாயுதனுக் கிரதியை மாமணங் கண்ட செங்கை
கமலாயி யெந்தை சடைமீ திருந்திடக் காட்டுசெங்கை
கமலாசனக் கச்சி நவவீரர் தன்திருக் கஞ்சக்கையே. ௩௩

கஞ்சனு மாலுமுன் காணுச் சிவபதங் கண்டசெங்கை
தஞ்சமென் றுரை யழைத்தா தரித்த தயாளச்செங்கை
செஞ்சொன் மதுர கவிமாலை வாங்குபொற் சீதளக்கை
பஞ்ச தருநிகர் செங்குந்த பார்த்திபர் பண்புக்கையே. ௩௪

பண்பார் தமிழ்க்கவிப் பாவல ரேற்கப் பணித்தசெங்கை
நண்பா னவர்க்கு நலமே கொடுத்து நயந்தருங்கை
உண்பார்க் கமுதள்ளி யூட்டிப் புசித்திட வுள்ளசெங்கை
திண்பார் புகழ்திருச் செங்குந்தர் வீரஞ் செலுத்துங்கையே.

செலுத்து மரசு திருக்கச்சி யாதிக்கந் தேடுசெங்கை
புலிக்கும் பசுவுக்கு மோர்துறை யாக்கினை போட்டசெங்கை
உலுத்தப் பசாசற்கு மார்பாணி வைக்கு முதாரச் செங்கை
பலிக்கும் புகழ்திருச் செங்குந்த வீரர் பருவக்கையே. ௩௬

பருவ முகிற்கு ளெழிலியை யொத்துப் பணைத்தசெங்கை
குருவைப் பிதாவைத் துணைத்தாள் பணிந்து குலாவுசெங்கை
அருமைப் புகழைத் திரிலோக மட்டு மளந்தசெங்கை
ஒருமைத் திடம்பெறுஞ் செங்குந்த வீர ருயர்ச்சிக்கையே.

உயர்ச்சித் திருக்கை யொளிர்தனு நேமி யுடையசெங்கை
செயத்தைப் பெறுங்கை தெய்வானை காந்தனடி சேவைசெய்கை
புயத்துக்கு வாகை மலர்சூட்டிச் சூரைப் பொருதசெங்கை
நயத்தைத் தருந்திருச் செங்குந்த வீரர் நலமைக்கையே.

நலமைப் புகழை நடத்துந் திருக்கை நண்ணார்கணெஞ்சம்
சலனப் படும்படி வேல்வாங்கு செங்கை சகங்கள்மெச்சத்
தலையைக் கொடுத்துத் தமிழேந்திக் கொண்ட தருமச்செங்கை
பலனைத் தருந்திருச் செங்குந்த வீரர் பனுவற்கையே. ௩௮

பனுவற் றமிழ்சொலும் பாவாணர் தம்மைப் படைத்தசெங்கை
மனுவுக்கு நீதி முறைவழு வாத மணியணிகை

தனுவுக்கு வீர விசயனைப் போலுஞ் சமர்செயுங்கை
புனிதத் திருக்கச்சி வீரசெங் குந்தர் புகழ்மைக்கையே.

புகழுந் தரும நெறியை நடாத்தும் புதுமைச்செங்கை
நெகிழ மருவலர் தங்களை வாட்ட நினைக்குஞ்செங்கை
துகளென வீந்து மலைபோலுங் கீர்த்தி துலங்குசெங்கை
அகளங்க வீர செங்குந்த குலாதிப ராதிக்கையே. ௬௧

ஆதி பராபரை யம்மைபொற் றாட்சிலம் பாண்டசெங்கை
சோதி வயிர வடிவேலிற் சூரைத் துரந்தசெங்கை
நீதி முறைமை வழுவா தறத்தை நிறுத்துசெங்கை
கோதி லருமைக் குலவீர செங்குந்தர் கூர்மைக்கையே.

கூர்மை திருக்கைக் குருகுத் துசங்கட்டிக் கொண்டசெங்கை
தார்பொற் கடம்பைப் புயமே படைத்த சமரசக்கை
பேர்பெற்ற கீர்த்திப் பிரதாபச் செங்கை பிரபலக்கை
சீர்கச்சி யாதிபர் செங்குந்த வேலவர் செல்வக்கையே. ௬௩

செல்வஞ் சிறந்த திருமால்பக் கத்தில் திகழ்ந்தசெங்கை
வில்வந் துளபஞ் சிவன்மால் பதத்தில் விரைக்குஞ்செங்கை
இல்வந்து நின்ற விரவலர்க் கன்ன மிடுஞ்செழுங்கை
நெல்வந்து முத்துதிர் கச்சியிற் செங்குந்தர் நேர்மைக்கையே.

நேரார் நடுங்க நெடுவே லெடுத்த நியமச்செங்கை
சூராதி சூரன் படசுத்த வீரந் துலங்குசெங்கை
பாராதி பார்த்திபர் செங்கோல் நடத்தும் படிசெயுங்கை
தாராளங் கீர்த்தி பெறும்வீர செங்குந்தர் தண்மைக்கையே.

தண்மைத் திருக்கைத் தயவே பொருந்துகை தாட்டிகக்கை
வெண்மைக் குடைகவித் திந்திர லோகம் விளங்குசெங்கை
பண்மிக்க செந்தமிழ்ப் பாமாலை சூடிய பங்கயக்கை
மண்ணுக்குள் கீர்த்தி பெறும்வீர செங்குந்தர் வாசக்கையே.

வாசா மகோசரம் பெற்றோங்கு செங்கை மகரச்செங்கை
பூசா பலம்பெறும் புண்ணியர் செங்கை புருடச்செங்கை
ஆசார யோச்ய வனுபூதி தங்கிய வற்புதக்கை
தேசாதி பர்புகழ் செங்குந்த மன்னவர் தீர்க்கக்கையே. ௬௭

தீர்க்கந் திருந்திய செந்தா மரையின்கை செம்பணிக்கை
ஏர்க்கு மிரவலர்க் கிட்டுண்டு கீர்த்தி யெடுத்தசெங்கை
கார்த்திகை சேயன் றுணைத்தாள் வணங்கிக் கதிபெறுங்கை
பார்க்கு ளுயர்திருச் செங்குந்தர் வீரர் பவிசுக்கையே. ௬௮

பவிசே பெருகும் பரிபூ ரணக்கை பரன்பரைக்கும்
அவிசே தருங்கை யணிமலர்ச் சாற்றலங் காரச்செங்கை
தவசே புரிகுவர் வேள்வி முடிக்கத் தசைதருங்கை
புவியே புகழ்திருச் செங்குந்தர் வீரம் பொருந்துகையே.

பொருந்தார் புரத்துக்கு வேல்வாங்கி விட்டுப் பொருதுசெங்கை
விருந்தா மிரவலர் தன்கலி தீர்க்கும் விவேகச்செங்கை
அருந்தாது பூத்த கடம்பணி திண்புயத் தாண்மைச்செங்கை
பெருந்தாரை கீர்த்திப் பிரதாபச் செங்குந்தர்பெற்றிக்கையே

பெற்றத் தானுமை பாதச் சிலம்பிற் பிறந்தசெங்கை
கற்றோர் தமது கலிநோ யகற்றுங் கருணைச்செங்கை
பற்றல ராவி பதைக்கப் பாசு படைத்தசெங்கை
உற்றவர் செங்குந்த ராண்மைபெற்றிடு முதன்மைக்கையே.

உண்ணும் பொழுது விருந்தோ டுணுங்கை யுவகைச்செங்கை
பண்ணுந் தமிழ்வலர் தன்கலி மாற்றிய பைந்தருக்கை
எண்ணு மெழுத்துந் தெரிந்தே யெழுது மினியசெங்கை
மண்ணுவிண் ணும்புகழ் செங்குந்த வீரர் வலிமைக்கையே.

வலிமை யசுரன் முடிசாய வேல்தொட்ட வல்லமைக்கை
புலமை செலுத்துங் கவியோர்க்கு வேண பொருள்தருங்கை

நிலமை யரிச்சந்த்ரன் மெய்போலுங் கீர்த்தி நிலைத்தசெங்கை
தலைமை நகர்கச்சி வீர வாகுவின் தனதுகையே. ௫௩

தனக்கோர் நிகரில்லை யென்றவை வேல்கொண்ட சந்தனக்கை
சினக்கோப மொன்னலர் மீதேசெலுத்துந் திறமைச்செங்கை
புனக்கோ குறவள்ளி காந்த னிருசரண் போற்றுசெங்கை
மனக்கே டிலாதசீர் செங்குந்த வீரர் வளமைக்கையே. ௫௪

வளமை பொருந்தி வளர்தொண்டை மண்டல மன்னுசெங்கை
களமே யரிந்து சிரந்தமிழ்க் கீந்த கமலச்செங்கை
எழுதா மறையுணர்ந் தின்பச் சிவானந்த மேற்றசெங்கை
மொழிமா றிலாதசீர் செங்குந்த வீரர் முதன்மைக்கையே.

முதலிய ரென்று மழுவேந்து செங்கை முனையியற்கை
புதல்வரைத் தேவைப் புகழ்ந்துகொண் டாடிய பூமலர்க்கை
அதல விதல தராதல மேழு மளந்த செங்கை
மதலை வளந்திகழ் கச்சியில் செங்குந்தர் வண்மைக்கையே.

வண்ண வுலாமடல் தூதென்று பாவலர் வாழ்த்துசெங்கை
நண்ணலர் சிந்தை நடுங்க வைவேலினை நாட்டுசெங்கை
அண்ணல் திருக்கச்சி யேகம்பர் செம்பொ னடிதொழுங்கை
புண்ணியவீர செங்குந்த குலேசர் பொறுமைக்கையே. ௫௭

பொறுமைத் தவமுயர் வேத புராணம் பொருந்துசெங்கை
சிறுமைக் கவியைப் புலவோர்க் ககற்றுந் தினகரக்கை
சருவ பிராணிகள் தன்னுயிர் போலுந் தயாபரக்கை
கிருபைக் கடல்திருச் செங்குந்த வீரர் கிளர்ச்சிக்கையே.

கிளைக்கு மிரவலர் தங்கட்கு மீந்த கெணிதச்செங்கை
துளைக்குங் கதிர்வடி வேலா லசுரைத் தொலைத்தசெங்கை
முளைக்கும் பொழுதசற் கீர்த்திவித் தாய்வந்த மோனச்செங்கை
பிளைக்கும் பிரபல வீரசெங் குந்தர் பெருமைக்கையே.

பெருந்திரு வுற்றகை பேதமை யற்ற பிரமச்செங்கை
தருந்திரு வட்டச் சவுபாக் கியம்பெற்ற சம்ப்ரமக்கை
குருந்திருந் தோங்குந் திருப்பாண்டிச் சொக்கரைக் கூப்புசெங்கை
விருந்திருந் தன்னம் புசிக்குஞ் செங்குந்தர் விளங்குங்கையே.

விளங்குங் குருகுத் துசமயில் விற்படை வேண்டுசெங்கை
களங்க மகற்றிக் கனவீர வாகு கதிர்த்தசெங்கை
கொளுங்கனி முத்தமிழ் கூர்வாணர் தன்கலி கோபச்செங்கை
இளங்கும ரேசர் நவவீர செங்குந்த ரீட்டிக்கையே. ௬௧

ஈட்டி யெழுபதும் பாமாலை தங்கு மியற்கைச்செங்கை
வேட்டால் முதற்பஞ்ச தானங் கொடுக்கும் விரைமலர்க்கை
காட்டகந் தன்னையு நாடாக்குஞ் செங்கை கதிர்மணிக்கை
பாட்டியல் பேசிய செங்குந்த வீரர் பதுமக்கையே.

பதினொரு கோடி யுருத்திர வீரம் படைத்தசெங்கை
பதினிரு வான வயிரவர் சூலம் படைத்தநற்கை
பதினிரு செங்கைக் குமரனைப் போற்றிப் பணிந்தசெங்கை
பதினிதி கச்சி நவவீர செங்குந்தர் பட்சக்கையே. ௬௨

பட்சணஞ் சாட்சிப் பயத்தோ டருந்தும் பரிமளக்கை
தட்சகன் யாகஞ் செகுத்துக் கைலையைச் சார்ந்தசெங்கை
புட்சின மேறுந் திருமாற் கடுமை புரிந்தசெங்கை
எட்சணி வாழ்கச்சி வீரசெங் குந்த ரிணையிற்கையே.

இணக்க மறிந்திணங் கென்றேசொல் வைத்தகை யாழிசைக்கை
பிணக்கை விலக்கப் பெருவே லெடுத்த பெலமுளக்கை
கணக்கு வகைதொகை காணரி தாம்புகழ் கைக்கொளுங்கை
துணைக்கு ளதிக துணைவீர செங்குந்தர் சுத்தக்கையே.

சுத்த சிவசைவ சண்முகர் பின்பிறந் தோங்குசெங்கை
சித்தி யறுபத்து நான்கும் புரிந்த சிரவணக்கை

எத்திசை கீர்த்தி விளங்குந் திருக்கை யிதந்தருங்கை
பத்தி தருங்கச்சி வீரசெங் குந்தர் பருவக்கையே. ௬௬

பருக்கையில் வச்சிரம் வைடூரி யத்தைப் படைத்த செங்கை
குருக்கிளர் மாணிக்கங் கோமே தகங்குளிர் நீலச்செங்கை
செருச்செயும் போது மருவலர் பச்சைத் திறஞ்செயுங்கை
மருப்புகள் முத்து மணியணி குந்தர் மலர்ப்பொன்கையே.

மலர்ப்பொன்னை மார்பகஞ் சேர்க்குந் திருக்கை வடிவுளக்கை
அலர்க்கடம் பாரம் புயமீ தணியு மமுதச்செங்கை
பலர்க்குப கார்ம் படைத்த திருக்கை பரவசக்கை
இலக்கம் பொருந்து நவவீர செங்குந்த ரிச்சைக்கையே.

இச்சகம் பாடிய லோபரைப் பாடா திறுத்தசெங்கை
பிச்சுத் தமிழர் தலையரி கூத்தன் பிரபலக்கை
பச்சைப் பிடிமடப் பாவையர் லீலை பழகுசெங்கை
உச்சிதக் கீர்த்தி யுடையார்செங் குந்த ரூரிமைக்கையே.

உருமெனச் சீறி மருவார்முன் வேலினை யோங்குசெங்கை
தருவெனத் தோன்றித் தரணி தழைக்கத் தயைபுரிகை
முருகனைக் கச்சி முதலியைக் கூப்பி முடியுயர்கை
அருகனைப் போலுஞ் சுடர்வீசு குந்த ரருணக்கையே.

அருணா சலங்கச்சி யம்பலங் காசி யருள்பெறுங்கை
பெருநா வலர்க்குப் புயல்போற் கனகத்தைப்பெய்தசெங்கை
கருணா கரக்கை கதிர்வேல் தரித்த கமலச்செங்கை
தருணாதி வீர செங்குந்த குலேசர் தடக்கைக்கையே. ௭௧

தடக்கைக் கரிமுகத் தானுக்குக் குட்டுத் தலைக்கொளுங்கை
படைக்கே வயிர வடிவேற் பிடித்த பராக்ரமக்கை
துடைக்குந் திதிசிட்டி நிக்ர வனுக்ரகந் தோன்றுசெங்கை
நடக்கும் பெரும்புகழ் செங்குந்த வீரர்கள் ஞானக்கையே.

ஞானஞ் சரியை கிரியைநல் யோக நடத்துசெங்கை
மானமபி மானம் வளர்க்குந் திருக்கை வான்முறைக்கை
தேனபி டேகந் திருக்கம்ப நாதற்குச் செய்திடுங்கை
தான தருமங் காட்டிடுஞ் செங்குந்தர் தமதுகையே. ௭௩

தமர்க்கு மிரவலர் தங்கட்குங் கேட்ட தனந்தருங்கை
அமர்க்கு ளடையலர் வெப்பு மதிரி யயில்தொடுங்கை
சுமர்க்கு ளெறிந்த மணிபோற் பவத்தைக் கடிந்தசெங்கை
சுமக்கும் பெரும்புகழ் செங்குந்த வீரர் துணிவுக்கையே.

துணிவையுங் காட்சித் துரைமாதர் பாலிற் றொடங்குசெங்கை
மணிபெயுஞ் செங்கை மழைபோலுஞ் செங்கை மலைக்குகன்றாள்
பணிசெயுஞ் செங்கைப் பகைவே ரறுக்கப் படைதொடுங்கை
அணிமெயிற் பூதி யணியுஞ் செங்குந்த ரழகுக்கையே. ௭௫

அழகா பரண மணியுந் திருக்கை யருந்துதிகண்
டழகா மென்றெண்ணுவ ரென்றே கவிகை யணிமணிக்கை
அழகார் மதனை யுருவிலி யாமென் றகற்றுசெங்கை
அழகான கச்சி நவவீர செங்குந்த ரன்புக்கையே. ௭௬

அன்பார்ந்த மின்வலர்க் காதாரச் செங்கை யடையலர்கள்
பின்பார்த்து மேகப் பெருவேல் தொடுக்கும் பெருமைச்செங்கை
தன்பாரம் பாரமென் றெண்ணமை லேனையைத் தாங்குசெங்கை
பொன்பார் புகழ்திருச் செங்குந்த வீரர் புனிதக்கையே.

புனுகு களபக் குளம்பு சிந்தூரமும் புனைதிருக்கை
தனுகு மெளியர் நலியாமல் காத்து நலந்தருங்கை
அனுகுல வீடு வறம்பொரு ளின்ப மமைந்தசெங்கை
தனுகுண பேதமொன் றில்லாத செங்குந்தர் சாந்தக்கையே.

சாந்து கத்தூரி பரிமளம் பூசுந் தடம்புயக்கை
வேந்த ரெதிர்நின்று வீரஞ் செலுத்தும் விசயச்செங்கை

ஆய்ந்த புலவர் கலிநோ யகற்றி யனந்தருங்கை
மாந்தரெனின்மிக்க செங்குந்த வீரர் மணச்செங்கையே.

மணநாறுஞ் சண்பகஞ் சாதி மருவு மணந்தசெங்கை
குணவீறு கொள்ளு மருவலர் வில்லைக் குனித்த செங்கை
பணமாறு கொண்டிட்ட லோபரைக் காயும் பரசுச்செங்கை
துணைவீர வாகு சுதராஞ்செங் குந்தர் சுமுகக்கையே.

முகம்பார்த் திரப்பவர் கைபார்த்துக் காக்கு முறைமைச்செங்கை
அகம்பார்க்குஞ் சிந்தை யடையலர் வீரை யடக்குசெங்கை
சுகம்போற் குயின்மொழி மங்கையர்க் கின்பத் தொழிற்சொலுங்கை
செகம்போற்றுஞ் செங்குந்தர் தாடாண்மை பற்றிய செல்வக்கையே.

செல்வந் துதிக்குங் கறைமிடற் றன்கழல் தேடுசெங்கை
சொல்வந் துதிக்குந் தமிழ்வாணர்க் கன்பு துலங்குசெங்கை
மல்வந் துதிக்கில் வடிவேலெடுக்கும் வலிமைச்செங்கை
கொல்வந்த பேரைக் குணமா யணைக்குங் குந்தர்கையே.

குந்த மெடுத்தசு ரரைக் கடிந்த கொடேரச்செங்கை
சிந்து கவிப்பிர சங்க விநோதஞ் சிறந்தசெங்கை
கொந்தலர் போற்சக டம்பார்த் தடம்புயங் கொண்டசெங்கை
சந்தத வீர செங்குந்த குலேசர் தருமக்கையே. ௮௩

தருமக் கருத்த ரெனப்புக ழோங்குந் தயாளச்செங்கை
உருமைக் கவிஞர் கொடுங்கலி தீர்க்கு முதாரச்செங்கை
செருவிற் பிறருயிர் தென்றிசைக் கோனிடஞ் சேர்த்தசெங்கை
மருவுற்ற கீர்த்தி நவவீர வாகு வனசக்கையே. ௮௪

வனசத் திரரிஷி மார்க்கண்டன் வேள்வி வளர்க்குஞ்செங்கை
சொனசத் தியமொழி மாறா விரதச் சுகிர்தச்செங்கை
கனசத்தி யம்புதொட் டொன்னார் சிரத்தைக் கலக்குசெங்கை
தனசத்தி மிக்க நவவீர வாகு தலைமைக்கையே. ௮௫

## ௩௨௮ செங்குந்தவேலவர்

தலமிக்க கச்சி தருமகர்த் தாப்பணி தாங்குசெங்கை
புல்மைத் தமிழ்வல ரென்னாளும் வாழ்த்திப் புகழ்ந்தசெங்கை
கலகச் செருக்கண்டு திண்புய வீரங் கதித்தசெங்கை
நலமுற்ற செங்குந்த வேலவர் கீர்த்தி நடத்துங்கையே.

நடனப் பரமன் கயிலாயங் காத்த நளினச்செங்கை
திடனத் தருங்கம்பை மாநதி வாய்த்தவஞ் செய்செழுங்கை
தொடனத் தொடும்படி நற்றொண்டை நாளுந் தொடர்ந்தசெங்கை
இடனத் தியகச்சி வேல்வீர வாகு வினியகையே. ௮௭

இனிது கொடுக்குங் கடம்பார மார்பி னிசைத்தசெங்கை
புனித மரகத மயூர வான்பரி பூட்டுசெங்கை
தனுவ தெடுத்துத் தடத்தந் திகந்த சதுரச்செங்கை
கனகக் குருகு த்வசவீர வாகு கருணைக்கையே. ௮௮

கருணை கலையன் முரைசே யறையுங் கமலச்செங்கை
தருணாதி யாக முரசு புலவர்குச் சாற்றுசெங்கை
அருணேசர் கம்பர் திருவெழுத் தஞ்சுசொல் லானசெக்கை
பொருணேசன் கீர்த்தி புகழ்தேறுஞ் செங்குந்தர் பொற்புக்கையே.

பொற்பலங் கார மனமே சிறந்து புகழ்தருங்கை
கற்பலங்கார மடந்தயர்க் கேயெழில் காட்டுசெங்கை
சற்பலங் காரத் திருக்கம்பர் மாவடி சார்ந்தசெங்கை
விற்பலங் கற்ற செங்குந்த குலேசர் விருமைக்கையே. ௯௦

விருது ரணசுத்த வீரர்கண் டீரங்கள் விற்றடக்கை
மருது தடித்தவர் தம்மைச் செயங்கொண்டு வளருசெங்கை
எருது நடத்திய வேகம்ப நாதர்க் கிணங்குசெங்கை
கருதுங் கவிஞரைக் காக்குஞ்செங் குந்தர் கனிசக்கையே.

கனிபால்கற் கண்டு மொழிமாதர்க் கின்பக் கலவிச்செங்கை
பனிபோலுஞ் சீத பரிமள குங்குமப் பங்கையக்கை

தொனிவீரர் வெற்றி முரசே முழக்கிய சுந்தரக்கை
இனிதே கொடுக்கு நவவீர வாகு வியற்கைக்கையே. ௬௨

இயக்கரமர ரெழிலிந்த்ர போக மிலங்குசெங்கை
கயக்க நமதெனுங் காமாட்சி பொற்பதம் கண்டசெங்கை
செயக்கங் கணக்கை திரிலோக மட்டுந் தியாகசெங்கை
நயக்கும் புகழ்திருச் செங்குந்த வீரர்கள் நன்றிக்கையே.

நன்றி மறுதகை நானிலங் கீர்த்தி நடாத்துசெங்கை
குன்றுத பாக்கியங் கூடுந் திருக்கை குணந்தருங்கை
என்றுந் திருக்கச்சி யேகாம் பரர்தானை யேத்துசெங்கை
மன்றிலோ யாதிருச் செங்குந்த வீரர் மணிச்செங்கையே.

செங்காந்த ளங்கை செழுங்களிம் பாக்கிய தேசிகக்கை
மங்காத கீர்த்தியும் மாளாக்கருணையும் வைத்தசெங்கை
சங்கீத வீணை சரமண் டலமிசை தந்திருக்கை
துங்காபி ராம செங்குந்த குலாதிபர் தூய்மைக்கையே.

தூய நெறிவர தோலாத வீரந் தொடங்குசெங்கை
நேய மிரவலர் தன்மீது வைத்த நிலமைச்செங்கை
தாயைப் பிதாக்குரு தெய்வத்தை வந்தனை சாற்றுசெங்கை
சீயத்தை யொத்த திறலோர்செங்குந்தர் செம்பொற்கையே.

செம்பொற் சிலம்பி லுநித்த திருக்கை செந்தாமரைக்கை
கும்பக் கனதன மின்னார் மணங்கள் குறித்தசெங்கை
தும்பை தொடையணி கம்பர் சரணந் துதித்தசெங்கை
அம்புக்கை யான செங்குந்த குலாதிப ருருமைக்கையே.

அரும்பொரு ளின்ப வறந்தழைத் தோங்கி யருள்பெறுங்கை
வரும்பொரு ளென்று மருகாது நாளும் வரையரிக்கை
சுரும்புகள் பாடும் கடப்பை மலர்ப்புயன் தோன்றுசெங்கை
பெரும்புக ழாயர்செங் குந்த குலேசர் பெருமைக்கையே.

## செங்குந்தவேலவர்
## திருக்கைவழக்கத்தந்தாதி

பெருந்தவத் தோனைப் பிரானை முருகனைப் பேணுசெங்கை
திருந்துவை வேற்கொண்டு சீர்கச்சி யாண்மை செலுத்துசெங்கை
விருந்து தமிழ்வலர்க் கொண்டாட வேண்டி விரும்புசெங்கை
தருந்தரு வாகுஞ்செங் குந்த குலாதிபர் தங்கள்கையே.

தங்கு மரும்பொருள் தாளான்மை கீர்த்தி தழைத்தசெங்கை
திங்கள் முடிப்பரன் காமாட்சி யன்பு சிறந்தசெங்கை
மங்களந் தெய்வப் புலவோர் வழுத்த மகிழ்திருக்கை
கங்கா தரன்சுதர் செங்குந்தர் கார்கொண்ட கைத்தலமே.

### வாழ்த்து

கார்வாழி வாழி கலைமகள் வாழி கனகமயில்
கூர்வேலுஞ் சேவற் கொடிவாழி வாழி குகனிருதாள்
சீர்வாழி வாழி தெய்வயானை வள்ளி சிறந்தகச்சி
யூர்வாழி செங்குந்த வேலவர் வாழி யுலகெங்குமே.

## செங்குந்தவேலவர்
## திருக்கைவழக்கத்தந்தாதி முற்றியது

வேலுமயிலுந்துணை



அனுபந்தம்-எ

# செங்குந்தகுல்மாட்சி

தி. க. ச. சபாபதி முதலியார்

நாதங் கடந்த நலம்பெற வேண்டுவையேல்
மூதண்ட வெற்படைய முந்து.

உ
சிவமயம்
முருகக்கடவுள் துணை

# செங்குந்தகுலமாட்சி

## தோகுத்தானுரை

பலநூலைக் காட்டப் பருவமிது வல்ல
சிலநூலைக் காட்டுவாந் தேர்ந்து.

## மதுரைப்புராணம்

சாம்பவி சிலம்பிற் பூத்த சாயலாம் மணியின் மாதர்
சாம்பவன் கருணை யாலே தந்தசெங் குந்த மாக்கள்
தேம்பொலி வீதி தன்னிற் றிருவல கியற்று வோர்கள்
வேம்பலர் மன்னன் போல மேதினி பிறந்து வாழ்வார். க

உலத்தினிற் புட்ப ராக மொளியினிற் கதிரா மைந்து
புலத்தினிற் கருங்கண் வாவிப் பூவினிற் கமலஞ் சொல்லும்
குலத்தினிற் செய்ய குந்தங் குன்றினின் மேருக் குன்றம்
தலத்தினின் மதுரை மேலாந் தரமெனுந் தகைமத் தம்மா.

கோக்களை மின்ன ஞானைத் தவத்தரைக் குலத்தில் வேத
மாக்களைச் சிசுவைக் கொன்றுன் செய்ந்நன்றி மறந்தானசான்
ஆக்கம தழித்தான் பாவ மனைத்துஞ்செங் குந்தர் வீதி
தேக்கிடப் பிச்சை வாங்கி யுண்டிடத் தீரு மன்றே. ௩

## அம்மானை

மாவடியி லேவிளங்கும் வல்லிகா மாட்சித்தாய்
சேவடியி லேயுதித்தார் செங்குந்த ரம்மானை

சேவடியி லேயுதித்தார் செங்குந்த ராமாயில்
பாவடியி னின்று பசப்புவதே னம்மானே
பசித்தவருக் கன்னமிடப் பசப்பாரோ வம்மானே. ௪

### போகர் ஜாதியுர்பத்திநூல்

பண்பான புலிப்பாணி மைந்த கேளு
பகருகின்றேன் நவவீரர் வருக்கந் தானே
தண்பான சிவசத்தி சிலம்பிற் றோன்றி
தருவாக நந்திகணத் தவரு மாகி
திண்பான செங்குந்தர் வமிச மானோர்
திடமுள்ள வளவகுல மணமே சூட்டி
எண்பான சகத்திர நூற் றெண்பான் பாலர்
இணங்கியே யுலகிலர சியற்றி னாரே. ரு

### கருவூரார் கடைக்காண்டம்

சாதியா மின்னமொரு மார்க்கங் கேளு
சாங்கமுட னேவுரைப்பன் மைந்தா வின்று
ஆதியாம் வீரகே சரியாந் தேவர்
அன்பான பரிதிகுல சாதி யாகும்
நீதியாஞ் சேனைக்குத் தலைவ ரென்று
நிட்களங்க மாகவல்லோ நூல்க டோறும்
பாதியாஞ் சடையணிந்த தம்பி ரானும்
பாடிவைத்த நூல்தனிலே பார்க்க லாமே. சா

### அகத்தியர் மரபுநூல்

பாரப்பா வின்னமொரு செய்தி கேளு
பண்பான புலத்தியனே பாங்கு ளோனே
சாரப்பா சண்முகருக் கிளையோ ரான
சருவாக சத்தியிட புதல்வ ரையா

தாரப்பா நந்திகணத் தவருமாகித்
தருவாக நவவீரர் மரபில் தோன்றி
வாரப்பா வீரசிங்க ராயன் தானும்
வளமான வீரசிங்கா சனத்தோன் பாரே. எ

அகத்தியர் மரபு விளக்கம்

என்னவே யின்னமொரு வழியுஞ் சொல்வேன்
எழிலான கண்மணியே யிசைவல் லோனே
நன்னவே நவவீரர் மரபு தானும்
நாங்கண்ட நாற்றிசையுங் கீர்த்தி யோங்கக்
கன்னவே கந்தவேள் கருணை யாலே
கனமான மனுகுலத்தில் கலந்த தாகும்
அன்னவே முசுகுந்தர்க் கவனி தன்னில்
அன்பாய்ச்சா மந்திரரா யிருந்தார் பாரே. அ

தேரையர் மரபு விளக்கம்

ஆமப்பா வின்ன மொரு வழியுஞ் சொல்வேன்
அப்பனே செங்குந்தர் மரபைக் கேளு
தாமப்பா தரணிதனில் மனுமாந் தாதா
தருவாகச் சந்ததியில் வந்து தோன்றிச்
சாமப்பா நவவீர தேவர் தானும்
சார்வாகப் படைத்துணையா யவனி மீதில்
காமப்பா கந்தவேட் சொல்லி னின்று
கனமாய்ச்சா மந்திராய் நின்றார் தாமே. ௯

கொங்கணர் நந்தீசர் மரபு

மறைவான நந்தீசர் மரபே தென்றால்
மார்க்கமுள செங்குந்த குலமே யாகும்
நறைவான நவகன்னி புதல்வ ராகும்
நவவீர வாகுவே முதலா யுள்ளோர்

தறைதனிலே க்ஷத்திரியக் கூட்டத் துற்றுத்
தருவாக வமிசத்தின் கிளையைக் கண்டு
உறைவாக முசுமுகனும் மன்ன னுக்கும்
உண்மையுள துணைவராய் நின்றார் காணே. ௧0

## கடம்பவனபுராணம்

மாலயன் காணொ ணாத வடிவனுஞ் சொக்க நாதன்
பாலரா மொன்பான் வீரர் பார்ப்பதி சிலம்பில் வந்தோர்
சூலமும் வேலும் கொண்டு சூர்க்கிளை தடிந்து பின்னர்
சீலமே மிக்க நந்தஞ் செங்குந்தர் திறத்தைச் சொல்வாம்.

சதுர்மறை நாலி லில்லை சாத்திர மாறி லில்லை
பதினெண்பு ராணத் தில்லை பத்திரண் டெட்டி லில்லை
முதலியர் மூவர் சொல்லின் முனிமொழி குறளி லில்லை
உயிர்வதை செய்வ துண்ணல் செங்குந்தர் மரபுக் கில்லை. ௧௨

கைக்கோளர் தமக்கு நிந்தை கனவிடை செய்த பேர்கள்
மக்களு மாடுந் தோற்று மனைவியும் பொருளுந் தோற்றுக்
கைக்குளே யன்ன மேந்திக் காட்டக மெங்குஞ் சுற்றித்
தக்கபேர் நமனுக் காளாய்த் தாம்நர கெய்து வாரே. ௧௩

காதிலே யாறு கட்டிக் கையிலே வேலும் வாங்கி
வாதுசே ரசுரர்மாள வந்ததோர் வீர வாகு
ஆதியு மந்த மில்லா வானுக்குக் குருக்க ளான
சோதியா முருகன் பின்னே தோன்றிய குந்த னமே. ௧௪

## ஸ்ரீ கந்தபுராணம்

முந்தவே கயிலை வெற்பின் முயலு மெய்க் காவ லாளர்
கந்தர்கைக் கோள ராகிக் கார்நிறத் தசுரரைச் செற்றுச்
சுந்தர முசுகுந் தற்குச் சுற்றமு மமைச்சு மான
குந்தர்க ளுறையும் வீதித் தன்மையைக் கூறு வோமால்.

திருவாரூர்லீலை

கண்டிடுந் தவங்க ளெல்லாங் கந்தவே டனக்கே யாக்கி
எண்டருஞ் சிறப்பு வாய்ந்த வியன்முசு குந்த மன்னன்
மண்டனிற் கொண்டு வந்த மாப்பெரும் வீர ரொன்பான்
கண்டியர் தம்மை முந்திக் கமலையில் வைத்தான் மாதோ.

இப்பெருங் கார ணத்தா லெழினவ வீரர் கூட்டம்
செப்பருஞ் சோழ நாட்டுத் திருப்பெயர் முதலிற் பெற்றார்
தப்பருஞ் சீர்த்தி கொண்ட சைவசெங் குந்தர் மேன்மை
எப்படி யுரைப்ப தாகு மென்றனன் சூதன் றானே. ௧௭

வாழ்த்து

சோணாட்டு முதலியெனச் சொலவந்த
செங்குந்தத் தொகுதி வாழி
நாணாளு மவர்செய்த நற்றரும
மித்தரைமே னன்கு வாழி
காணாத காட்சியெலாங் காட்டியருள்
கந்தப்பன் கருணை வாழி
மாணாரும் வடிவேலு மயிலுமிரு
மாதர்களும் வாழி வாழி. ௧௮

அனுபந்த முற்றியது

செங்குந்தர் பிரபந்தத்திரட்டு முடிந்தது

வேலுமயிலுந்துணை

செங்குந்தப் படையோன் திருவடிவாழ்க

## திருத்தம்

### களிப்பொருபது

அம்பிகாபதி

—விந்தைத்

தலைதந்தார் பாடலுக்குத் தாமென்றும் பூவிற்
கலைதந்தார் மக்களுக்குக் காண். என்றும்,

அஞ்சனாக்ஷி

வாழிசக்ர வர்த்திப்பேர் வாய்ந்தவொட்டக் கூத்தர்புவி
என்றும்,

சைவாசாரியர்

—வாழி

கொலைகளவு கட்காமங் கோள்விலகி மக்கள்
உலைவில்லா வின்ப முகந்து. என்றும்

திருத்திக்கொள்க.

---